# ஆற்றங்கரையில் ஞானம்



எஸ். கிருஷ்ணசந்த் சோர்டியா

# ஆற்றங்கரையில் ஞானம்

எஸ். கிருஷ்ணசந்த் சோர்டியா
பொதுச்செயலாளர், ஜைன இயல் ஆய்வுக் கழகம்
சென்னை - 600 079

விற்பனை உரிமை ;

பாரி நிலையம்
184, பிரகாசம் சாலை
சென்னை 600 108

# அணிந்துரை

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,

தமிழ்மொழித் துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக்கழகம்.

'ஜைனம் ஒரு சமயம் அன்று: அஃது ஓர் உயர்ந்த வாழ்க்கை நெறி'' என்ற அடிப்படையில் நண்பர் திரு. எஸ் கிருஷ்ணசந்த் சோர்டியா '**ஆற்றங்கரையில் ஞானம்**' என்ற இந்த நூலினை உருவாக்கியிருக்கின்றார். சாதாரண மாகப் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே உரையாடலின் இடையிடையே திருக்குறட்பாக்களை மேற்கோள் காட்டித் தம் கருத்துகளை விளக்கித் '**திருக்குறள் சேட்**' என்று சிறப்பாக அழைக்கப் பெறும் நண்பர் அவர்கள், இந்த நூலினை எழுதியதன் மூலம் ஓர் உயர்ந்த பணி யினைப் பிறர் நெஞ்சு கொள்ளுமாறு செய்து முடித்துள் ளார் என்று நெஞ்சாரக் கூறுவேன்.

மகாவீரர் என்னும் ஒப்பற்ற பெரு மனிதரைப் பற்றி— இருபத்து நான்காவது தீர்த்தங்கரரைப் பற்றி முதல் கட்டுரை அமைந்துள்ளது. 'ஆற்றங்கரையில் ஞானம்' எனும் இக்கட்டுரை, ''துன்பங்களுக்குக் காரணம் ஆசை தான். ஆசைகளை விட்டு ஒழிக்கும் வரை நம்மைத் துன்பங்கள் தொடர்ந்து கொண்டே இருக்கும். பிற உயிர்க்குத் துன்பம் செய்யாதிருத்தல் என்னும் அகிம்சை நெறி மற்ற எல்லா நன்னெறிகளும் இயங்குவதற்கு அச்சுப் போன்றதாகும்'' என்று நூலாசிரியர் இனிய எளிய முறையில் விளக்கிச் செல்வது அவர்தம் தெளிவையும், ஜைன நெறியில் அவர் கொண்டிருக்கும் ஆழ்ந்த ஈடுபாட் டினையும் ஒருங்கே புலப்படுத்துவதாகும்.

மகாவீரர் சிந்தனைகளை அடுத்த கட்டுரையில் விரிவாகத் தந்துள்ளார். அகிம்சை, சத்தியம், புலன டக்கமும் மிகுபொருள் விரும்பாமையும் பகவான் மகாவீரரின் இனிய கொள்கைகளாக எடுத்தியம்பி யுள்ளார்.

''வர்த்தமான மகாவீரரின் பாதையில் சில நோக்கு கள்'' என்ற தலைப்பில் அமைந்துள்ள விரிவான கட்டுரை நான்கு முகங்கள் கொண்டதாகும். 'எங்கு நோக்கு கிறோம்?', ''ஏன் நோக்குகிறோம்?'' ''எவ்வாறு நோக்கு கிறோம்'' 'எதை நோக்குகிறோம்' என்ற நோக்குகள் விரிவாகவும், விளக்கமாகவும் தக்க மேற்கோள்களுடன் விளக்கப் பெற்றுள்ளன.

'ஜைனம் கூறும் வாழ்க்கை நெறி' பயன் சார்ந்த கட்டுரை. இக் கட்டுரையில் ஆசிரியர் தம் நுண்மாண் நுழைபுலச் செவ்வி துலங்க, மன ஒருமைப்பாட்டுடனும் ஈடுபாட்டுடனும் ஜைன சமயத் தத்துவங்களைத் தெள்ளிதின் உணர்ந்து நயம்பட நவின்றுள்ளார்.

குருநானக் தேவர் பஞ்சாப் மாநிலம் பெற்ற தவஞானி. சீக்கிய சமயத்தினர் திறம்பட வாழ வழிவகை கண்டவர். அவர் தெளிந்து கண்ட சமய உண்மைகளைத் திரு. எஸ். கிருஷ்ணசந்த் சோர்டியா மனங் கொள்ளுமாறு வடித்திருப்பது, பிற சமயக் காழ்ப்பற்ற அவர்தம் நெஞ்ச நேர்மையினையும், நேர்த்தியினையும் இயம்ப வல்லதாகும். குரு கோவிந்தசிங் பஞ்சாப் மக்களை—வீரத்தின் விளக்க மாக இருக்கும் சீக்கியப் பெருமக்களை ஒன்று திரட்டியவர் ஆவர். மகாகவி பாரதியாரே அவரைப் பாராட்டிக் கவிதை யாத்திருப்பதனைக் காட்டி, நண்பரவர்கள் கட்டுரை வடித்திருப்பது, சிறந்த பொருள்களையெல்லாம் ஓரிடத்துத் தொகுத்து, நற்காட்சி வழங்கும் அவர்தம் ஆற்றலை அணி பெறக் காட்டுகின்றது.

சில நூல்கள் சில மணி நேரங்களைப் போக்க உதவு கின்றன; சில நூல்கள் கண்ணால் பார்க்க மட்டுமே பயன் படுகின்றன. சில நூல்களோ வெளிற் பார்த்து, படித்து, பயன் பெறவும், வாழ்க்கையில் உயரவும் வழி கோலு கின்றன. அந்த வகையிற் பார்க்கப்புகின் நண்பர் அவர் களின் நூல் படித்தாலும் வாழ்க்கையில் ஒருவரைப் படியவைக்குமாறு பயன் விளைவித்து நிற்கும் தகை சான்றது என உறுதியாக எடுத்து மொழியலாம்.

இந்த நல்ல பயன் சார்ந்த நூலினை எழுதியதன் மூலம் நண்பர் எஸ். கிருஷ்ண சந்த் சோர்டியா அவர்கள் தமிழ் கூறு நல்லுலகிற்கு நல்ல தொண்டு ஆற்றியவராகின்றார். ஜைன சமய நெறிகளையும், சீக்கிய சமய நெறிகளையும் எளிமையாகவும், அருமையாகவும், இனிமையாகவும், பழகு தமிழில் அழகுற வடித்திருக்கும் அவர் ஆற்றலைப் பாராட்டு கின்றேன். தமிழிற்குப் புதுவரவாய் அமையும் அவர் முயற்சியைப் போற்றுகின்றேன். அறச் செல்வராய்த் திகழும் அவர் நூலாசிரியராயும் திகழும் பெற்றி எண்ணி மகிழ்கின்றேன். தொடர்ந்து அவர் தமிழன்னைக்கு நூலாரம் புனைந்து சிறப்பாராக. தமிழ் கூறு நல்லுலகு அவர் தம் கன்னி முயற்சியை வரவேற்பதாகுக. —சி. பா.

# முன்னுரை

எனது பெருமதிப்பிற்குரிய தமிழ்ச் சமுதாயத்துக்கு எனது பணிவான வணக்கங்கள்.

எனது உரைகள் ‘ஆற்றங்கரையில் ஞானம்’ என்ற தலைப்பில் நூல் வடிவமாக உங்கள் கரங்களில் தவழ்கிறது. தமிழில் நான், எனது கருத்துக்களை, வெளியிடுவதற்குப் பல்வேறு துறைப் பெரியவர்களும் நண்பர்களும் காரணமாக இருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரின் நினைவும் இப்போது என்முன் எழுந்து நின்று நெகிழ்விக்கின்றன.

எனினும்—இந்தச் சிறுமலரைப் பூக்கச் செய்கின்ற நறுமலர்ப் பதிப்பகத்தாருக்கும், இம்மலரின் எண்ணங்கள் நூல் வடிவமாகக் காரணமான தமிழ் அறிஞரும், எனது உடன் பிறவா மூத்த சகோதரருமான டாக்டர் ‘சி. பா’ (பேராசிரியர் சி. பாலசுப்பிரமணியன்; தமிழ்த் துறைத் தலைவர்; சென்னைப் பல்கலைக் கழகம்) அவர்களுக்கும், எனது எண்ணங்கள் நூல் வடிவமாகும் தகுதியைத் தந்த ‘நிர்வாண்’ அமைப்பின் பெரியவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினைக் காணிக்கையாக்குகின்றேன்.

நான் தமிழில் ஏற்ற வகையில் பேசுவதற்குக் காரணமான உளுந்தூர்ப்பேட்டை ஆரம்பப்பள்ளி ஆசிரியர் திரு. எம். அண்ணாமலை அவர்களின் கல்விப்போதனையை நான் நினைவுகொண்டு, நன்றி கூறுகின்றேன்.

பகவான் ஸ்ரீ மகாவீரரின் அகிம்சா தத்துவத்தில் எனக்குள்ள இயல்பான ஈடுபாடு சொற்பொழிவுகளாக மலர்வதற்கு மேடை தந்த ஸ்ரீ பகவான் மகாவீரர் அகிம்சைப் பிரச்சாரச் சங்கத்தாருக்கும், பல்வேறு தமிழிலக்கிய மன்றங்களுக்கும் என் நன்றிகள்.

ஜைனக் கருத்துக்களை மட்டுமின்றி, பிற சமயத்தின் மகான்களையும், அவர்களின் கொள்கைகளையும் பேசுவதற்குச் சென்னை வானொலி நிலையத்தார் எனக்கு அவ்வப்போது வாய்ப்புத் தந்திருக்கிறார்கள். அதேபோல் பல்வேறு சமயங்களின் ஆன்மீக, அற நிறுவனத்தாரும் என்னைத் தமிழில் பல்வேறு தலைப்புக்களில் பேச அழைத்திருக்கிறார்கள். அவர்கள் எனக்களித்த சந்தர்ப்பங்களில் நான் பேசியவை இந்நூலில் இடம் பெற்றுள்ளன. ‘ஆற்றங்கரையில் ஞானம்’ என்பது 1985ஆம் ஆண்டு மகாவீரர்

ஜெயந்தியன்று சென்னை வானொலியில் நான் ஆற்றிய உரையின் தலைப்பாகும் அதையே இந்நூலுக்கும் பொதுத் தலைப்பாக்கியிருக்கிறேன். இதற்காகச் சென்னை வானொலிக்கு எனது விசேஷமான நன்றியறிதலைக் காணிக்கையாக்குகின்றேன்.

பையல் என்றபோதே என்னைப் பரிந்தணைத்து, வையத்தில் எனை ஆளாக்கிவிட்ட என் அருமைத் தந்தையாருக்கு உற்ற ஆருயிர்த் துணைவியாய்—என் அன்பிற்கும் பாசப் பிணைப்பிற்கும் உரிய அன்னையாய் விளங்கும் ஸ்ரீமதி சுகிபாய் அவர்களுக்கு என் வணக்கங்களை முதற்கண் உரித்தாக்குகின்றேன்.

எனக்குள்ள குடும்பப்பணிகளையும், வாணிகப் பொறுப்பையும் எனது உறுதுணைவர்களாய் இருந்து பங்கிட்டுக் கொள்கின்ற எனது இளவல்கள் ஸ்ரீரஞ்சித்மல் சோர்டியா, ஸ்ரீ மஹேந்திரசந்த் சோர்டியா ஆகியோரால்தான், எனது குடும்ப வாழ்வு மகிழ்ச்சியாகவும், கட்டுப்பாடான போக்கிலும் அமைந்து அதனால், என்னுடைய கவனத்தை ஆன்மீக, இலக்கியப் பணிகளில் இயன்ற அளவு செலுத்த முடிகின்றது. எனவே இவர்களுக்கும் இந்நூலின் கருத்துக்கள் வெளியிடப்பட்டதில் பங்கு உண்டு என்பதனைத் தமிழ் வாசகர்களுக்குச் சொல்வதில் பெருமைப்படுகின்றேன். அதேபோல், என்னுடைய உணர்வுகளிலும் உள்ளன்பிலும் ஆன்மீக, இலக்கியக் கருத்துக்களிலும் உற்சாகமான நட்பைப் பூத்துள்ள எனது உடன்பிறவா இளவல் திரு. கிருஷ்ணன் பாலா (பொறுப்பாசிரியர்; 'வாழும் தமிழ் உலகம்' சர்வ தேசத் திங்கள் இதழ்) அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

இந்நூலின் விற்பனை உரிமையை ஏற்றுள்ள பாரி நிலையம் பெரியவர் திரு. க. செல்லப்பனாருக்கும், என்னுடைய கருத்துக்களுக்கு அன்பு காட்டுகின்ற அனைவருக்கும் எனது நன்றியைச் செலுத்திக் கொள்வதுடன், இந்நூலைப் படிக்கின்ற வாசகப் பெருமக்கள் அனைவருக்கும் எனது வணக்கத்தை மீண்டும் தெரிவித்துக் கொண்டு நூலின் கருத்துக்களில் தங்கள் மேலான கருத்தை நோக்குமாறு வேண்டிக் கொள்கின்றேன்.

சுகன் ஹவுஸ் }<br>சௌகார்ப்பேட்டை, } அன்புள்ள<br>S. கிருஷ்ணசந்த் சோர்டியா



## காணிக்கை

என்னை வளர்த்து, ஆளாக்கி என்றென்றும் எங்கள் குடும்பத்தின் தோன்றாத் துணையாய் இருந்து காக்கின்ற எனது தந்தை, ஜைனப் பெருமகனார் அமரர் ஸ்ரீ சுகன்சந்த் சோர்டியா அவர் களின் அன்பு நினைவுகளுக்கு இந்நூல் அர்ப்பணம்.

—கிருஷ்ணசந்த் சோர்டியா.

# பொருளடக்கம்

# 1

# ஆற்றங்கரையில் ஞானம்

பண்பாட்டிற்கும், நாகரிகத்திற்கும் தொன்றுதொட்டே பிறப்பிடமாக அமைந்து உலகில் மனித சமுதாயத்திற்கு உன்னதமான வாழ்வு நெறியைப் போதித்து, அவ்வழியில் வாழ்ந்து காட்டி நம் புண்ணிய பூமியாம் பாரத நாட்டிற்குப் பெருமை சேர்தத மகான்களில்—பேரறிஞர் களில் தலையாயவர் பகவான் மகாவீரர். இன்று அன்னாரது இரண்டாயிரத்து ஐந்நூற்று எண்பத்து நான்காவது பிறந்த தினம் உலகின் பல பாகங்களிலும் கொண்டாடப்படுகிறது.

நமது நாட்டின் வடகிழக்குப் பிராந்தியமான பீகார் மாநிலத்திலே, இன்று நாம் போற்றிக் கடைப்பிடித்துவரும் ஜனநாயக நெறியில் இற்றைக்குச் சுமார் 25 நூற்றாண்டு களுக்கு முன்பாகவே இப்போதைய ஜனநாயக மரபில் ஆட்சிமுறை அமைத்து அரசாண்ட லிச்சவி வம்சத்திலே, வைஷாலி கணராஜ்யத்தின் உறுப்பு நாடான 'க்ஷத்திரிய குண்ட கிராமம்' எனும் சிற்றரசின் மன்னன் சித்தார்த் தனுக்கு மகனாகப் பிறந்தார் வர்த்தமான மகாவீரர்.

குழந்தைப் பிராயத்திலிருந்தே வீரதீர சாகசங்களைப் புரிந்தார். மற்றச் சிறுவர்களுடன் தோட்டத்துல் விளையாடிக் கொண்டிருந்தபோது, அங்குத் தென்பட்ட பாம்பினைக் கண்டு பயப்படாமல், அலறி அடித்துக் கொண்டு ஓடும் சிறார்களுக்கிடையில் அப்பாம்பை அடித்துத்

துன்புறுத்தாமல் அலாக்காகத் தூக்கி வானவெளியில் வீசு கிறார் குழந்தை வர்த்தமானர். அசாதாரணமான தைரியத்தைக் கண்ட எல்லோரும் அவரை 'மகாவீர்' என்று அழைக்கலானார்கள்.

தாயின் கருவிலிருந்தபோதே தனது அங்க அசைவினால் அன்னை 'திரிசலா மாதா'விற்குச் சிரமம் ஏற்படும் என எண்ணி அசைவற்று இருந்த காலை, அதையறியாது, தன் கருவிற்கு ஏதோ உயிரற்ற நிலை ஏற்பட்டு விட்டதோ என வருந்திய அத் தாயுள்ளத்திற்கு இளகி, தன்னை அசைத்துக் காட்டி தான் உயிருடன் இருக்கும் உண்மையையும், தன் னால் யாருக்கும் இம்மியளவும் தொந்தரவு வேண்டாம் என்ற அடிப்படை வாழ்வு நெறியாம் 'அகிம்சை'யினைக் கருப் பிராயத்திலேயே கடைப்பிடித்துக் காட்டிய பாங்கினைத் தன் தாய்க்கு உணர்த்திக் 'கருவிலே திருவுடையார்' என்று பெருமை பெற்றார் வர்த்தமான மகாவீரர்.

மன்னன் மகனாகப் பிறந்து, உலகியலில் அனுபவித்து இன்புறும் எல்லா வசதிகளைப் பெற்றிருந்தும், அவற்றில் நாட்டமில்லாமல், தன் தேவைகளைக் குறைத்துக் கொண்டு, கட்டுப்பாடான முறையில் இல்லறத்திலிருந்து, தாய் தந்தையரின் அன்புக்குக் கட்டுப்பட்டு, அவர்கள் மனம் நோகாதிருக்க, தாய் தந்தையரின் மறைவிற்குப் பிறகே துறவற நெறியைத் தான் மேற்கொள்ளவிருக்கும் உண்மையினை சகோதரர் நந்திவர்த்தனரிடம் கூறுகிறார். சகோதரனின் பரிவையும் பாசத்தையும் உணர்ந்து தாய் தந்தையரின் மறைவிற்குப் பின்னும் இரண்டு ஆண்டுகள் அவருடன் அரண்மனையிலிருந்து கொண்டே

" உற்ற நோய்நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு"

— திருக்குறள்; தவம்: 1

என்னும் குறள் நெறியை உலகோர்க்குணர்த்தி, தான் மேற்கொள்ள விழையும் தவ வாழ்வினையும், 'பற்றற்ற

கண்ணே பிறப்பறுக்கும்' என்னும் உண்மையைப்போதித்து, எல்லோரும் அறிய 'இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்'—அதாவது 'யான் வறியவன்' என்னும் துன்பச் சொல்லை ஒருவன் சொல்வதற்கு முன் அவனுக்குக் கொடுக்கும் தன்மையாகிய, பிரதி பலனை எதிர்பார்க்காத, ஈகைக் குணத்துடன் ஓராண்டுக்காலம் தான தருமங்களைச் செய்தபின், வாலிபப் பிராயமான சுமார் முப்பது வயதில் இல்லற வாழ்வைத் துறந்து உண்மையைத் தேடித் துறவறம் பூண்டார் வர்த்தமான மகாவீரர்.

சமுதாயத்தின் மூடப்பழக்கங்களும், தேவையற்ற சடங்குகளும், வேள்விகளும், உயிர்ப்பலிகளுடன் நடத்தப் பட்ட அக்காலத்திலிருந்த யாக முறைகளும் வர்த்தமானரின் உள்ளத்தின் அடித்தளத்தில் துக்கமெனும் வேலைப் பாய்ச்சின. மனித சமுதாயத்தில் பட்டம், பதவி, புகழ், செல்வம், ஆட்சி இவற்றுக்கு ஆசைப்பட்டு, கொலை, கொள்ளை, கொடூரம், கொடுங்கோன்மை தலைவிரித்து ஆடிய காலமது. எனவே இத்தகைய கிடைத்தற்கரிய மானிடப்பிறவியின் உயர்வை உணராது, அறியாமையில் உழன்ற உயிர்களின் பரிதாபமான நிலை வர்த்தமான மகாவீரரைச் சிந்திக்க வைத்தது. ஞானத்தைத் தேடி மௌனமானார். காடு, மேடு, நாடு, நகரம் என்ற வேறு பாடின்றி அனைத்திடங்களிலும் நடந்து சென்று வறியவர் களின் துயரங்களைக் கண்டுணர்ந்தார். உயிர்களின் துன்பத்திற்குக் காரணம் அறியாமையும் பேராசையும் தீயவொழுக்கமுமே என முடிவுக்கு வந்தார்.

வர்த்தமான மகாவீரர் தாம் வாழ்ந்த காலத்தில் உலகத்தின் நாடுகளிடையே நிலவிவந்த போர் வெறி, மண்ணாசை, அதர்ம ஆட்சி, அநீதி முதலிய கொடுமை களிலிருந்து மனித சமுதாயத்தை விடுவிக்கவும், தனி மனிதனின் வாழ்க்கை அதற்கேற்ற நெறியில் அமையவும் வழிவகைகளைத் தேடிக் கடும் சிந்தனையுடன் கூடிய தவத்தை மேற்கொண்டார்.

இத்தகைய தவமுயற்சியில் அவர் தன்னை மறந்து, சுற்றுப்புறச் சூழ்நிலைகளில் இருந்த இடையூறுகளைப் பொறுத்து, மனத்தைத் தூய சிந்தனையில் ஈடுபடுத்தினார். அன்றைய சமுதாயத்திலிருந்த பாமர மக்கள் அவர் நிலையறியாது, அவரைத் துன்புறுத்தினார்கள். உடலில் ஆடையில்லாமல், மௌனமாக நடமாடிய அவரை அடையாளம் கண்டு கொள்ளாமல் வசைமாரி பொழிந்தார்கள். தியானத்தில் இருந்த அவருடைய காதுகளில் ஆணி அடிக்கிறான் ஒரு மூடன். நின்று தியானத்திலிருக்கையில் பாத இடைவெளியில் தீ மூட்டிச் சித்திரவதை செய்கிறான் மற்றொரு மூடன். பொறுமையுடன் வலி பொறுத்துச் சிந்திக்கிறார் வர்த்தமானர்.

உயிரானது தனது முன் பிறவியில் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்பச் சுக துக்கங்களை ஏற்றாக வேண்டும். கோப தாபமின்றிப் பொறுத்துக் கொண்டால் தான் வினைப் பயன்களினின்றும் விடுபட்டு உயிரானது மேல் நிலை அடையும்.

இவ்வாறு சிந்தித்து, வேண்டுதல் வேண்டாமை என்னும் பற்றற்ற நிலையில் தன்னை இருத்தி, அழுக்காறு, அவா, வெகுளி, மௌன நிலையிலிருந்து, இன்னாச் சொல் கூறாமல் நா காத்து, பன்னிரண்டு ஆண்டுகளுக்கும் மேலாகப் பீகார் மாநிலத்தின் பல பகுதிகளில் பொது ஜனத் தொடர்பினின்று விலகியிருந்த, தவ நிலை, யோக நிலை, மௌன நிலை, வர்த்தமானரின் தன்னலமற்ற தியாக நிலையில் அவரது ஆன்மா பரிசுத்த நிலையடைகிறது. ஒருநாள் மகத நாட்டிலிருந்த ரிஜு பலுகா என்னும் சிற்றாற்றங் கரையில் வர்த்தமானர் சென்றடைந்து ஓடிக்கொண்டிருக்கும் நதி நீரை நோக்குகிறார். நீரலைகளைப் போன்று அவரது தூய உள்ளத்திலும் எண்ண அலைகள். மனித சமுதாயம் மட்டுமின்றி உலகிலுள்ள எல்லா உயிரினங்களும் பயன் பெறுமாறு உயரிய வாழ்வு நெறியைக் கண்டு

கொண்ட தூய்மையான ஒளி வர்த்தமானரின் சிந்தனை யில் உருவானது. அறிவு வளர்ச்சிக்குத் தடையாக இருந்த 'ஞானாவரணீயகர்மா' என்று கூறப்படுகின்ற வினைத் தடை நீங்கிக் 'கேவல ஞானம்' என்னும் 'முழு அறிவு' விளக்கத்தைப் பெற்றார். இந்த அறிவு ஒளியின் முன் எல்லாச் சக்திகளும், உலகியலும் தெளிவடைந்தன. ''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்னும் முதுரைக் கொப்ப வாழ்ந்தார்.

தனது சீரிய சிந்தனையில் உருவான தெளிந்த கருத்துக் களைப் பாமர மக்களுக்கு அக்காலத்தில் பீகார் மாநிலப் பகுதியில் வழக்கிலிருந்த ''அர்தமாகதி'' மொழியில் வர்த்தமான மகாவீரர் உபதேசிக்கலானார். எல்லோரும் அவரைப் பகவான் மகாவீரர் என அழைத்துப் போற்றலா னார்கள்.

பகவான் மகாவீரர் உணர்த்திய நெறிகளைக் கடைப் பிடித்து ஒழுகும் மனிதன், இந்த உலகாயுதப் பற்றை வென்றவன் எனவே புலனடக்கத்தால் தன்னைக் கட்டுப் படுத்திவென்றவன் என்ற பெருமைக்குரியவன். அதனால் அவன் ஜைனன் என அழைக்கப்படுகிறான்.

. ஜைனம் என்னும் வாழ்வு நெறியானது, இயற்கைக்கு ஏற்ற வழியில் மனிதனை மனிதனாக வாழச் செய்து, அவன் பிறப்பு இறப்பு அற்ற 'ஜீவன் முக்தி' அல்லது, ''மோட்சம்'' என்னும் இறைத் தன்மையை அடைவதற்குப் பயிற்சியளிப்பதாகும். ஜைன நெறியானது இறைவன் தனியே எங்கோ உறைகிறான் என்ற கூற்றை மறுக்கிறது; இயற்கை என்னும் இப் பிரபஞ்ச இயக்கத்தையும், ஆதி அந்தம் இல்லாத இப் பூவுலக அமைப்பு நிரந்தரமானது என்பதையும் வலியுறுத்துகிறது.

பகவான் மகாவீரர் இல்லறத்தை மேற்கொண்டு ஒழுகுபவர் கடைப்பிடிக்க உன்னதமான எளிய நெறிகளைக் கூறியுள்ளார். இதனை அணு விரதம் என்கிறோம்.

முதலாவது : பிற உயிர்களைத் துன்புறுத்தா திருத்தல்.

இரண்டாவது : சகஜ வாழ்வில் பொய் பேசாம லிருத்தல்.

இதனையே வள்ளுவர் பெருமான்,

" ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று"

—திருக்குறள்; கொல்லாமை;3

என விளக்குவார்.

மூன்றாவதாக : திருடாமை என்னும் விரதம்.

நான்காவதாக : பிறனில் விழையாமை என்னும் இல்லற ஒழுக்கம்.

ஐந்தாவதாக : அபரிக்கிரஹம் எனப்படும் மிகு பொருள் விரும்பாமை என்னும் சீரிய விரதம்.

ஆறாவதாக : பிரயாணக் கட்டுப்பாடு.

ஏழாவதாக : உணவுக் கட்டுப்பாடு.

இதில் உடலுக் கேற்ற குறைந்த அளவில் மரக்கறி அதாவது சைவ உணவை மட்டும் உண்பதாகும்.

புலால் உண்ணாமையைப் பகவான் மகாவீரர் தீவிர மாகப் போதித்துள்ளார்.

எட்டாவதாக : பயனில சொல்லாமை மற்றும் தீய கடுஞ்சொற்களையும் பேசக் கூடாது என்பதாகும்.

ஒன்பதாவதாக : 'சாமாயிக் விரதம்' எனப்படும் மனத்தைச் சமன்படுத்தும் தியானப் பயிற்சியைக் குறிப்பிட்ட வேளை களில் தினமும் தவறாமல் செய்வது.

பத்தாவதாக : நல்ல ஒழுக்கம் உள்ளவர்களைத் தேர்ந்தெடுத்துப் பழகுவதாகும்.

" தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாம் தலை"
—திருக்குறள்; பெரியாரைத் துணைக்கோடல் :4

அன்றோ!

பதினொன்றாவதாக : உபவாசம் இருக்கும் விரதம். அதாவது குறிப்பிட்ட வேளைகளிலும் நாட்களிலும் உண்ணா நோன்பிருந்து மனத்தைச் சுயதரிசனம் பெறச்செய்வதாகும்.

பன்னிரண்டாவதாக: விருந்தோம்பல் என்னும் சிரிய நெறி.

" அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்."
—திருக்குறள்; விருந்தோம்பல் :4

என்பதும் நாம் எல்லோரும் அறிய வேண்டுவதேயாகும்.

இந்தப் பன்னிரண்டு வகையான உண்மை நெறிகளைத் தவறாது ஒருவன் கடைப்பிடித்து வாழ்ந்தால் அதன் இயல்பான பலனால் அவனுக்குத் துறவுநிலை தோன்றி விடும்.

துறவற நெறி மேற்கொண்டு ஒழுகுபவர்களுக்கு ஐந்து மகாவிரதங்களைப் பகவான் மகாவீரர் கூறியுள்ளார்.

முதலாவதாக, அகிம்சை

இரண்டாவதாக, வாய்மை எனப்படும் சத்தியம்.

மூன்றாவதாக, திருடாமை

நான்காவதாக, பிரம்மச்சரியம்.

ஐந்தாவதாக, பொருள்கள் மீது பற்றுக்கொள்ளாமை என்ற ஐந்து நெறிகளும் துறவறம் பூணுபவர் கடைப்பிடிக்கவேண்டிய உன்னத நெறிகளாகும்.

இல்லறத்தானுக்கு என்று வகுக்கப்பட்ட அணுவிரத நெறிகளின் அடிப்படை என்ன என்பதை நோக்கினால் அறம் என்கின்ற முழு உருவம் புலப்படும்.

அறம் என்பது ஏதோ வெறும் தர்ம உணர்வையும் அதன் சொல்லையும் மாத்திரம் குறிப்பதன்று.

வள்ளுவர் கூறுவதைப் போல்,

**" அழுக்காறு, அவா வெகுளி, இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்."**
—திருக்குறள்; அறன்வலியுறுத்தல்: 5

என்ற நோக்கிலும் உணரப்படுவதாகும்.

அழுக்காறு என்பது பொறாமை. இதை எப்படி வெல்வது?

விரும்பும் பொருள் கிடைக்காத போதும், அல்லது விரும்பும் செயல் நடக்காதபோதும், அதே போல நாம் விரும்பாத பொருள் நம்மை அண்டும்போதும், விரும்பாத செயல் நடைபெறும் போதும் மனத்தைச் சமநிலைப் படுத்திக்கொள்வதன் மூலமே அழுக்காறு வெல்லப்படும். நமக்குக் கிடைக்காத பொருள், புகழ் பிறருக்குக் கிடைக்கும் போதும், நம் மனத்தைப் பொறாமையின் குழியில் தள்ளி விடாமல் இருந்து அந்த அழுக்காறு நம்மை இழுக்காக்கி விடாமல் பாதுகாக்கவேண்டும்.

அவா என்பது வணிகத் துறையிலோ, உத்தியோகத் துறையிலோ, அரசியல் துறையிலோ சம்பந்தப்படும்போது லாபம், பதவி, புகழ் என்ற மயக்கங்கள், ஆசைகள் நம்மைக் கவ்வும். வெகுளி என்ற கோபம் நம் அறியாமையினாலோ அல்லது பிறரது தவற்றின் மீதோ எழுவது.

இன்னாச் சொல்லை நாம் பயன்படுத்த நேர்வது •நம் தீய நடத்தை, தீயவர் நட்பு, தீமையில் நாட்டம்

என்ற காரணங்களினால்தான். ஆகவே நம் துன்பத்துக்கும் நம் தாழ்ச்சிக்கும் வித்திடும் அவா, வெகுளி, தீயசொல் முதலியவற்றையும் நம்மோடு சம்பந்தப் படாமல் நம்மைக் காத்துக் கொள்வது நல்அறம் ஆகும்.

துன்பங்களுக்குக் காரணம் ஆசைதான். ஆசைகளை விட்டு ஒழிக்கும் வரை, நம்மைத் துன்பங்கள் தொடர்ந்து கொண்டே இருக்கும். பிற உயிர்க்குந் துன்பம் செய்யா திருத்தல் என்னும் அகிம்சைநெறி மற்ற எல்லா நன்னெறி களும் இயங்குவதற்கு அச்சுப் போன்றதாகும். அகிம்சை என்ற நெறியே மற்ற எல்லா ஒழுக்கங்களும் தன்னைப் பின்பற்றி இயல்பாக வரச்செய்யும் கருவியாகும்.

பிற உயிர்களிடம் பரிவு காட்டுவதும் நமது கடமை யாகும். நமது நல்வினை தீவினைப் பயனை நாமே பொறுப்பேற்று அனுபவிக்கவேண்டி வரும் என்பதே உலகியலில் மனிதன் அறிய வேண்டியதாகும்.

**" பெருமையும் சிறுமையும் பிறர் தர வாரா"**

என்னும் முதுரையும்.

**" நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார்**
**நோய்இன்மை வேண்டு பவர்"**

—திருக்குறள்; இன்னா செய்யாமை: 10

என்னும் சீரிய குறளும் இதனையே வலியுறுத்துகின்றன.

"மனித உயிரானது சரணடைவதில்லை; அது இறைத் தன்மைக்குத் தன்னை உயர்த்திக் கொள்கிறது. வாழ்ந்து கொண்டிருக்கும் ஒவ்வோர் உயிரும் நல்வாழ்க்கை நெறியின் மூலம் சுத்தியடைந்து மோட்ச நிலையை எய்தும் தகுதி யுடையது" என்பதே பகவான் மகாவீரர் கண்ட ஆன்ம நெறி.

எனவே பீகார் மாநிலத்தில் ரிஜுபாலுகா நதிக்கரையில் பகவான் மகாவீரர் கண்டறிந்த ஆன்ம ஒளி மனிதனைத்

துன்பத்திலிருந்து விடுவிக்கும் வழியைக் காட்டுகிறது. அதுவும் சாதாரண விடுதலையன்று, வீடுபேறு என்கின்ற ஜீவன் முக்திக்கு உரிய வழியைக் காட்டுவதாகும்.

இந்த உலகில் சமாதானத்தையும், சாந்தத்தையும் சத்திய நெறியையும் மீட்கும் கருவியாக இருப்பது 'அகிம்சை' ஒன்றைத் தவிர வேறு எந்தத் தத்துவமும் இல்லை.

அந்த அகிம்சையின் முழுப் பரிமாணத்தையும் ஏற்றுத் துலங்கும் பகவான் மகாவீரரின் போதனைகள் இப் பூவுலகத்தில் அறத்தையும் அமைதியையும், ஆன்மீக இன்பத்தையும் மீட்டு நம் எல்லோருக்கும் நல்வாழ்வு தரும் என்று நம்புவோமாக.



# 2

# மகாவீரர் சிந்தனைகள்

## I

### அகிம்சை

பகவான் மகாவீரர் கி. மு. 599-வது ஆண்டில் இன்று பீஹார் மாநிலம் என்று விளங்கும் பிராந்தியத்தில் குண்டலாபுரம் என்ற சிறுநிலப் பகுதியில் அரச பரம்பரையில் தோன்றினார். அவர் கருவிலே திருவுடையவராக—மதி ஞானம், சுருதி ஞானம், அவுதி ஞானம் (அதாவது மனப்பார்வை ஞானம்) ஆகியவை அமையப் பெற்றவராகத் திகழ்ந்தார்.

உலகில் அறநெறி குன்றியதால் அறிவுக்குத் தடைகள் வளர்ந்து, மூட நம்பிக்கைகள் பரவி, பண்புகள் கெட்டன. அந்த நிலையை மாற்றி உலகை நன்னெறிவழிப் படுத்த வேண்டும் என்ற சீரிய நோக்கத்துடன் மகாவீரர் துறவியானார்.

பகவான் மகாவீரர் ஜைனர்கள் மட்டுமின்றி உலக மக்கள் அனைவரும் பின்பற்றி உயருவதற்கான அறநெறிகளைப் போதித்து அருளினார்.

பகவான் மகாவீரர் ஐந்து மிக முக்கியமான போதனைகளை வழங்கினார். அவை அகிம்சை, சத்தியம், அசௌரியம் (திருடாமை), பிரம்மசரியம்( புலனடக்கம்),

அபரிகிரகம் (மிகு பொருள் விரும்பாமை) ஆகியவை ஆகும். அவை மனித குலம் அனைத்தும் பின்பற்ற வேண்டியவை.

" ஒன்றாக நல்லது கொல்லாமை: மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று "

—திருக்குறள், கொல்லாமை: 3

என்பது திருவள்ளுவரின் வாக்கு.

ஐந்து அறங்களிலும் அடிப்படையான அறம் அகிம்சையே ஆகும் என்று பகவான் மகாவீரர் வற்புறுத்தினார்.

"அனைத்திலும் தலையாய அறம் அகிம்சையே ஆகும். அகிம்சையை நேரிய முறையில் கடைப்பிடித்தால் மற்ற நான்கு அறங்களும் அதனுள் அடங்கி விடும். எந்த உயிரினமும் தனது உயிரை அருமையானதாகவும், புனிதமானதாகவும் நேசிக்கும். எந்த உயிரும் இறப்பதற்கு விரும்பாது. நோய், சாவு, துன்பம் இந்த மூன்றையும் எந்த உயிரும் விரும்புவது இல்லை. ஆகவே அஹிம்சை தான் எல்லாவற்றிலும் மேலான அறம் ஆகும்" என்று பகவான் மகாவீரர் உபதேசம் செய்தார்.

"அகிம்சை நெறி பல வகையான சுகங்களை அளிக்க வல்லது ......எல்லோருக்கும் நம் உயிர் இனியது ...... தன்னைப் போலவே பிறரையும் நினைப்பாயாக...... எல்லாப் பிராணிகளிடமும் நட்புடன் பழகு" என்று பகவான் மகாவீரர் கூறினார்.

"உலகில் யாரையும் துன்புறுத்தாதே; உயிரினங்களின் உயிரை நீக்காதே" என்பது அவரது அறிவுரை.

"உண்மையில், அகிம்சை செய்வதுதான் பந்தம், மோகம், மரணம், நரகம் எல்லாம் ஆகும். இம்சையிலிருந்து தான் துன்பங்கள் அனைத்தும் தோன்றுகின்றன... இம்சையில் ஈடுபட்டிருக்கும் ஓர் அஞ்ஞானி ஓர் இருளி

விருந்து மற்றோர் இருளை நோக்கிச் சென்று கொண் டிருக்கிறான்.'' என்று பகவான் மகாவீரர் எச்சரிக் கின்றார்.

இம்சை எவ்வாறு தோன்றுகிறது? ''சிலர் கோபத்தில் இம்சை செய்கிறார்கள். சிலர் பேராசையினால் இம்சை செய்கிறார்கள். சிலர் அஞ்ஞானத்தால் இம்சை செய்கிறார்கள்''—இவ்வாறு இம்சை தோன்றும் விதம் குறித்து பகவான் மகாவீரர் விரிவாகக் குறிப்பிடு கின்றார்.

''இம்சை செய்பவன் இம்சை செய்வதற்கான கொடிய பயனை அனுபவிக்காமல் தப்பிக்க முடியாது'' என்றும் அவர் சுட்டிக்காட்டுகின்றார்.

பகவான் மகாவீரர் போதித்து அருளிய அகிம்சை நெறி எதிர்மறை வகையிலான கோட்பாடு அல்ல. அது ஓர் ஆக்க வகையிலான வாழ்க்கை நெறி ஆகும். உலகில் எல்லா உயிரினங்களிடமும் அன்பு பேண வேண்டும் என்பது அதன் அடிப்படை. அச்சமோ அல்லது தொல்லையோ இல்லாமல் முழுமையான அனுமதியுடனும், மகிழ்ச்சி யுடனும் வாழ்வதற்கு அகிம்சைநெறி வழிவகுக்கிறது.

நமது காலத்தில் காந்தியடிகள் அகிம்சை நெறியை அரசியல் துறையில் பயன்படுத்தி இந்தியாவுக்கு விடுதலை பெற்றுத் தந்தார்.

அகிம்சை நெறி வாழ்க்கையின் எல்லாத் துறை களிலும் பின்பற்றுவதற்கு ஏற்றது. கல்வித் துறை, தொழில் துறை, அலுவலகங்கள், வியாபாரத் துறை, விளையாட்டுத்துறை, அரசியல் துறை, தனி மனித வாழ்க்கை, சமுதாய வாழ்க்கை, சர்வதேச உறவுகள்— இப்படி வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் அகிம்சை நெறியைச் செயலளவில் பின்பற்றினால் உலகம் இன்பமான தாக அமையும்.

பகவான் மகாவீரர் போதித்து அருளிய வண்ணம் அகிம்சை நெறியை மனம், வாக்கு, காயம், சிந்தனை, சொல், செயல்—அனைத்திலும் பின்பற்றி, உலகில் வன்முறையை அறவே தவிர்த்து இன்பமாக வாழ்வோமாக.

## II

### சத்தியம்

பகவான் மகாவீரர் பன்னிரண்டு ஆண்டுகள் மிகக் கடுமையாகத் தவம் புரிந்தார். அவர் காமம், குரோதம், மோகம், லாபம் ஆகியவற்றை அடக்கினார்; ஐம் புலன் களையும் தம் வயப்படுத்தினார். பின்னர், அவர் வினை வரும் வாயில்கள் அடைக்கப்பட்டு, கேவல ஞானத்தை — அதாவது அனைத்தையும் அறியும் முழுதுணர் ஞானத்தைப் பெற்றார்.

பகவான் மகாவீரர் போதித்து அருளிய ஐம்பெரும் நெறிகளில் அகிம்சைக்கு அடுத்தபடியான இடத்தைச் சத்தியம் பெறுகிறது. அகிம்சை நெறியைப் பின்பற்று கின்ற ஒருவன் சத்திய நெறியையும் பின்பற்றுவது திண்ணம்.

நமது தலைமுறையில் வாழ்ந்த காந்தியடிகள் "அகிம்சையும், சத்தியமும் எனது இரு காற்றுப்பைகள்" என்று குறிப்பிட்டார்.

"சத்தியத்தில் நிலைத்திரு... சத்தியத்திலும் இம்சை இல்லாத சத்தியமே மிகவும் உயர்ந்தது... வாய்மையைப் பயில்பவன் நான்கு பக்கங்களிலும் துன்பங்கள் சூழ்ந்திருந் தாலும் கலக்கம் கொள்ளமாட்டான்... வாய்மை சுவர்க்கத்தின் வாயிற் கதவு... வாய்மையே சித்தி நிலையின் படிக்கட்டு" என்று பகவான் மகாவீரர் கூறுகின்றார்.

"பொய் பேசுவதால் அவமானம் ஏற்படுகிறது; பகைமை வளருகிறது; மனத்தில் வருத்தமும் வளருகிறது... உலகத்

திலுள்ள எல்லா மகான்களும் பொய்யை இகழ்ந்திருக்கிறார்கள்... துன்புறுத்தலை உண்டாக்கும் பொய்யைப் பேசாதே'' என்றும் பகவான் மகாவீரர் உபதேசிக்கின்றார்.

''தன்னைப் புகழ்ந்து கொள்ளுவதும், பிறரை இகழ்ந்து பேசுவதும் பொய்க்கு இணையானதே'' என்பது பகவான் மகாவீரரின் கொள்கை. பொய்மைக்கு ஒரு புதிய பரிணாமத்தை இங்கே காண்கின்றோம். பொய் என்பது உண்மையில்லாததைப் பேசுவது மட்டும் அல்ல. பிறரை இகழ்ந்து பேசுவது, தன்னைப் புகழ்ந்து கொள்ளுவது ஆகியவையும் பொய்க்கு இணையான செயல்களே என்று பகவான் மகாவீரர் குறிப்பிட்டிருப்பது ஆழ்ந்து சிந்திக்கத் தக்கது ஆகும்.

சத்தியத்தைப் பேச வேண்டும் என்பது பகவான் மகாவீரரின் அறிவுரை. ஆனால் எது சத்தியம்? பொய் யில்லாதது என்பதால் மட்டும் ஒன்று சத்தியம் ஆகிவிடாது. சத்தியம் எது என்பதற்குப் பகவான் மகாவீரர் இலக்கணம் வகுத்திருக்கிறார். ''சத்தியம் என்றாலும், பாவம் தரும் சத்தியத்தைப் பேசுதல் கூடாது... உண்மைப் பேச்சும் கடுமையாக இருப்பின் அதைக் கூறாதே'' என்பது பகவான் மகாவீரரின் எச்சரிக்கை.

> '' பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்.''
>
> — திருக்குறள்; வாய்மை: 7

என்பது வள்ளுவம்.

சத்தியம் பேணுதல் என்பதில் நமது பணிகளும் — செயல்களும் — சத்தியமானவையாக இருக்க வேண்டும். ஆம்; சத்திய நெறி, சிந்தனை, சொல், செயல் ஆகிய அனைத்திலும் அமைய வேண்டும். நமது சிந்தனைகள், நமது பேச்சு, நமது செயல்கள் அனைத்தும் சத்திய நெறியின் வழி இருக்க வேண்டும்.

சத்தியம் அல்லது வாய்மை என்பது மற்றவர்க்கு ஒரு சிறிதும் தீமை இல்லாத சொற்களைச் சொல்லுதல் ஆகும். எனவே அகிம்சை நெறியைப் பின்பற்றுகின்ற பெரு மக்களால் மட்டுமே சத்திய நெறியையும் பின்பற்ற முடியும்.

'' பொய்யாமை பொய்யாமை ஆற்றின், அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று''

—திருக்குறள்; வாய்மை: 7

என்று திருவள்ளுவர் மிகத் தெளிவாக இதனைக் குறிப்பிடுகின்றார்.

வாய்மையின் நல்ல பிற இல்லை என்பதும் அவரது வாக்கு ஆகும்.

பகவான் மகாவீரர் வாழ்க்கையில் நெறிகளுக்கு முதலிடம் தந்தார். மனிதன் பிறப்பினால் மட்டும் உயர்ந்தவன் அல்லது தாழ்ந்தவன் ஆகமாட்டான் என்று அவர் உறுதியாகக் கூறினார். ஒருவர் தமது பணிகளினால் மட்டுமே தாம் வாழுகின்ற வாழ்க்கையினால் மட்டுமே உயர்வு பெறுவார் அல்லது தாழ்வு அடைவார்.

ஆம்; மனிதனின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் மனிதனே காரணமாக அமைகிறான். மனிதனின் செயல்கள் அவனை வீழ்த்தும் அல்லது உயர்த்தும் என்பது பகவான் மகாவீரரின் போதனை.

சத்திய நெறியைப் போற்றி வாழுகின்றவன் உயருவான். சத்திய நெறியைப் புறக்கணித்து உழல்பவன் தாழ்வான்.

பகவான் மகாவீரர் போதித்து அருளிய சத்திய நெறியை நாம் அனைவரும் பின்பற்றித் தனி மனித அளவிலும் சமுதாய அளவிலும் உயர்ந்து ''சத்தியமேவ ஜெயதே'' — ''வாய்மையே வெல்லும்''— என்ற தேசியப் பிரகடனத்திற்கு ஏற்றவர்களாக நம்மை ஆக்கிக் கொள்ளுவோமாக.

# III

## புலனடக்கமும், மிகுபொருள் விரும்பாமையும்

பகவான் மகாவீரர் ஜைனர்களின் 24-வது தீர்த்தங் கரர். தீர்த்தங்கரர் என்னும் சொல், சதுர்வித சங்கம்-சாது, சந்நியாசினி, சிராவகர், சிராவிகை— என்னும் நான்கு பிரிவடங்கிய ஒரு சங்கத்தை நிர்மாணம் செய்தவர் —அதன் மூலம் பிறவிப்பெருங்கடலில் உழன்று தத்தளிக்கும் அன்மாக்களைக் கரையேற்றுபவர் என்று பொருள்படும். தீர்த்தம் என்றால் நீர் நிலை. கரர் என்றால் கரையேற்று பவர் என்று பொருள்.

ஓர் ஆன்மா வீடு பேற்றை அடைவதற்கு மூன்று பண்புகள் அவசியம். எது நல்லது என்பதை முதலில் அறிய வேண்டும்; பிறகு இதுதான் மிகவும் நல்லது என்று தெளிந்து உணர வேண்டும்; தெளிந்த பிறகு அதைக் கடைப் பிடிக்க வேண்டும். இவற்றை ஜைனர்கள் **நற்காட்சி, நல் ஞானம், நல்லொழுக்கம்** என்பர்:

இந்த மும்மணிகளைச் சரியான நம்பிக்கை, சரியான அறிவு, சரியான நடத்தை என்றும் குறிப்பிடலாம்.

ஆன்மா கரையேறுவதற்காகப் பகவான் மகாவீரர் வழங்கிய போதனைகள் அவரது நேர் வழிச் சீடர்களான பதினொரு கணதரர்கள் வழியாகச் சூத்திரங்கள், சூத்திராங்கங்கள் என்னும் பெயருடன் நமக்குக் கிடைத் திருக்கின்றன.

பகவான் மகாவீரர் வழங்கி அருளிய ஐந்து மிக முக்கியமான போதனைகளில் பிரம்மசரியம் (புலனடக்கம்), அசௌரியம் (கள்ளாமை), அபரிகிரகம் (மிகுபொருள் விரும்பாமை) ஆகியவை அடங்கும்.

பகவான் மகாவீரர் வழங்கிய இந்தப் போதனைகள் பிரத்தியட்ச வாழ்க்கைக்கு இன்றியமையாதவை. சமுதாய

அமைதி, தேசிய ஒருமை, சர்வதேச சகோதரத்துவம் ஆகியவற்றுக்கு மிகுபொருள் விரும்பாமையும் கள்ளா மையும் அவசியம். அபரிகிரகம் என்பது வன்முறைக்குச் சிறிதும் இடம் தராத பொது உடைமைக் கோட்பாடு என்றே கூறலாம். அபரிகிரகக் கோட்பாடு தேவைக்கு மேல் விரும்பாதே என்று கட்டளை தருகிறது. சமுதாயத்தில் பொருளாதார நீதி நிலவவும், ஏற்றத்தாழ்வு அகலவும். செல்வம் நியாயமாக விநியோகிக்கப்படவும் வேண்டும் என்ற விழுமிய கருத்து இந்தக் கோட்பாட்டுக்கு அடிப்படையாக அமைகிறது.

வன்முறை தவிர்த்த வழியைப் பகவான் மகாவீரர் காட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. உடைமை களைத் தாமாகவே கட்டுப்படுத்திக் கொண்டால் பொருளா தாரத்துறையில் சீர்மை அமைந்து, நிம்மதியும், அமை தியும், மகிழ்ச்சியும் தோன்றும்.

ஆசைக்கு அளவில்லை. ஆசையின் விளைவாகப் பூசல்கள் ஏற்படுகின்றன. பூசல்கள் அமைதியைக் கெடுக் கின்றன. மிகுபொருள் விரும்பாமை என்ற பகவான் மகாவீரரின் போதனை ஆசையைக் கட்டுப்படுத்த வழி வகுக்கிறது.

**'' வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை;**
**யாண்டும் அஃதொப்பது இல்''**

—*திருக்குறள்; அவாவறுத்தல்: 3*

என்பது திருவள்ளுவரின் வாக்கு.

அது வேண்டும், இது வேண்டும் என்ற பதைபதைப்பு நீங்கிய நிலைமை போன்ற சிறந்த செல்வம் இவ்வுலகில் இல்லை என்று திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். பகவான் மகாவீரரின் அபரிகிரகக் கோட்பாட்டை இந்தக் குறள் மிகவும் அருமையாக வலியுறுத்துகிறது.

அசௌரியம் (கள்ளாமை), அபரிகிரகம் (மிகுபொருள் விரும்பாமை) ஆகியவை ஒன்றுக்கொன்று அனுசரணை யானவை. பிறர் பொருளை பிறர் அறியாத வகையில்

வஞ்சித்துக் கொள்ளுவோம் என்ற எண்ணம் கூடாது என்று அசௌரியம் போதிக்கிறது. மிகுபொருள் வேண்டாம் என்று அபரிகிரகம் போதிக்கிறது. இவை இரண்டும் அமைதியான திருப்தியான வாழ்க்கைக்கு இன்றியமை யாதவை.

பகவான் மகாவீரர் பிரம்மசரியம் பேணுக என்றும் போதித்து அருளி உள்ளார். பிரம்மசரியம் அல்லது புலனடக்கம் மனிதனின் உள்ளொளி பெருக்கி உடலைத் தூய்மைப்படுத்தி வலிமை காட்டுகிறது. புலனடக்கம் இல்லாத மனிதன் செயற்கரிய செய்யும் பேராற்றல் பெற்றவனாக அமைய முடியாது.

திருவள்ளுவர் 'பிறர் மனை நோக்காத பேராண்மை' என்ற சொற்றொடரின் மூலம் இதனை எடுத்துக்காட்டி யிருக்கிறார். பேராண்மை என்ற சொல்லைக் கவனியுங்கள். புலனடக்கத்தால் விளைகின்ற நிலை சாதாரண ஆண்மை அல்ல. பெரிய ஆண்மை ஆகும்.

புலனடக்கம் மனிதனைத் தூய்மைப்படுத்துகிறது. தூய மனிதனின் சிந்தனைகள் தூய்மையானவையாக, சமுதாய நலனுக்கு உதவுபவையாக அமையும்.

பகவான் மகாவீரர் பிரம்மசரியம் பேணுக என்று மனித குலத்தின் நலனைக் கருதிப் போதித்து அருளினார். புலனடக்கம் இல்லாதவனிடம் பகை, பாவம், அச்சம், பழி ஆகிய குற்றங்களும் அகலாது என்று தெய்வப் புலவர் திருவள்ளுவர் எச்சரித்துள்ளார்.

நாம் பெரிய சமுதாயத்தில் வாழ்கிறோம். சமுதா யத்தில் அமைதியின்மை, ஆலைகளில் வேலை நிறுத்தம், மனிதர் ஒருவரையொருவர் சுரண்டி வாழும் போக்கு, வன்முறைக் கிளர்ச்சிகள், வகுப்புகளிடையே மோதல்கள் போன்ற அனைத்துக்கும் இடம் தராமல் மனித குலம் வாழப் பகவான் மகாவீரர் போதித்த அபரிகிரகம், அசௌரியம், பிரம்மசரியம் ஆகிய சீரிய கோட்பாடுகள் துணை நிற்கும்.

# 3

# வர்த்தமான மகாவீரரின் பாதையில் சில நோக்குகள்

## I

### எங்கு நோக்குகிறோம் ?

பகவான் ஸ்ரீ வர்த்தமான மகாவீரர் ஜைன மார்க்கத்தின் சீரிய நெறிகளைத் தமது கடுமையான தவத்தின் மூலம் தெளிவாக உணர்ந்து, தமது இறுதியான முடிவையே உலகிற்கு உபதேசித்துச் சென்றிருக்கிறார். பகவான் ஸ்ரீ மஹாவீரர் மூலமே, ஜைன மார்க்கத்தின் தெளிவான உபதேசங்களையும் அவற்றைக் கடைப் பிடிக்க வேண்டிய முறைகளையும் நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

அவர் வழியே நமக்கு உணர்த்தப்பட்ட அந்த மார்க்க நெறிகள் என்ன?

மனித சமுதாயம், உண்மையான இலக்கை, அதாவது நிறைவை அடைவதற்கு அந்த நெறிகள் எங்கு நோக்குகிறோம்? ஏன் நோக்குகிறோம்? எவ்வாறு நோக்குகிறோம்? எதனை நோக்குகிறோம் என்பதை எல்லாம் இந்த அறிவார்ந்த மன்றத்தில் தங்களோடு பகிர்ந்து கொள்வதற்குக் கிடைத்த பெரும் வாய்ப்பாகக் கருதி மகிழ்கிறேன்.

'நிர்வாண்' என்ற இந்த அமைப்பின் இலட்சியங்கள் சாதி, சமய, இன வேறுபாடுகளைக் கடந்தவை. மனித

ஆற்றலின் தூய அறிவே, 'நிர்வாண்' என்று சொல்லப் படுகிற பரிசுத்தமானது. பகவான் ஸ்ரீ மகாவீரரின் வாழ்வும், போதனைகளும் அவர் பாதையும் இறுதியில் மகா நிர்வாண நிலைக்கே நமது ஆன்மாக்களை இழுத்துச் செல்கிறது என்பதால், அந் நெறிகள் குறித்து, இந்த 'நிர்வாண்' மன்றத்தில் பேசுவது மிகப் பொருத்தமுடைய தாகவே கருதுகின்றேன்.

எனது அறிவுக்குட்பட்ட வரையில், பகவான் ஸ்ரீ மகா வீரர் மனித சமுதாயம் உய்யக் காட்டிய நெறிகளின் போக்கை நான்கு வகையான பார்வையில் இங்கே இயம்ப முயல்கின்றேன்.

எனது கருத்துகள் மூலம் ஜைனத்தின் முழுப் பரிமாணத்தையும் உணர்த்திவிட முடியும் என்று சிஞ்சித்தும் கருதலாகாது. கிடைத்த அரங்கில், கிடைத்த நேரத்தில், எனக்குள்ள தகுதிகளின் வாயிலாகவே, அதன் நெறிகளைப் புகல்கின்றேன். அவ்வளவு தான்.

எனவே, இதில் நிறைவு என்று அறிவார்ந்த பெரியோ ராகிய தங்களுக்குப் பட்டால், அது ஜைனத்தின் மேன்மை என்றும், 'நிறைவில்லை', எனப்பட்டால் அது எனது குறைந்த ஆற்றலின் விளைவினால்தான் என்பதையும் அருள்கூர்ந்து ஏற்க வேண்டுகின்றேன்.

முன்னதாக—

'ஜைனம்' என்ற மார்க்கம் பற்றியும், பகவான் ஸ்ரீ மகாவீரர் மூலம் அது புத்தொளி பெற்ற வகை குறித்தும், மகாவீரருக்கும் முற்பட்ட பல்லாயிரக்கணக் கான ஆண்டுகளுக்கு முன் ஜைன மார்க்கத்தை உலகில் நிலை நிறுத்திய மகான்களான தீர்த்தங்கரர்கள் குறித்தும் இங்கே சுருக்கமாக நாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

ஏனெனில், ஜைனம் ஒரு மதமாக உலகில் தோன்ற வில்லை. அதை எவரும் தோற்றுவிக்கவும் இல்லை.

பகவான் மகாவீரர் போதித்து அருளிய வண்ணம் அகிம்சை நெறியை மனம், வாக்கு, காயம், சிந்தனை, சொல், செயல்—அனைத்திலும் பின்பற்றி, உலகில் வன்முறையை அறவே தவிர்த்து இன்பமாக வாழ்வோமாக.

## II

## சத்தியம்

பகவான் மகாவீரர் பன்னிரண்டு ஆண்டுகள் மிகக் கடுமையாகத் தவம் புரிந்தார். அவர் காமம், குரோதம், மோகம், லாபம் ஆகியவற்றை அடக்கினார்; ஐம் புலன் களையும் தம் வயப்படுத்தினார். பின்னர், அவர் வினை வரும் வாயில்கள் அடைக்கப்பட்டு, கேவல ஞானத்தை — அதாவது அனைத்தையும் அறியும் முழுதுணர் ஞானத்தைப் பெற்றார்.

பகவான் மகாவீரர் போதித்து அருளிய ஐம்பெரும் நெறிகளில் அகிம்சைக்கு **அடுத்தபடியான இடத்தைச் சத்தியம் பெறுகிறது.** அகிம்சை நெறியைப் பின்பற்று கின்ற ஒருவன் சத்திய நெறியையும் பின்பற்றுவது திண்ணம்.

நமது தலைமுறையில் வாழ்ந்த காந்தியடிகள் "அகிம்சையும், சத்தியமும் **எனது இரு காற்றுப்பைகள்**" என்று குறிப்பிட்டார்.

"சத்தியத்தில் நிலைத்திரு... சத்தியத்திலும் இம்சை இல்லாத சத்தியமே மிகவும் உயர்ந்தது... வாய்மையைப் பயில்பவன் நான்கு பக்கங்களிலும் துன்பங்கள் சூழ்ந்திருந் தாலும் கலக்கம் கொள்ளமாட்டான்... வாய்மை சுவர்க்கத்தின் வாயிற் கதவு... வாய்மையே சித்தி நிலையின் படிக்கட்டு" என்று பகவான் மகாவீரர் கூறுகின்றார்.

"பொய் பேசுவதால் அவமானம் ஏற்படுகிறது; பகைமை வளருகிறது; மனத்தில் வருத்தமும் வளருகிறது... உலகத்

திலுள்ள எல்லா மகான்களும் பொய்மை இகழ்ந்திருக்கிறார்கள்... துன்புறுத்தலை உண்டாக்கும் பொய்யைப் பேசாதே'' என்றும் பகவான் மகாவீரர் உபதேசிக்கின்றார்.

''தன்னைப் புகழ்ந்து கொள்ளுவதும், பிறரை இகழ்ந்து பேசுவதும் பொய்க்கு இணையானதே'' என்பது பகவான் மகாவீரரின் கொள்கை. பொய்மைக்கு ஒரு புதிய பரிணாமத்தை இங்கே காண்கின்றோம். பொய் என்பது உண்மையில்லாததைப் பேசுவது மட்டும் அல்ல. பிறரை இகழ்ந்து பேசுவது, தன்னைப் புகழ்ந்து கொள்ளுவது ஆகியவையும் பொய்க்கு இணையான செயல்களே என்று பகவான் மகாவீரர் குறிப்பிட்டிருப்பது ஆழ்ந்து சிந்திக்கத் தக்கது ஆகும்.

சத்தியத்தைப் பேச வேண்டும் என்பது பகவான் மகாவீரரின் அறிவுரை. ஆனால் எது சத்தியம்? பொய்யில்லாதது என்பதால் மட்டும் ஒன்று சத்தியம் ஆகிவிடாது. சத்தியம் எது என்பதற்குப் பகவான் மகாவீரர் இலக்கணம் வகுத்திருக்கிறார். ''சத்தியம் என்றாலும், பாவம் தரும் சத்தியத்தைப் பேசுதல் கூடாது... உண்மைப் பேச்சும் கடுமையாக இருப்பின் அதைக் கூறாதே'' என்பது பகவான் மகாவீரரின் எச்சரிக்கை.

'' பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.''

— திருக்குறள்; வாய்மை: 7

என்பது வள்ளுவம்.

சத்தியம் பேணுதல் என்பதில் நமது பணிகளும் — செயல்களும் — சத்தியமானவையாக இருக்க வேண்டும். ஆம்; சத்திய நெறி, சிந்தனை, சொல், செயல் ஆகிய அனைத்திலும் அமைய வேண்டும். நமது சிந்தனைகள், நமது பேச்சு, நமது செயல்கள் அனைத்தும் சத்திய நெறியின் வழி இருக்க வேண்டும்.

சத்தியம் அல்லது வாய்மை என்பது மற்றவர்க்கு ஒரு சிறிதும் தீமை இல்லாத சொற்களைச் சொல்லுதல் ஆகும். எனவே அகிம்சை நெறியைப் பின்பற்றுகின்ற பெரு மக்களால் மட்டுமே சத்திய நெறியையும் பின்பற்ற முடியும்.

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின், அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று"

—திருக்குறள்; வாய்மை: 7

என்று திருவள்ளுவர் மிகத் தெளிவாக இதனைக் குறிப்பிடு கின்றார்.

வாய்மையின் நல்ல பிற இல்லை என்பதும் அவரது வாக்கு ஆகும்.

பகவான் மகாவீரர் வாழ்க்கையில் நெறிகளுக்கு முதலிடம் தந்தார். மனிதன் பிறப்பினால் மட்டும் உயர்ந்தவன் அல்லது தாழ்ந்தவன் ஆகமாட்டான் என்று அவர் உறுதியாகக் கூறினார். ஒருவர் தமது பணிகளினால் மட்டுமே தாம் வாழுகின்ற வாழ்க்கையினால் மட்டுமே உயர்வு பெறுவார் அல்லது தாழ்வு அடைவார்.

ஆம்; மனிதனின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் மனிதனே காரணமாக அமைகிறான். மனிதனின் செயல்கள் அவனை வீழ்த்தும் அல்லது உயர்த்தும் என்பது பகவான் மகா வீரரின் போதனை.

சத்திய நெறியைப் போற்றி வாழுகின்றவன் உயருவான். சத்திய நெறியைப் புறக்கணித்து உழல்பவன் தாழ்வான்.

பகவான் மகாவீரர் போதித்து அருளிய சத்திய நெறியை நாம் அனைவரும் பின்பற்றித் தனி மனித அளவிலும் சமுதாய அளவிலும் உயர்ந்து "சத்தியமேவ ஜெயதே" — "வாய்மையே வெல்லும்"— என்ற தேசியப் பிரகடனத்திற்கு ஏற்றவர்களாக நம்மை ஆக்கிக் கொள்ளு வோமாக.

III

## புலனடக்கமும், மிகுபொருள் விரும்பாமையும்

பகவான் மகாவீரர் ஜைனர்களின் 24-வது தீர்த்தங்கரர். தீர்த்தங்கரர் என்னும் சொல். சதுர்வித சங்கம்-சாது, சந்நியாசினி, சிராவகர், சிராவிகை— என்னும் நான்கு பிரிவடங்கிய ஒரு சங்கத்தை நிர்மாணம் செய்தவர் —அதன் மூலம் பிறவிப்பெருங்கடலில் உழன்று தத்தளிக்கும் அன்மாக்களைக் கரையேற்றுபவர் என்று பொருள்படும். தீர்த்தம் என்றால் நீர் நிலை. கரர் என்றால் கரையேற்று பவர் என்று பொருள்.

ஓர் ஆன்மா வீடு பேற்றை அடைவதற்கு மூன்று பண்புகள் அவசியம். எது நல்லது என்பதை முதலில் அறிய வேண்டும்; பிறகு இதுதான் மிகவும் நல்லது என்று தெளிந்து உணர வேண்டும்; தெளிந்த பிறகு அதைக் கடைப் பிடிக்க வேண்டும். இவற்றை ஜைனர்கள் நற்காட்சி, நல் ஞானம், நல்லொழுக்கம் என்பர்:

இந்த மும்மணிகளைச் சரியான நம்பிக்கை, சரியான அறிவு, சரியான நடத்தை என்றும் குறிப்பிடலாம்.

ஆன்மா கரையேறுவதற்காகப் பகவான் மகாவீரர் வழங்கிய போதனைகள் அவரது நேர் வழிச் சீடர்களான பதினொரு கணதரர்கள் வழியாகச் சூத்திரங்கள், சூத்திராங்கங்கள் என்னும் பெயருடன் நமக்குக் கிடைத்திருக்கின்றன.

பகவான் மகாவீரர் வழங்கி அருளிய ஐந்து மிக முக்கியமான போதனைகளில் பிரம்மசரியம் (புலனடக்கம்), அசௌரியம் (கள்ளாமை), அபரிகிரகம் (மிகுபொருள் விரும்பாமை) ஆகியவை அடங்கும்.

பகவான் மகாவீரர் வழங்கிய இந்தப் போதனைகள் பிரத்தியட்ச வாழ்க்கைக்கு இன்றியமையாதவை. சமுதாய

அமைதி, தேசிய ஒருமை, சர்வதேச சகோதரத்துவம் ஆகியவற்றுக்கு மிகுபொருள் விரும்பாமையும் கள்ளா மையும் அவசியம். அபரிகிரகம் என்பது வன்முறைக்குச் சிறிதும் இடம் தராத பொது உடைமைக் கோட்பாடு என்றே கூறலாம். அபரிகிரகக் கோட்பாடு தேவைக்கு மேல் விரும்பாதே என்று கட்டளை தருகிறது. சமுதாயத்தில் பொருளாதார நீதி நிலவவும், ஏற்றத்தாழ்வு அகலவும். செல்வம் நியாயமாக விநியோகிக்கப்படவும் வேண்டும் என்ற விழுமிய கருத்து இந்தக் கோட்பாட்டுக்கு அடிப்படையாக அமைகிறது.

வன்முறை தவிர்த்த வழியைப் பகவான் மகாவீரர் காட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. உடைமை களைத் தாமாகவே கட்டுப்படுத்திக் கொண்டால் பொருளா தாரத்துறையில் சீர்மை அமைந்து, நிம்மதியும், அமை தியும், மகிழ்ச்சியும் தோன்றும்.

ஆசைக்கு அளவில்லை. ஆசையின் விளைவாகப் பூசல்கள் ஏற்படுகின்றன. பூசல்கள் அமைதியைக் கெடுக் கின்றன. மிகுபொருள் விரும்பாமை என்ற பகவான் மகாவீரரின் போதனை ஆசையைக் கட்டுப்படுத்த வழி வகுக்கிறது.

"வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை;
யாண்டும் அஃதொப்பது இல்"

—திருக்குறள்; அவாவறுத்தல்: 3

என்பது திருவள்ளுவரின் வாக்கு.

அது வேண்டும், இது வேண்டும் என்ற பதைபதைப்பு நீங்கிய நிலைமை போன்ற சிறந்த செல்வம் இவ்வுலகில் இல்லை என்று திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். பகவான் மகாவீரரின் அபரிகிரகக் கோட்பாட்டை இந்தக் குறள் மிகவும் அருமையாக வலியுறுத்துகிறது.

அசௌரியம் (கள்ளாமை), அபரிகிரகம் (மிகுபொருள் விரும்பாமை) ஆகியவை ஒன்றுக்கொன்று அனுசரணை யானவை. பிறர் பொருளை பிறர் அறியாத வகையில்

வஞ்சித்துக் கொள்ளுவோம் என்ற எண்ணம் கூடாது என்று அசௌரியம் போதிக்கிறது. மிகுபொருள் வேண்டாம் என்று அபரிகிரகம் போதிக்கிறது. இவை இரண்டும் அமைதியான திருப்தியான வாழ்க்கைக்கு இன்றியமை யாதவை.

பகவான் மகாவீரர் பிரம்மசரியம் பேணுக என்றும் போதித்து அருளி உள்ளார். பிரம்மசரியம் அல்லது புலனடக்கம் மனிதனின் உள்ளொளி பெருக்கி உடலைத் தூய்மைப்படுத்தி வலிமை காட்டுகிறது. புலனடக்கம் இல்லாத மனிதன் செயற்கரிய செய்யும் பேராற்றல் பெற்றவனாக அமைய முடியாது.

திருவள்ளுவர் 'பிறர் மனை நோக்காத பேராண்மை' என்ற சொற்றொடரின் மூலம் இதனை எடுத்துக்காட்டி யிருக்கிறார். பேராண்மை என்ற சொல்லைக் கவனியுங்கள். புலனடக்கத்தால் விளைகின்ற நிலை சாதாரண ஆண்மை அல்ல. பெரிய ஆண்மை ஆகும்.

புலனடக்கம் மனிதனைத் தூய்மைப்படுத்துகிறது. தூய மனிதனின் சிந்தனைகள் தூய்மையானவையாக, சமுதாய நலனுக்கு உதவுபவையாக அமையும்.

பகவான் மகாவீரர் பிரம்மசரியம் பேணுக என்று மனித குலத்தின் நலனைக் கருதிப் போதித்து அருளினார். புலனடக்கம் இல்லாதவனிடம் பகை, பாவம், அச்சம், பழி ஆகிய குற்றங்களும் அகலாது என்று தெய்வப் புலவர் திருவள்ளுவர் எச்சரித்துள்ளார்.

நாம் பெரிய சமுதாயத்தில் வாழ்கிறோம். சமுதா யத்தில் அமைதியின்மை, ஆலைகளில் வேலை நிறுத்தம், மனிதர் ஒருவரையொருவர் சுரண்டி வாழும் போக்கு, வன்முறைக் கிளர்ச்சிகள், வகுப்புகளிடையே மோதல்கள் போன்ற அனைத்துக்கும் இடம் தராமல் மனித குலம் வாழப் பகவான் மகாவீரர் போதித்த அபரிகிரகம், அசௌரியம், பிரம்மசரியம் ஆகிய சீரிய கோட்பாடுகள் துணை நிற்கும்.

# 3

# வர்த்தமான மகாவீரரின் பாதையில் சில நோக்குகள்

## I

### எங்கு நோக்குகிறோம் ?

பகவான் ஸ்ரீ வர்த்தமான மகாவீரர் ஜைன மார்க்கத்தின் சீரிய நெறிகளைத் தமது கடுமையான தவத்தின் மூலம் தெளிவாக உணர்ந்து, தமது இறுதியான முடிவையே உலகிற்கு உபதேசித்துச் சென்றிருக்கிறார். பகவான் ஸ்ரீ மஹாவீரர் மூலமே, ஜைன மார்க்கத்தின் தெளிவான உபதேசங்களையும் அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளையும் நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

அவர் வழியே நமக்கு உணர்த்தப்பட்ட அந்த மார்க்க நெறிகள் என்ன?

மனித சமுதாயம், உண்மையான இலக்கை, அதாவது நிறைவை அடைவதற்கு அந்த நெறிகள் எங்கு நோக்குகிறோம்? ஏன் நோக்குகிறோம்? எவ்வாறு நோக்குகிறோம்? எதனை நோக்குகிறோம் என்பதை எல்லாம் இந்த அறிவார்ந்த மன்றத்தில் தங்களோடு பகிர்ந்து கொள்வதற்குக் கிடைத்த பெரும் வாய்ப்பாகக் கருதி மகிழ்கிறேன்.

'நிர்வாண்' என்ற இந்த அமைப்பின் இலட்சியங்கள் சாதி, சமய, இன வேறுபாடுகளைக் கடந்தவை. மனித

ஆற்றலின் தூய அறிவே, 'நிர்வாண்' என்று சொல்லப் படுகிற பரிசுத்தமானது. பகவான் ஸ்ரீ மகாவீரரின் வாழ்வும், போதனைகளும் அவர் பாதையும் இறுதியில் மகா நிர்வாண நிலைக்கே நமது ஆன்மாக்களை இழுத்துச் செல்கிறது என்பதால், அந் நெறிகள் குறித்து, இந்த 'நிர்வாண்' மன்றத்தில் பேசுவது மிகப் பொருத்தமுடைய தாகவே கருதுகின்றேன்.

எனது அறிவுக்குட்பட்ட வரையில், பகவான் ஸ்ரீ மகா வீரர் மனித சமுதாயம் உய்யக் காட்டிய நெறிகளின் போக்கை நான்கு வகையான பார்வையில் இங்கே இயம்ப முயல்கின்றேன்.

எனது கருத்துகள் மூலம் ஜைனத்தின் முழுப் பரிமாணத்தையும் உணர்த்திவிட முடியும் என்று சிஞ்சித்தும் கருதலாகாது. கிடைத்த அரங்கில், கிடைத்த நேரத்தில், எனக்குள்ள தகுதிகளின் வாயிலாகவே, அதன் நெறிகளைப் புகல்கின்றேன். அவ்வளவு தான்.

எனவே, இதில் நிறைவு என்று அறிவார்ந்த பெரியோ ராகிய தங்களுக்குப் பட்டால், அது ஜைனத்தின் மேன்மை என்றும், 'நிறைவில்லை', எனப்பட்டால் அது எனது குறைந்த ஆற்றலின் விளைவினால்தான் என்பதையும் அருள்கூர்ந்து ஏற்க வேண்டுகின்றேன்.

முன்னதாக—

'ஜைனம்' என்ற மார்க்கம் பற்றியும், பகவான் ஸ்ரீ மகாவீரர் மூலம் அது புத்தொளி பெற்ற வகை குறித்தும், மகாவீரருக்கும் முற்பட்ட பல்லாயிரக்கணக் கான ஆண்டுகளுக்கு முன் ஜைன மார்க்கத்தை உலகில் நிலை நிறுத்திய மகான்களான தீர்த்தங்கரர்கள் குறித்தும் இங்கே சுருக்கமாக நாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

ஏனெனில், ஜைனம் ஒரு மதமாக உலகில் தோன்ற வில்லை. அதை எவரும் தோற்றுவிக்கவும் இல்லை.

ஜைன மார்க்கம், நமது, இதிகாச புராண காலங்களுக்கும் முற்பட்ட காலத்தில் இந்த உலகில் மாந்தர்களாலும், மகரிஷிகளாலும் பின்பற்றப்பட்டு வந்திருக்கிறது என்பதற்கான சான்றுகளை, நமது இதிகாச புராணங்களின் வாயிலாகவே அறியலாம்.

கால, தேச எல்லைகளைக் கடந்து உலகில் காலகாலமாக மக்களால் உயரிய ஆன்மீக ஒழுக்க நெறியாகப் பின்பற்றப்பட்டு வரும் ஜைன மார்க்கம், பகவான் ஸ்ரீ மகாவீரரால், புத்தர் காலத்தே தோற்றுவிக்கப்பட்டது என்ற தவறான கருத்தை நம்மில் பெரும்பாலோர் நம்பி வருகின்றனர். அதற்கு ஊக்கமாக நமது சரித்திரப் பாடப்போக்குகளும் அமைந்துவிட்டன. சரியாக உணர்விக்கப் படாததாலோ அல்லது சரியாக உணர்ந்து கொள்ள வேண்டும் என்ற ஆன்மீக வேட்கை குறைந்து போனதன் காரணமாகவோ, ஜைன மார்க்கம் குறித்த தவறான மதிப்பீடுகள் இன்று பரவியிருப்பதால் அது குறித்த விளக்கத்தை நாம் இங்குச் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

• • •

மதங்கள் என்பது மக்களுக்காகத் தோன்றிய ஓர் ஆன்மீக சாதனம். மனிதர்களாக மண்ணில் பிறந்து, மனிதர்களாக வாழாமல், மனித நிலையிலும் மேம்பட்ட தவத்தோடு வாழ்ந்து, மனிதர்களுக்கான நல்ல நெறிகள் இவை என்று தவத்தின் கனிந்த முடிவுகளாகக் கண்டுணர்ந்த மகான்களின் உபதேசங்கள் மதங்களின் தோற்றத்துக்குக் காரணமாயின.

ஒவ்வொரு கால கட்டத்தில் உலகில் ஆங்காங்கே சில பகுதிகளில் தோன்றிய இத்தகைய மகான்கள், அவர்கள் மனிதர்களாகப் பிறந்த போதும், வாழ்க்கையில் பிறரைப் போல் அனுபோகத்திலும், ஆடம்பரத்திலும் ஆசை வைக்காமல் ஆசைகளைத் துறந்து பற்றற்ற நிலையில் வாழ்ந்து, தங்கள் மனத்துக்குள் தோன்றிய மகத்தான கருத்துகளை

மற்றவர்களுக்கு எடுத்துச் சொன்னார்கள். அவர்களைப் பின்பற்றிய மக்கள், அந்த மகான்களின் உபதேச வழிகளுக்கேற்ற மார்க்கத்தினர் ஆயினர். அதற்குத் தக்கவாறு தங்களை 'இன்ன மதத்தினர்' என்று அறிவித்துக் கொண்டனர். காலப்போக்கில் அந்தந்த மதங்கள் விரிந்து, உலகெங்கும் பரவிவிட்டன. அப்படிப் பரவிய மதங்களாக, இன்று உலகில் ஏராளமான அளவில் மதங்கள் இருப்பதைக் காண்கிறோம்.

இருப்பினும் மதங்கள் வளர்ந்து மக்களால் பெரும் எண்ணிக்கையில் பின்பற்றப்பட்டும், அந்த மதங்கள் உபதேசித்த கொள்கைகளை அந்தந்த மதத்தினர் பெரிய அளவில் கொண்டாடியும் கூட, அந்த மதங்கள் மனிதர்களுக்குச் சொல்கிற மார்க்கங்களான அமைதியும், தார்மீக ஒழுக்கங்களும் உலகில் செழித்து, மனிதர்களுக்குள்ளேயே அன்பும், நேசமும், சகோதரத்துவமும், 'வளர்ந்திருக்க வேண்டிய அளவுக்கு' வளர்ந்ததாகத் தெரியவில்லை. இன்று எங்கு நோக்கினும் நாட்டுக்கு நாடு சண்டை, போர், நூற்றுக்கணக்கில் மனித உயிர்கள் பலி, ஒரு தேசத்துக்குள்ளே மதவாதப் போராட்டங்கள், ஒரு மதத்துக்குள்ளேயே இனவாத வெறிகள், ஓர் இனத்துக்குள்ளேயே ஏற்றத் தாழ்வுக் கொடுமைகள், இன்னும் சொல்லப் போனால் ஒரு குடும்பத்துக்குள்ளேயே ஒருவருக்கொருவர் பகைத்துக் கொள்கின்ற இழிவுநிலை...இத்தியாதி...இத்தியாதி...அவலங்களைக் காண்கிறோம்.

இதற்குக் காரணம் என்ன? மதங்களின் நோக்கங்கள் பொய்யானவைகளா? இல்லை. எல்லா நதிகளும் பள்ளத்தை நோக்கியே பாய்கின்ற தன்மை கொண்டதே போல், எல்லா மதங்களும், மனிதனின் ஆழ்ந்த அறிவாகிய உள்ளத்தை நோக்கியே பாய்கின்றன. (அந்த நதிகளுக்கு அணை கட்டி, அதன் நீர்ப் போக்கைத் தடுத்து, திசை திருப்பி விடுவது மனிதர்களே என்பது வேறு விஷயம். அது விரிவாக, விமர்சிக்கத் தக்கது). மனிதனுக்கு எது நன்மை?

எது தீமை? என்று பகுத்துணரும் அறிவு இருந்தபோதும், அந்த அறிவை அவன் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாததே மதங்கள் போதிக்கும் உண்மை நோக்கங்கள் சிதைந்ததன் காரணம் ஆகும்.

இன்றைய உலகில் மதங்கள் போதிக்கின்ற மார்க்கங்களை ஆராய்ந்து தெளிவதற்குக் கூடப் புதிய சிந்தனைகள், ஆராய்ச்சியாகவும், உயர் கல்விப் பாடங்களாகவும் மலர்ந்து உலகெங்கும் விரிந்துள்ளன. கால கட்டத்தின் பரிணாமத்துக்கேற்பச் சிந்தனைகள் வளர்ந்த நிலையிலும் கூட, ஒரு தனி மனிதன், தனது மனித இயல்புக்குரிய மேலான பண்புகளைக் கடைப்பிடித்தால் ஒழிய, இந்த உலகில் எந்த மதங்களாலும், எந்தச் சட்ட திட்டங்களாலும், மானிட சமுதாயத்துக்கு உரிய செழிப்பை ஏற்படுத்தித் தர முடியாது.

தனி மனித உணர்வுகள் பண்படையாவிட்டால் எந்தத் தத்துவங்களாலும், விஞ்ஞானக் கண்டு பிடிப்புகளாலும், வேறு எவற்றாலும் பயன் இல்லாது போய் விடும்.

மனித சமுதாயம் என்பது, இந்த உலகில் மானிடராகப் பிறந்த நாம், அனைவரும் சேர்ந்த ஒன்றுதான். மானுட சமுதாயமே ஒட்டு மொத்தமாகப் பண்பட்டு, அமைதியும் இன்பமும் பெற்று வாழ்ந்திருக்க வேண்டுமானால், அதன் அங்கமாகிய ஒவ்வொரு மனிதனும் மனத்தால் பக்குவப்பட்டு, உண்மை அறிவோடு வாழ வேண்டியது அவசியம் ஆகிறது.

இந்த அவசியத்தை வலியுறுத்தியே, பண்டைய காலத்தில் வாழ்ந்த நமது முன்னோர்களில் பலர், ஆழ்ந்து சிந்தித்தும், அதற்குரிய நெறிமுறைகளை வகுத்தும் அதன் படி வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர்.

அவர்கள் ஆய்ந்து, நுணுகித் தெளிந்த முடிவுகளின்படி, மனிதராகப் பிறந்த எவரும், மற்ற உயிரினங்களை

விடவும் உயர்ந்த நிலையில் இருப்பவரே என்பதையும், மற்ற உயிரினங்களைக் காட்டிலும் மனிதனே இந்த உலகை ஆளவும், கட்டுப்படுத்தவும், கட்டுப்படவும் ஆன அறிவை விசேஷமாகப் பெற்றிருக்கிறான் எனவும் உணரப் பட்டது. அத்தகைய உயர்ந்த பிறப்பாகிய மனிதன், துன்பத்தில் அழுந்துவதற்குக் காரணம் அவனது இச்சையின் எதிர் விளைவுகளே என்பதை உறுதியாகவும், இறுதி யாகவும் தீர்மானித்த நம் முன்னோர்கள், மனிதன் ஆசை களை வென்று, அடங்கி வாழ்வதே உயர்ந்த நிலையாகும் என்று உலகிற்குத் தெரிவித்தனர்.

**" அடக்கம் அமரருள் உய்க்கும், அடங்காமை**
**ஆரிருள் உய்த்து விடும்."**

—திருக்குறள் ; அடக்கமுடைமை: 1

என்ற குறட்பாவின் சிந்தனைகள் அவர்களது வாழ்வியல் நெறியாயிற்று. ஆகவே, 'ஆசைகளை வென்றவனே' துன்பத்தை வென்றவனாகிறான். துன்பம் அற்றிருப் பதற்கு வழி, மனிதன் இச்சைக்கு அடிமையாகாமல் தூய நெறிகளோடு, விருப்பு வெறுப்பற்ற உணர்வில் வாழ்வது தான் என்பதை இறுதியாகத் தெளிந்து, அதற்கான பாதையை இல்லறத்திலிருந்து சிந்தித்து, அந்த வாழ்வுக்கு உரிய சிறப்பாக எவ்வுயிர்க்கும் இம்சை உண்டாக்காதவாறு தங்கள் ஒழுக்கங்களை மேற்கொண்டனர். ஆகவே, 'அகிம்சை' என்ற ஒப்பற்ற நெறியே, உலகில் உள்ள மனித உயிரின் தலையாய ஒழுக்கம் என்பது அவர்களின் முடிவான கொள்கையாயிற்று.

இந்த அகிம்சையையே ஆதார நெறியாகக் கொண்டு மானுட சமுதாயத்தில் ஒரு பிரிவினர், தங்களுக்கென்ற தூய வாழ்வை அமைத்துக் கொண்டனர். ஏனெனில், 'அகிம்சை' ஒன்றினாலேயே உலகில் அமைதியும், நீதியும், உண்மை இன்பமும் நிலைத்திருக்க முடியும் என்பதை அவர்கள் உறுதிப்படுத்திக் கொண்டனர். அதற்காகத்

தங்கள் வாழ்க்கையில், அகிம்சையை ஒரு போதும் வழு வாதவாறு உறுதியாகக் கடைப்பிடித்து வந்தனர். அகிம்சையின் உயர்வான ஒழுக்கத்துக்காக, அவர்கள் தங்கள் உடலுக்கு நேர்ந்த பசி, நோய் முதலான துன்பங் களைப் பொறுமையோடு தாங்கிக் கொண்டதன் மூலம், தங்களைத் தாங்களே வருத்திக் கொள்ளவும் தலைப் பட்டனர். இதன் மூலம் வாய்மை, நேர்மை, தூய்மை, பணிவு, எளிமை, இரக்கம் முதலான மனித இயலைப் பெருமைப்படுத்துகின்ற குணங்கள் அவர்களது வாழ்வின் அங்கங்களாயின. இத்தகைய ஒழுக்க இயலின் மூலமே அவர்கள் 'உலகை வென்றவர்கள்' ஆயினர். இந்த உலகில் அவர்களுக்குப் பிறரால் ஏற்படுகின்ற துன்பங்கள், அவர்களை அணுக இயலாதவாறு நற்குணக் கோட்டையாக 'அகிம்சை' என்ற தத்துவம் அவர்கள் பெற்ற தவநெறி யாயிற்று. ஆகவே, இந்த நெறியை வழுவாது வாழ்ந்து காட்டியதன் மூலம் 'உலகை வென்றவர்கள்' என்ற உன்னதப் பெருமைக்கு அவர்கள் ஆளாயினர். அவர்களே 'ஜைனர்கள்' என்று பிந்தைய உலகம் அவர்களுக்குப் பேர் சூட்டிற்று.

''ஜைனர்கள்'' என்றால் 'வென்றவர்கள்' என்பது பொருள். 'ஜினா' (Jina) என்று பிராகிருத மொழிச் சொல்லின் வழியே வழங்கப் பெற்றதே 'ஜைன்' என்கிற வார்த்தை. 'ஜெயம், ஜெயிப்பு' என்பதெல்லாம் வெற்றியைக் குறிக்கின்ற வடமொழி வார்த்தைகள் என்பதை இன்று நாம் நன்கு அறிவோம். ஆகவே, 'ஜெயினன்' என்றால் உயர்ந்த நெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகியதன் மூலம், 'உலகாயுதப் பற்றை வென்றவன்' (Conqueror) என்ற சிறப்புக்குரியவன் ஆனான்.

இதுவே இன்று நாம் உணர்கின்ற ஜைன மதத்தின் பெயர்க் காரணம் ஆயிற்று. தமிழ்நாட்டில் ஜைனமானது 'சமணம்'—'ஆருகத மதம்' என்றும் குறிக்கப்பட்டது. ஆகவே, உண்மையில் ஜைனமானது ஒரு மதம் அல்ல; அது

வாழ்க்கை நெறியே என்பதை நாம் இன்று கருத்தில் கொள்ள வேண்டும். உலகில் தோன்றிய புதிய மார்க்கங்களின் விளைவாகப் பண்டைய மாந்தரில் குறிப்பிட்ட பகுதியினர்—குறிப்பாக நமது பாரத மண்ணின் முன்னோர் 'அகிம்சையை'க் கடும் தவத்தோடு, அதாவது விடா முயற்சியோடு கடைப்பிடித்து ஒழுகி, வேறு எந்தப் புதிய சிந்தனைகளிலும் தங்கள் வாழ்க்கையைச் சிதைத்துக் கொள்ளாது வாழ்ந்த காரணத்தால், பிற்காலத்தே மலர்ந்த புதிய மார்க்கங்களின் கண்களுக்கு, அவர்கள் 'ஜைனர்கள்' என்ற வேறுபட்ட மதத்தவராக முத்திரை குத்தப்பட்டனர். இவ்வாறு உலக வழக்கில் 'ஜைனம்' என்பது, ஒரு மதமாகப் பாவிக்கப்பட்டது.

பிற்காலத்தில், மனித சமுதாயம் விரிய, விரிய, மனிதர்களுக்கு ஆசைகளும் விரிந்து, அதன் விளைவுகளாகத் துன்பங்களும் பெருகின. எனவே, மனித இயல்புகளுக்கு மாறுபட்ட குணக்கேடுகள், மனித சமுதாயத்தின் அங்கமாய் இணைந்ததன் காரணமாக வலிமையுள்ளவன் எளியவனை அடக்கி ஆள்வதும், சமுதாய ஏற்றத் தாழ்வு வெறிகளாலும், அரசாட்சிக் கொடுமைகளினாலும், போர் வெறி, கொள்ளை, யுத்தங்கள் பெருகி, மனித சமுதாயம் துன்பத்தில் மூழ்கத் தொடங்கிற்று. அக்கிரமங்களும், அநீதிகளும் உச்சநிலை அடைந்த கால கட்டங்களில் எல்லாம், அதன் கொடுமைகளிலிருந்து மனித உயிர்களை மீட்பதற்கான பாதையைத் திறந்து விட, ஜைன மகான்கள் தோன்றினர். அந்த மகான்கள் ஏதோ ஒரு புதிய கருவியையோ, மந்திர சக்தியையோ கையில் வைத்துக் கொண்டு மனித சமுதாயத்துக்குப் புதிய பாதையைத் திறந்து காட்டவில்லை. அவர்கள் கடுந்தவத்தை மேற்கொண்டு, தங்களைத் தாங்களே அடக்கிக் கொண்டு, மனித இயல்புக்கே உரிய ஒப்பற்ற உயர்ந்த நெறியான 'அகிம்சையை' அதன் மகத்தான பரிணாம இயல்புகளை, தாங்கள் வாழ்ந்த கால கட்டத்தில் உள்ள மன்னர்

களுக்கும், மக்களுக்கும், தங்கள் தவ வாழ்க்கையின் மூலம் உணர்த்தினர். அவர்கள் எவ்வுயிரையும் பேதமற உணர்ந்து, அவ்வுயிர்களின் துன்பங்களை அறுக்கின்ற அகிம்சையின் முழுப் பரிமாண உயர்வாக வாழ்ந்து உண்மை ஒளி பரப்பினர். அவர்களே 'தீர்த்தங்கரர்கள்' என மாந்தராலும், வேந்தராலும் மதிக்கப்பட்டனர்.

'தீர்த்தங்கரர்' என்றால் 'உண்மை ஒளி பரவியவர்' அதாவது, பரிசுத்தமானவர் 'PURE SOUL' என்று பொருள். இதைத்தான் 'பரிசுத்த ஆவி' என்று பைபிளிலும் சொல்வார்கள்.

அதாவது, இறைத் தன்மையாளராக, பிற மனிதர் களை ஈடு சொல்ல முடியாதவாறு, ஒப்பற்ற உண்மை ஒழுக்கத்தை மேற்கொண்ட தவமுனிகளாக வாழ்ந்து, இந்த உலகில் அகிம்சையே, மனிதனின் உயர்வான நெறி, என்பதை உணர்த்தி, அகிம்சையின் மூலம் உலகில் அன்பும் அமைதியும் இன்பமும் ஓங்கியிருக்கும் பாதையைக் காட்டியவர்களே 'தீர்த்தங்கரர்கள்' ஆவார்கள்.

இந்தத் தீர்த்தங்கரர்கள், ஜைன நெறிகளின் மேம்பட்ட சீலர்களாக, அந்நெறிகளைப் பின்பற்றி வாழும் சமுதாயத்தின் வழிகாட்டிகளாக மதிக்கப்பட்டு மக்களின் வணக்கத்துக்குரியவர்களாயினர்.

இதுதான், ஜைன நெறிகள் உலகில் மதமாகக் கருதப் பட்டதன் உண்மையும், 'ஜைனம்' என்றென்றும் அழியாது உலகில் ஒளி வீசி நிலைபெற்றிருக்கச் செய்த தீர்த்தங்கரர் களின் வரலாறும் ஆகும்.

காலப் பிரளயங்களினால் நமது உலகின் பூர்வீக வரலாறு, ஆதார பூர்வமான சரித்திரச் சான்றுகளாக நமக்குக் கிடைக்கவில்லை.

அதேபோல், இன்றைய உலகில் விஞ்ஞான அறிவு விண்வெளியை அளக்கின்ற வரை விரிவடைந்த போதிலும்,

உலக சமுதாயத்தில் மனிதனுக்கே உரிய இயல்பான குணங்களான உண்மை, அன்பு, அறம், தியாகம், ஒழுக்கம், நேர்மை, தூய்மை முதலான நற்குணங்களை நிலை நிறுத்துகின்ற அதன் விஞ்ஞான மகத்துவம் விளைந்ததாகத் தெரியவில்லை.

எவ்வாறாயினும் 'அகிம்சை' என்ற 'மேம்பட்ட ஒழுக்கம்' ஒன்றே உலகை உய்விக்கக் கூடியது என்ற உண்மையை காலகாலமாக மனிதனுக்குப் போதிக்கின்ற தத்துவம்தான் 'ஜைனம்' என்பதையும், ஜைன நெறியின் உயிர் மூச்சே அகிம்சைதான் என்பதையும், உலகில் உள்ள மதங்களை விடவும் இந்த ஜைனம் ஒன்றே அகிம்சையை நோக்கி மனிதனை விரைவாகச் செலுத்துகின்ற தனித் தன்மை கொண்டது என்பதையும், காலத்தின் மாறுதல் களுக்கேற்ப, அந்த நெறிமுறைகளைச் செப்பனிட்டும், அவற்றை ஒட்டிய புதிய ஒழுக்கங்களை, உண்மையான ஞானத்தின் செழுமை குறையாமல் கற்பித்தும் அவ்வப் போது ஜைன மார்க்கத்தில் தோன்றிய தீர்த்தங்கரர்கள், மனித சமுதாயம் மேம்பாடுற்றிருக்கும் உயர்ந்த ஒழுக்கங் களைக் காத்து வந்தனர் என்பதையும் இங்கே நாம் சிந்திக்க வேண்டும். தீர்த்தங்கரர்களின் போதனைகளை ஏற்றுக் கொண்டவர்கள் ஜைனர்கள் என்பதும் அவர்கள் நெறியே ஜைனமதம் என்பதும் இன்றைய உலகில் நாம் உணருகின்ற ஆன்மீக சாதகர்களும், சாதனமும், ஆவர். நாம் இன்று, ஜைனமார்க்கத்தின் புத்தொளிச் சுடராக உணர்ந்து, போற்றி, வணங்கி வருகிற பகவான் ஸ்ரீ மகா வீரர், இந்தத் தீர்த்தங்கரர்களில் ஒருவர் என்ற விளக்கத் திலிருந்து, இங்கே ஜைன நெறிகளின் போக்கை நோக்கி யிருக்கிறோம்.

தீர்த்தங்கரர்கள் என்று குறிப்பிடப்படும் தவ முனிவர்கள், புராணங்கள் வாயிலாகவும் புராணிகர்கள் வாயிலாகவும், நமக்குத் தெரிந்த வரை 24 பேர்கள்.

இந்த 24 பேர்களிலும் கிட்டத்தட்ட பெரும்பாலோர் பழம் பெரும் புராண, இதிகாசங்கள் தோன்றிய வரலாற்றறிவுக்கு முந்திய காலம் என்று கருதப்படும் கால கட்டத்தில் வாழ்ந்தவர்கள். 24 தீர்த்தங்கரர்களில் 23-வது தீர்த்தங் கரர், பார்சுவத நாதர் என்பதும், 24-வது தீர்த்தங்கரர் பகவான் மகாவீரர் என்பதும் வரலாற்றுப் பூர்வமாக நாம் அறிந்து கொள்ள முடிகிறது. பார்சுவத நாதர், தமது காலத்தில், மங்கிப் போயிருந்த சமுதாய ஒழுக்கத்தைப் புதுப்பித்து ஜைன நெறிகளை மீண்டும் உலகிற்குப் போதித்தார். அவருக்குப் பிறகு, கிட்டத்தட்ட 250 ஆண்டுகளுக்குப் பிறகு, தோன்றிய ஸ்ரீ வர்த்தமானர் என்னும் பகவான் மகாவீரர், ஜைன நெறிகளை முறைப் படுத்தி, இந்த உலகில் வாழ்கின்ற மனிதர்களாகிய நாம் கடைப்பிடிக்க வேண்டிய மார்க்கத்தை உபதேசித்தார். பகவான் மகாவீரர் உபதேசித்ததோடு மட்டுமின்றி மிகக் கடுமையான தவ வாழ்வில் நின்று வாழ்ந்தும் காட்டியதால், அவரது போதனைகள் அவர் காலத்திய மன்னர்களாலும், மக்களாலும் கவரப்பட்டு, மகாவீரரின் மார்க்கம் புத்தொளி பெற்ற ஜைன மார்க்கமாக உலகின் பிறபகுதி களுக்கும் பரவலாயிற்று. பகவான் மகாவீரருக்குப் பிறகு சமீப காலம் வரை ஜைன மார்க்கத்தில் தோன்றிப் பெரும் தபசிகளாக வாழ்ந்தவர்கள் ஏராளமாக இருந்த போதிலும், அவர்கள் அனைவரும் பகவான் மகாவீரரின் மார்க்கத்தையே மக்களுக்கு உபதேசித்தவர்கள் என்பதால், மகாவீரருக்குப் பிறகு தீர்த்தங்கரராக எவரும் ஜைன மார்க்கத்தில் கருதப்படவில்லை; உருவாகவில்லை. ஆகவே, 24வது தீர்த்தங்கரராகவும், ஜைன மார்க்கத்தில் இதுவரை உலகில் கடைசியான தீர்த்தங்கரராகவும் பகவான் மகாவீரர் போற்றப்படுகிறார்.

அவர் நமக்கு உணர்த்திச் சென்ற நெறிகள் மூலம் 'மனித உயிரின் இறுதிப் பக்குவம்' என்பது உயிரின் பிறப் பற்ற தன்மையாகிய 'பரிநிர்வாண நிலையே' என்பதை

நாம் உணர முடியும். மனித உயிர் இந்தப் பரிநிர்வாண நிலையை அடைகின்ற இலக்கு எதுவோ, அதை நோக்கியே மனிதனை பகவான் ஸ்ரீ மகாவீரரின் வாழ்க்கைத் தத்துவத்தின் பாதையாக ஜைனம் செலுத்த நோக்குகிறது. ஆகவே, இந்த நோக்கிலிருந்து,

(1) 'Where do you look?' என்ற கேள்விக்கு விளக்கமாக, 'பரிநிர்வாண நிலையாகிய இலக்கு' என்பதற்கும்;

(2) மனித உயிரின் இறுதி நிலையான 'பரிநிர்வாணம்' ஒன்றினால் மட்டும் உலகில் இன்ப துன்பம் அற்று அது பேரின்ப நிலையில் நிலைத்திருக்கும் இறைத்தன்மைக்கு உயர்கிறது என்பதையே 'Why do you look?' என்பதற்கும்;

(3) ''பரிநிர்வாணம்'' என்கிற முக்தி நிலைக்கு, மனித உயிர் உயர்வதற்குரிய, நெறிகளைக் கடைப் பிடிக்கின்ற ஒழுக்கத்தையே'' 'How do you look?' என்பதற்கும்;

(4) ஜைன ஒழுக்கங்களை வகைப்படுத்தி, அவை என்னென்ன?' 'எந்தெந்தத் தகுதியில் இருப்பவர்கள், எந்தெந்த நெறிகளை, எவ்விதம் கடைப்பிடித்து ஒழுக வேண்டும்? என்று விதிப்பதன் மூலம் 'What do you look?' என்ற கேள்விக்கும் விடைகளாக ஜைன மார்க்கம் தத்துவ விளக்கம் தருகின்றது.

எனவே, ஜைனத்தின் இறுதி நோக்கமான 'பரிநிர்வாண நிலையே' 'Where?' என்பதற்கும் அந்த நிலையை உரைக்கின்ற பாதையில் செல்ல வேண்டியதன் அவசியத்தையே 'Why', என்பதற்கும், அந்தப் பாதையில் இருக்கின்ற ஒழுக்க நெறிகளின் தன்மைகளையே 'How?' என்பதற்கும், அறநெறிகளின் தன்மைக்கேற்ற 'சாதகனின் இலட்சணங்களையே, 'Wha ?' என்பதற்கும், விடையாக, பகவான் ஸ்ரீவர்த்தமான மகாவீரர் காட்டுகின்ற ஜைனத்தின் விடையாக, பார்வையாக நாம் உணரலாம்.

மனிதன் அடைகின்ற 'பரிநிர்வாண' நிலைக்கு உதாரணமாகத் திகழ்ந்தவர் பகவான் ஸ்ரீ மகாவீரர். சகல இன்பங்களையும் அனுபவிக்கக் கூடிய அரச குமாரனாகப் பிறந்த வர்த்தமானர், தன்னைச் சூழ்ந்துள்ள உலகில் நடக்கின்ற கொடுமைகளைக் கண்டு கழிவிரக்கம் கொள் கிறார். அதன் விளைவாக மனித உயிரின் உன்னத நிலைக்கு உரிய உண்மை நெறிகளைக் கண்டறியும் ஞான வேட்கை அவருள் எழுகிறது. அதன் உந்துதலினால் அரச போகம் அனைத்தும் துறந்து காட்டிற்கு ஏகி, கடுந்தவம் மேற் கொள்கிறார். மௌன நிலை, யோக நிலையில் இருந்து, ஊண், உறக்கம், தாகம், மெய் வருத்தம் மற்றும் காற்று, மழை, வெயில், விஷ ஜந்துக்களால் நேரும் உயிர் உபாதை அனைத்தையும் உணராத நிலையில் கடந்து, ஜடம் போல் அமர்ந்து பல்லாண்டுகளாகத் தவத்தில் ஆழ்ந்து விடுகிறார். ஒப்பரிய அக் கடுந்தவத்தின் விளைவாக அவர் கேவல ஞானத்தை அடைகிறார். 'மனிதன் யார்?' 'எங்கிருந்து வருகிறான்?' 'எங்கே செல்கிறான்?' இந்த உலகம் என்பது என்ன? இதில் உயிர்களின் பக்குவம் என்ன? அவற்றின் உண்மையான குணங்களும், உண்மையற்ற குணங்களும் என்ன? ஆசைகளினால் மனிதன் அடையும் பயன்கள் என்ன? அதன் முடிவான நோக்கம் யாது? என்பதெல்லாம் அவரது கேவல ஞானத்தின் மூலம் அவருக்குள் தெளிவா கிறது.

அந்த நிலையிலேயே அவர் தன்னைப் பரிபக்குவ நிலையில் சமாதி கொள்ளச் செய்திருக்க முடியும். ஆனால் இந்த உலகின் உயிர்களிடத்தில் கொண்ட கழிவிரக்கம் காரணமாக, தான் கண்ட உண்மைகளை உலகிற்குக் காட்டி, அதன் மூலம் மனித உயிருக்கு மேன்மை தர வேண்டும் என்ற உணர்வினால் மீண்டும் இந்த உலகியலில் தொடர்பு கொண்டு, தான் தவத்தினால் உணர்ந்த நெறி களையே வாழ்வாகக் கொண்டு வாழ்ந்து காட்டினார்.

லட்சக்கணக்கான மனிதர்களுக்கு அவரது பாதை மூலம் ஜைன நெறிகளின் மேன்மை உணர்த்தப் பட்டது. அவர் காலத்தில், அதாவது கிட்டத்தட்ட இன்றைக்கு 2500 ஆண்டுகட்கு முன், பல்வேறு சமயங்களின் போக்கினால் மூடப் பழக்க வழக்கங்களால், மாந்தர்கள் வாழ்க்கையில் தாழ்வுற்று, மேன்மையான மனித அறிவு தவறிக் கெட்டு, தீ வினைகளால் உழன்றிருந்த மானுட சமுதாயம் மகாவீரர் காட்டிய அறிவொளியால் வெளிச்சம் பெற்றது. மகாவீரரைப் பல்லாயிரக் கணக்கான மாந்தரும் நூற்றுக் கணக்கான வேந்தரும் தங்கள் உண்மை வாழ்வின் ஜீவ ஒளியாகப் பின்பற்றினர். தாம் வாழ்ந்து காட்டிய ஜைன வாழ்வின் சத்திய ஒளி தம் கண்முன் இந்த உலகில் பரவித் தொடங்கியதைப் பார்த்தவாறு, பகவான் ஸ்ரீ வர்த்தமான மகாவீரர் தமது திருவுடலை, நமது 72-வது வயதில் உதிர்த்து, 'பரிபக்குவம்' என்ற மகா நிர்வாணத்தை அடைந்தார்.

அவரது போதனைகளின் உயிர் மூச்சே 'அகிம்சை' என்ற ஒன்றே ஒன்றுதான். இந்த அகிம்சையை அடித்தளமாகக் கொண்டே அவர் பரிபக்குவ நிலைக்கு மனித உயிர்கள் உயர்கிறவாறு ஜைன நெறிகளை உலகிற்குப் போதித்தார். அவரது வாழ்வியலையும் போதனைகளையும் நாம் கடைப் பிடிக்க நல்லறிவு (Right knowledge), நற்காட்சி அல்லது நன்னம்பிக்கை (Right Faith), மற்றும் நல்லொழுக்கம் (Right Conduct) என்ற மூன்று இயல்புகள் அவசியமாகின்றன.

ஜைன நெறிகளைக் கடைப்பிடிக்கின்ற எவரும்—அவர்கள் இல்லறத்தில் இருந்தாலும், துறவறத்தில் இருந்தாலும்—இம்மூன்று தகுதிகளிலேயே ஜைன நெறிகளைப் பின்பற்ற வேண்டும். இந்தத் தகுதி நிலையிலிருந்தே, ஜைன மார்க்கிகளை வகைப்படுத்தி, அவரவர்களுக்கேற்ப ஒழுக்கங்

களை பகவான் ஸ்ரீ மகாவீரர் காட்டியிருக்கிறார். இந்த மூன்று இயல்புகளின்படி மகாவீரரின் போதனைகளை ஏற்று ஒழுகுகின்ற ஜைனர்கள் 'ஸ்ரமண்' என்றும் 'ஸ்ரமண் உபாசக்' என்றும் இருவகையினராகப் பிரிக்கப்படு கின்றனர்.

'ஸ்ரமண்' என்றால் துறவியராகவே வாழ்கின்ற ஜைனர்கள். 'ஸ்ரமண் உபாசக்' என்றால் இல்லறத்தில் ஜைன நெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகுகின்ற ஜைனர்கள். அதிலும் இல்லற வாழ்வில் இருந்துகொண்டே, துறவி களைப் போற்றி ஆதரித்தும், அவர்கள் கூறுகின்ற நல் வழிகளைப் பின்பற்றியும் உண்மையான ஜைனனாக வாழ் வதற்குத் தம்மைப் பக்குவப்படுத்திக் கொள்கின்றவர்கள். அவர்களே 'ஸ்ரமண் உபாசக்' என்ற இல்லறம் வாழ் ஜைனர்கள். 'ஸ்ரமண் உபாசக்' ஆகிய இல்லறம் வாழ் ஜைனன் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய ஜைன நெறிகள் 12. அவை 'அணு விரதம்' என்று குறிப்பிடப்படும். ஜைனம் காட்டும் இந்த அணுவிரதத்தை ஸ்ரமண் உபாசக், தவறாது ஒழுகுவதன் மூலம் இறுதியில் பற்றற்ற நிலைக்கு அவன் இயல்பாகவே உந்தப்படுகிறான். ஏன் 'இயல் பாகவே உந்தப் படுகிறான்' என்று சொல்ல வேண்டும்? ஜைனம் எந்த ஓர் உயிரையும் அகிம்சைக்குப் புறம்பான வழியில் செலுத்த முயல்வதில்லை; நிர்ப்பந்தத்தின் மூலமோ ஆசை காட்டுவதன் மூலமோ எந்த ஒரு பலனையும் அது விரும்புவதும் இல்லை. ''வாழ்க்கை என்றால் என்ன? அதில் மனிதனின் உண்மையான பக்குவம் என்பது எது? என்று உணர்ந்து வாழ்கின்ற மனிதன், தனது வாழ்க்கை நெறியில் அகிம்சை என்ற தத்துவத்தை அணுவளவும் பிறழாது கடைப்பிடிப்பதாலேயே, மனிதனாகிய சாதகன், தனது உயிரின் உண்மைப் பக்குவத்தை இயல்பாகவே உணர்ந்து, இன்ப துன்பம் அற்ற ஒரு நிலையை அடைய வேண்டியதன் மேன்மையை உணர்கிறான்'' என்று அது நம்புகிறது.

'ஸ்ரமண் உபாசக்' ஆகிய இல்லறம் வாழ் ஜைனனின் 'அணுவிரதம்' ஆகிய பன்னிரண்டு நெறிகள் வருமாறு:

1. பிற உயிர்களைத் துன்புறுத்தாதிருத்தல்.
2. சகஜ வாழ்வில் பொய் பேசாதிருத்தல்.
3. கள்ளாமை (திருடாமை).
4. நன்னடத்தை. அதாவது, தீய ஒழுக்கங்களை வெறுத்து நல்வழியில் வாழ்வது.
5. இல்லறத்தில் தேவையான பொருள்களுக்கு மேல் சேர்த்து வைக்கும் எண்ணத்தை ஒழித்தல். அதாவது மிகு பொருள் சேர்க்காமை. இதை 'அபரி சிரஹா! என்பர்.
6. 'திசா விரத்' என்கிற பயணக் கட்டுப்பாடு.
7. உணவுக் கட்டுப்பாடு.
8. பயனற்ற வார்த்தைகளைப் பேசாதிருத்தல்.
9. 'சமாயக் விரத்' என்னும் மனத்தைச் சமன்படுத்தக் கூடிய தியானப் பயிற்சி.
10. நல்ல ஒழுக்கம் உள்ளவர்களையே தேர்ந்து பழகுதல். கூடா நட்பை உணர்தல்.
11. குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் உண்ணா நோன்பு நோற்று மனத்தைச் சுயதரிசனம் கொள்ளச் செய்தல்.
12. அறத்தன்மை பயக்கும் விருந்தோம்பல்.

இந்தப் பன்னிரண்டு நெறிகளின்படியே 'ஸ்ரமண் உபாசக்' ஆகிய இல்லறத்தான் வாழ வேண்டும் என்று ஜைனம் போதிக்கிறது. அதாவது, பகவான் மகாவீரர் போதித்துள்ளார் என்று பொருள் கொள்வோம். இந் நெறிகளில் ஜீவ தத்துவமாக 'அகிம்சை' ஒன்றே இழையோடுவதை, ஆழ்ந்து சிந்திப்பதன் மூலம் நாம் உணரலாம்.

'ஸ்ரமண்' என்கிற துறவியாகிய சாதகருக்கென்று உரிய ஜைன ஒழுக்கங்கள் ஐந்து. அவை 'பஞ்ச நெறிகள்' என்றும் 'மகாவிரதம்' என்றும் குறிப்பிடப்படும். 'ஸ்ரமணின்' மகாவிரதமாகிய பஞ்ச ஒழுக்கங்கள் வருமாறு:

1. அகிம்சை.
2. வாய்மை எனப்படும் சத்தியம்.
3. கள்ளாமை எனப்படும் திருடாமை.
4. தூய பிரம்மச்சரியம்.
5. பொருள்கள்மீது பற்றுக் கொள்ளாமை.

இந்த மகாவிரதங்களையே 'ஸ்ரமண்' ஆகிய ஜைனத் துறவி மிகக் கடுமையான ஒழுக்கத்தோடு கடைப்பிடித்து வாழவேண்டும். இந்தப் பஞ்ச நெறிகளுக்குத் தலையான நெறி 'அகிம்சை' என்பதையும், மற்ற நெறிகளும் அகிம்சையின் பரிணாமத்திலேயே உரைக்கப்பட்டிருப் பதையும் நாம் உணரலாம்.

* *

சரி, உலகில் தோன்றிய மதங்கள் அனைத்தும் மனிதனைச் செலுத்துகின்ற பாதைகளின் இறுதியான முடிவு என்ன?

பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ணப் பரமஹம்ஸர் சொல்லு வார்: "உலகில் உள்ள எல்லா மதங்களும் மனிதனுக்கு 'ஈசுவர பக்தி'யையே போதிக்கின்றன. அந்த மதங்களின் போக்கு எத்தகையதாக இருப்பினும் அவற்றின் நோக்கு ஈசுவரன் ஆகிய இறைவனை அடைவதே. சமுத்திரத்தில் செலுத்தப்படுகின்ற கப்பல் எந்தத் திசையில் சென்றாலும், அக் கப்பலில் இருக்கின்ற 'திசைமானி'யின் காந்தமுள் வடக்கு நோக்கியே இருப்பதால், அக்கப்பலில் உள்ள வர்கள், அந்த முள்மூலம் தாங்கள் செல்லுகின்ற திசை யைத் தெளிவாக உணர முடிகிறது. அதைப் போலவே, மனிதனாகிய சாதகன், மரக்கலமாகிய மதத்தில் ஏறி, சமுத்திரம் என்ற வாழ்க்கையில் பயணம் ஆகும்போது,

ஒழுக்கம் என்ற பக்தி முள்ளை 'வடக்குத் திசை' என்ற 'ஈசுவர இலக்கை' நோக்கியே வைத்திருப்பானாகில், அவன் தனது செயல்களின் மூலம் விளைகின்ற தீவினையை அறுத்து நற்கதியாகிய கரையை அடைய முடியும்.''

பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ணர், எம்மதங்களையும் சம்மதமாகப் பாவித்த பரமஹம்ஸப் பெருஞானி. அவரது இந்த எளிய கருத்தை மறுக்காமல், சற்று மறை பொருளாகக் கொண்டு, இங்கே நமது பார்வையில் உரைத்தால், ஜைனம் உரைக்கின்ற பரிநிர்வாண நிலையின் தன்மையை உணரலாம்.

பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ணரின் உவமையான ஈச்சுவர பக்தியை, இங்கே பரிநிர்வாண நிலை என்கிற 'முக்தியாக' உவமைக்கும் உவமையாகக் கொண்டு நோக்குவோமாக.

'பரிநிர்வாணம்' என்பதை ஜைன மார்க்கம் 'இறைத் தன்மை' என்று நமக்குக் கூறுகிறது. மனிதனாகிய சாதகனை, இறைத்தன்மைக்கு உயர்த்தும் நெறிகளை உபதேசிப்பதன் மூலம், இறைவன் என்று ஒன்று தனியாக இருப்பதை அது ஒப்புக் கொள்ளவில்லை. இதனாலேயே அதன் கொள்கைகளை 'நாத்திகவாதம்' என்று பலர் சொல்லத் துணிந்தனர். உண்மை அது அன்று. நாம் முன்பே சொன்னவாறு, பாமர மனிதன் முதல் பகுத்தறிவு மனிதன் வரை உணராத ஒரு பொருளை, 'இறைவன்' என்று வரித்து, அதற்கு இலட்சணங்களைக் கூறி, உருவகப் படுத்தி அதற்குப் பூஜைகள் நடத்தி; வழிபாடு செய்யும்படி மனிதனைத் தூண்டுவது ஒரு 'மாயாவாதம்' என்று புறக்கணித்து, மனிதனையே இறைத்தன்மையை நோக்கிச் செலுத்துகிறது ஜைனம். விருப்பு, வெறுப்பற்ற பரிசுத்த நிலைக்கு மனிதன் பக்குவப்பட்டால், அப்பக்குவத்தின் வழியே அவன் இறைத்தன்மை எய்துகிறான். அதுவே பரிநிர்வாண எனப்படுவதாகும். அந்தப் பக்குவ நிலையின் மனித இயல்பு எப்படி இருக்கும்?

**" வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. "**

—திருக்குறள்; கடவுள் வாழ்த்து: 4

என்று வள்ளுவர் உரைக்கின்ற பொருளே அந்தப் பரிபக்குவ நிலை. அதுவே பரிநிர்வாண நிலை.

வேண்டுதல் வேண்டாமை உணர்வு அற்று 'விருப்பு—வெறுப்பற்ற தன்மையை அடைந்தவர்க்கு' என்ற பொருளையே, 'இலானடி சேர்ந்தார்க்கு' என்று கொள்ள வேண்டும். அந்தத் தகுதியை அடைந்தவர்க்கு, 'யாண்டும் இடும்பை இல' என்பது எஞ்ஞான்றும், எப்போதும் துன்பம் இல்லை என்ற பொருள் தரும். துன்பமில்லை என்றால் இறப்பு இல்லை; அதனால் நேர்கின்ற பிறவித்துன்பமும் இல்லை என்று பொருள்படும்.

அதாவது மனிதன், தனக்குரிய உண்மை இயல்புகளை உணர்ந்து, ஒழுகுவானாகில், அவன் ஆசையினால் விளைகின்ற துன்பத்தை உணர்ந்து, ஆசைகளை அறுத்து, படிப் படியாகத் தனது தேவைகளைச் சுருக்கி, உள்ளத்தின் உண்மை ஒளியைப் பெருக்கி, கடுந்துறவுள்ளவனாகி, இறுதியில் பரமபக்குவம் பெற்று, பரிநிர்வாண நிலையை எய்தி, பிறப்பற்ற இறைத் தன்மையாளனாகிறான் என்ற விரிவான காட்சிகளை அகப்பொருளாக்கி உரைப்பதே இக்குறளின் தத்துவம்.

**" ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி,
உவப்பிலா ஆனந்தம் ஆய
தேனினைச் சொரிந்து... "**

என்று பாடுவார் மாணிக்க வாசகப் பெருமான். ஊனாகிய உடலின்பத்தைக் கட்டுப் படுத்துவது, விருப்பு வெறுப்பற்ற நிலை ஒன்றினாலேயே முடியும். அப்போது உள்ளொளி யாகிய உள்ளத்தின் உண்மை அறிவு நம்முள் பரவிப் பெருகி நிற்கும். அதன் பலனே 'உவப்பிலா ஆனந்தமாய தேன்' என்ற பரப்பிரும்ம நிலை. இதுவே முக்தியாகிய பேரின்ப

நிலை. அந்தப் பேரின்ப நிலையை அடைவதற்கு அடிப்படை ஆசைகளைத் துறக்க வேண்டும். ஜைனம் இந்த அறிவைத் தான் மிக ஆழமாகப் போதிக்கிறது.

மனிதர்களாகப் பிறந்து மனிதர்களுக்கே உரிய ஆறறிவை உண்மையாகவே பயன்படுத்தி உணர்ந்ததன், மூலமே மனிதப் பிறப்பைப் 'பேரின்ப நிலை'க்கு உயர்த்துகின்ற வாழ்வியலைத் திருவாசகம் பாடிய மணிவாசகப் பெருமான் போன்ற அனைத்து மத ஞானியர்களும் தெளிந்து, அதை உலகுக்கும் காட்டினர். என்றைக்காவது ஒரு நாள் கட்டாயம் அழிந்தே தீரும் இந்த (தங்களது) உடலினாலும், அதன் இயக்க அறிவினாலும் ஆகக்கூடிய உண்மை அறிவையே, மானிட சமுதாயத்துக்குப் போதித்தனர். அம்மகான்களின் பிறப்போடு, இவ்வுலகில் கால காலமாகத் தோன்றிக் கொண்டும், தோன்றி மறைந்து கொண்டும் வருகிற மனிதப் பிறவிகளாகிய நமக்கு, இலக்கு என்று ஒன்று இருந்தே வருகிறது. இந்த இலக்கு என்பதானது, மனிதர்களுக்கு மனிதர், மதத்துக்கு மதம், நாட்டுக்கு நாடு மாறுபடக்கூடும். அயினும், இலக்கு என்ற ஒன்றை நோக்கியே நாம் தெரிந்தோ, தெரியாமலோ நகர்கிறோம், செயல்படுகிறோம்.

உண்மையில், வேதாந்தமாகவோ, பௌதீகமாகவோ, சொல்வதென்றால், தோன்றிய யாவரும் ஒருநாள் மறைந்துவிடுவதே இறுதியான முடிவாகிவிடுகிறது. அந்த மரணத்தை யாராலும் தவிர்க்க முடியாது. மதங்கள் மூலம் நமக்கு உணர்த்தப்படுகிற கடவுளே ஆனாலும், ஒரு மனிதனுக்கு மரணம் இல்லாமல் செய்ய முடியாது; அல்லது செய்யமாட்டார்.

ஆகவே, மரணம் என்பது, மண்ணில் பிறந்துவிட்ட நமக்கு உறுதியாகவும் இறுதியாகவும் நேரக்கூடிய முடிவு என்கிற போது, மரணத்திற்கு உண்மையிலேயே காரணமான முதல் ஆதாரம், 'ஜனனம்' என்கிற பிறப்புத்

தான் என்பதும் தெளிந்த பதிலாகிறது. பிறப்பு என்பது மனித சக்தியின் கையில் இல்லை. பிறப்புக்கு மனித சக்தி மட்டுமல்லாது, ஜீவராசிகள் அனைத்துமே உட்பட்டு விடுவது இயற்கையின் விதி என்பதால், உலகில் மனித ஜனனத்தையே நிறுத்திவிடுவோம் என்று எவராலும் சபதம் எடுத்துவிட முடியாது. ஏனென்றால், ஜனனத்துக்குக் காரணமான சேர்க்கை, உடற்கூறுகளின் விளைவாக, அதன் வளர்ச்சிக்கும், பருவத் தகுதிக்கும் ஏற்றவாறு, 'இயல்பாக இருக்கின்ற ஒரு தேவை' என்பதே அறிவுப் பூர்வமான உண்மை. இச்சையினால் இந்த ஜனனம் சம்பவிக்கிறது என்பதை வேதாந்தமாகச் சொல்லி வருந்தலாமே தவிர, மரணத்துக்குக் காரணமான ஜனனத்தையே நாம் எண்ணி வருந்த முடியாது. உண்மையில் 'ஜனனம்' என்கிற படைப்பில், உயிரானது பல்வேறு தகுதிகளில் தோன்றி மறைந்து, மறுபடியும் மறுபடியும் பிறக்கிறது என்றும், அதில் மனிதப் பிறவி ஒன்றே உயிரின் இறுதி நிலை என்றும், இந்த இறுதி வாய்ப்பில் உயிரானது, உண்மை இயல்புகளின்படி ஒழுகி மேன்மையாகிய வீடுபேற்று நிலையை எய்த முடியும் என்றும் ஜைனம் முடிவாக நம்புகிறது.

இந்த நுட்பமான, யதார்த்த முடிவுகளை ஆதார மாகக் கொண்டே, ஜைன நெறியானது, மனிதனை 'இங்கு நோக்கு?', 'இப்படி நோக்கு?', 'இவ்விதம் நோக்கு?', 'இதற்காக நோக்கு', என்று உபதேசிக்கிறது. நோக்கு என்பதை 'வாழ்' என்றே பொருள் கொள்ள வேண்டும். அப்படி வாழ்வதன் மூலம் ஜனனத்தை வெல்ல முடியும் என்பதைச் சொல்லாமல் சொல்லுகிறது ஜைன நெறி. ஆதாவது, 'பிறப்பற்றுப் போகின்ற தன்மைக்கு மனித உயிரை உட்படுத்துகிறது' என்று பொருள். ஏன், மனித உயிரை உட்படுத்த வேண்டும்? ஒரு பிராணிக்கோ அல்லது பறவைக்கோ 'இப்படி இரு, இப்படி இப்படி இராதே' என்று உபதேசிக்க முடியுமா? முடியாது. சொல்லவும்,

சொல்வதைக் கேட்கவும், சொல்லப்படும் விஷயம் சரியா, தவறா? என்பதைச் சிந்திக்கவும், அந்தச் சிந்தனையின் வழியே தன்னைச் செயல்படுத்திக் கொள்வதுமான அறிவு, மனித உயிர் ஒன்றுக்கு மட்டுமே இருக்கிறது.

ஏனெனில், மேலே குறிப்பிட்டவாறு, உலகில் தோன்றும் பொருட்களிலேயே மனிதனாகிய பொருளே உயர்ந்தது என்கிற பௌதீக உண்மையை அடிப்படையாகக் கொண்டு இந்த உலகின் இன்ப துன்பங்களுக்கு, மனிதனின் செயலே காரணம் என்பதை முடிவாகக் கொண்டும் மற்றெல்லா உயிர்களிலும் மேம்பட்ட படைப்பு மனிதன் ஒருவனே என்றும், மனிதப் பிறவி ஒன்றின் மூலமே, உயிரானது மரணத்தை வெல்லுகின்ற மார்க்கத்தைத் தேட முடியும் என்கிற ஞானத்தைத் தெளிவு படுத்தவும், அந்த ஞானத்தை எய்துவதற்கான இலக்கை நோக்கவும் ஜைனம் மனிதனுக்கு வழி சொல்லுகிறது.

முதலில் ஜைனம், மனிதனால் முடியாத, மனித சக்திக்கும் அவன் புலன்களுக்கும் அப்பாற்பட்ட ஒன்றைச் சாதிக்கத் தூண்டவில்லை. ஆசைகாட்டவும் இல்லை. இப்படித் தூண்டுவதை, ஆசைக்காட்டுவதைத்தான் அது 'ஒரு மாயாவாதம்' என்று நிராகரிக்கிறது.

உலகில் பிற மதங்கள், அல்லது மார்க்கங்கள் மனிதனைச் சகல இன்பங்களையும் அனுபவிக்கின்ற அரசனாகவோ, அல்லது விரும்பியதை அடையும் தேவனாகவோ அல்லது தேவலோகப் பிறவியாகவோ பிறப்புறுவதற்கு, இம்மண் உலகில் கடைப்பிடிக்கவேண்டிய நெறிகளை, அறம் என்றோ, ஒழுக்கம் என்றோ, உபதேசிப்பதை ஜைனம் மறுத்து, புறக்கணித்து, "மனிதனே, அவை எல்லாம் மாயாவாதங்கள் ... உண்மையில் அப்படிப் பிறக்க உன்னால் முடியுமானால், அது ஒரு பெரிய சுகத்திற்காக, உனது அறிவை இச்சை கொள்ள வைக்கின்ற போதனைகள், அவற்றை நம்பாதே, பிறந்துவிட்ட நீ,

மனிதனாக வாழ். உனது புலன் அறிவைக் கொண்டு நல் அறிவை அடை. நல் அறிவின் மூலம் நல்ல காட்சியை, மெய்ப்பாட்டுணர்வை அடை, நல்லறிவும் நற்காட்சியும் உனக்கு ஏற்பட்டு அவற்றின் வழியே நீ சென்றால் நல்ல ஒழுக்க வாழ்வின் உயர்வை நீ பெறுவாய்; இம் மூன்றும் நீ அடைந்துவிட்டால் அதன் பயனாகப் பேரின்பம் பெற்று—விடுகிறாய். இதுவே வீடு பேறாகிய முக்தி. இதையே நம்பு, நம்புவதற்கு முயன்று பார். முயற்சியைப் பயிற்சி யாக்கு. பயிற்சியே சாதகமாகிறது. அதன் மூலமே நீ நல்ல சாதகனாகிறாய். இதைத் தவிர உனக்குச் சொல்ல வேண்டிய உபதேசம் ஏதுமில்லை. மற்ற உபதேசங்களால் உனது உயிருக்கு உண்மையான மேன்மை ஏற்படப் போவதில்லை'' என்று ஜைன மார்க்கம் சொல்லுகிறது; அதன் வழியே அவனை நோக்கவும் வைக்கிறது.

மனித உயிர், உயர்ந்த நிலைக்குச் செல்லக்கூடிய தகுதிகளாக ஜைனம், வலியுறுத்தும் அடிப்படைப் புலன் ஆற்றல் மூன்றே மூன்று, அவை, மேலே சொன்னவாறு:

1. நல்லறிவு என்கிற நல் ஞானம். (Right Knowledge)
2. நற்காட்சி என்கிற நன்னம்பிக்கை (Right Faith)
3. நன்னடத்தை என்கிற நல் ஒழுக்கம் (Right conduct)

இந்த மூன்றையும் ''மும்மணிகள்'' அல்லது ''திரிரத்னம்'' என்று ஜைன மார்க்கிகள் சொல்வர். ஜைன மார்க்கத்தை மிகப் பெரிய செழுமையான மரமாக நாம் கருதினால், அந்த மரத்தின் அடிவேர் (Trunk) இந்த 'மும்மணிகளாகிய' மூன்று வேர்கள் தான். இம்மரத்தின் இந்த அடிவேர்களை ஆதாரமாகக் கொண்டே, பிற நெறிகள் பல்வேறு கிளைகளாக, துளிர்களாக, இலைகளாகப் பிரிகின்றன. அவற்றின் முடிவாகவே பேரின்பமாகிய 'கனிகள்' கிடைக்கின்றன, என்று சொல்லலாம். இம் மணிகளாகிய மூன்று வகை தத்துவமே வீடுபேற்றை நமக்கு அளிக்கிறது என்பதை,

Samyak, Dharshan, Gyana
Charitrani Moksha Marga

என்று பல நூற்றாண்டுகளுக்கு முன் ஜைன மார்க்கத்தின் பெரும் பண்டிதராகத் திகழ்ந்த ஆச்சார்யா ஸ்ரீ உமா ஸ்வாதி தமது தத்வார்த்த சூத்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

நல்லறிவு, நற்காட்சி, நல் ஒழுக்கம் இம் மூன்றுமே மோக்ஷ கதியாகிய வீடு பேற்று நிலைக்கு நம்மை இட்டுச் செல்லும் பாதை என்பது அதன் பொருள். இதை, தமிழ் மரபில் இன்னும் எளிமையாகத் தெரிய, வேண்டும் என்றால் அறம், பொருள், இன்பம், வீடு என்று சொல்லலாம். அறம் என்பதை நல்லறிவினாலும், பொருள் என்பதை நற்காட்சியினாலும், இன்பம் என்பதை நல்லொழுக்கங்களாலும் நாம் அடைந்தால், 'வீடு' என்கிற 'முக்தி' நமக்குக் கிடைக்கிறது.

இந்த மூன்று தத்துவங்களையே திருவள்ளுவர், அறம், பொருள், இன்பம் என்று மூன்று பால்களாகப் பிரித்து தமது திருக்குறள் மூலம் மானுடருக்கு வழிகாட்டியிருக்கிறார். இம்மூன்றையும் உணர்ந்தால் 'வீடு பேறு' என்ற முக்தி கிட்டும் என்பதைத் திருக்குறளில் சொல்லாமல் சொல்லியிருக்கிறார்.

வீடு பேறு என்பது என்ன? என்பதற்கு அவர் அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலுக்கு அப்பால், எப்பாலையும் உரைக்காமல் விட்டதன் மூலமே, அவர் மிகச்சிறந்த ஜைன ஒழுக்கத்தின் சிந்தனையாளர் என்று கருதுவதற்குக் காரணமாகி விட்டார்.

'செத்தால்தானே சுடுகாடு' என்று தமிழில் எளிதாகப் பழமொழி (Proverb) ஒன்று இருக்கும். செத்தவர்களுக்குத் தான் அந்த அனுபவம். அதை அவர்கள் 'நமக்கு எடுத்துச் சொல்ல முடியாது' என்பது உட்பொருள்.

இதைத்தான்—

"கண்டவர் விண்டிலர்"

"விண்டவர் கண்டிலர்"

என்று தமிழில் தத்துவ மொழியாக உணர்த்தப்பட்டுள்ளது. முக்தியை வீடு பேறு நிலையாகவோ, இறைவனை அடைந்த நிலையாகவே நாம் எப்படிக் கருதிக் கொண்டாலும் அதன் அனுபவத்தைக் கண்டவர்கள், உண்மையாகவே உலகில் சொல்லவில்லை. அப்படிச் சொன்னவர்கள், அவ்விதம் சொல்லுகின்ற நிலையில் கண்டு உணர்ந்ததில்லை என்ற தத்துவத்தை விளக்குவதே, இந்த 'கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்' என்ற கருத்தாகும். இதுவே முற்றிலும் எதார்த்தமான. எந்தப் பாமர மக்களும் ஒப்புக் கொள்ளக் கூடிய உண்மை.

பெரிய மகான்கள், இறைவனைப் பற்றிச் சொல்லியிருந்தால், அது மனித ஆற்றல்களுக்கு அப்பாற்பட்ட அமானுஷ்யமான அனுபவமே தவிர, எளிய அனுபவம் அன்று; அந்த அனுபவத்தை எல்லாரும் அடைந்து விட முடியாது. ஜைனம், இந்த அமானுஷ்யமான தகுதிகளை அடைய, மனிதனைத் தூண்டாமல், மனிதர்களாகப் பிறந்த யாவரும் இன்புற்றிருப்பதற்குரிய வாழ்க்கை நெறிகளை 'அகிம்சை' என்ற இலக்கை நோக்கியே செல்வதற்குப் பாதையாகிறது. 'அமானுஷ்ய ஆற்றல்கள்' இருந்தாலும், அவற்றால் ஒரு சாதாரண மனிதன் சாதிக்கக் கூடியது என்ன? என்ற பார்வையிலேயே, மனித இயல்புக்குரிய நல்லறிவோடும், நற்காட்சியாலும், நன்னடத்தையாலும் நல் வழியைப் போதிக்கிறது என்பதைத் தான் நாம் இங்கு நோக்க வேண்டும்.

அமானுஷ்யமான ஆற்றல்களை அது 'மாயா வாதம்' என்றே நிராகரிக்கிறது என்று முன்பே சொன்னோம். ஏனென்றால், "உலகில் தோன்றிய மனித உயிர்களில் கோடிக் கணக்கில் ஓரிருவர் மட்டுமே உணர்ந்து அடைகிற

அத்தகைய ஆற்றல்களால், மனித சமுதாயத்துக்கே நிரந்தரமான நன்மை ஏற்படுவது இல்லை'' என்பதை எச்சரித்து, ''மனிதனாகிய சாதகன், தனது வாழ்க்கையில் எளிய முறையில் இயற்கைக்கு ஏற்பவே, நன்னெறிகளில் ஒழுகி, முக்தி அடைய வேண்டும். அதற்கு அறம், பொருள், இன்பம் என்கிற நல்லறிவு, நற்காட்சி, நல் ஒழுக்கம் ஆகிய மூன்று குணங்களை ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டும்'' என்கிற யதார்த்த அறிவோடு தனது உறுதியான உபதேசத்தை ஜைனம் உலகிற்கு அளிக்கிறது.

அதனால் தான் வள்ளுவ தேவர்—

அறம், பொருள், இன்பம் என்ற மூன்று தத்துவங்களை முப்பாலாக வகுத்ததுடன் பேரின்பம் ஆகிய வீடு பேற்று நிலையை எழுத்தில் கூறாமல் விட்டுவிட்டார். ஒரு உண்மையான ஜைன நெறியாளர், உண்மையான அனுபவத்தை மட்டுமே உலகிற்குச் சொல்வார் என்பதற்கு வள்ளுவ தேவரே சிறந்த எடுத்துக்காட்டு.

ஔவை மூதாட்டியும் இதை மிக எளிய பாடலில் சொல்லி, அவர் காலத்தில் நடந்த 'பேரின்ப நிலை' ஆன 'வீடு பேறு' எது என்பதற்கு வாதப் பிரதி வாதங்களுக் கெல்லாம் முற்றுப்புள்ளி வைத்து விட்டார் என்று சொல் வார்கள்.

'வீடு பேறு எப்படிக் கிடைக்கும்?' என்று பண்டிதர் களும், புலவர்களும் மதி மந்திரிகளும் கால காலமாக விவாதித்து ஒரு முடிவும் காணாமல் தவித்தபோது, ஔவைப் பெருமாட்டி மிக எளிதில், ரத்தினச் சுருக்கமாக ஒரு செய்யுளில் தனது கருத்தைப் பாடிப் பேரின்ப நிலை யாகிய வீடு பேற்றினை விளக்கியிருக்கிறார்.

ஈதல் அறம், தீவினை விட்டீட்டல் பொருள், எஞ்ஞான்றும்
காதலிருவர் கருத்தொருமித்து—ஆதரவு
பட்டதே இன்பம், பரனை நினைந்திம் மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

'ஜைன தத்துவத்தைத் தமிழில் மிக எளிதில் புரிந்து கொள்ளத் தக்க வகையில் ஔவைப் பிராட்டி, தனது ஞானப் புலனில் பாடிய இந்தச் செய்யுளையே இங்கு நாம் சிந்திக்கின்ற அரங்கில் நோக்கவேண்டும்.

எவ்வாறு?

மனித உயிர்க்கு, இருக்க வேண்டிய அடிப்படைத் தகுதியே அறம் ஆகிய கொள்கை என்பதை இலக்காகக் கொண்டால், அந்த இலக்கிற்கு, ஆதாரமானது பொருள் ஆகும். அந்தப் பொருளை மனிதன் ஈட்டுவதற்கு, தீவினைகளை நாடக் கூடாது. அதாவது நல்ல செயல்களின் வாயிலாக, நல்லற ஒழுக்கங்களினாலேயே, எவ்வுயிர்க்கும் துன்பம் அற்ற வகையில் பொருளை ஈட்ட வேண்டும்; ஈட்டிய பொருளைக் கொண்டு அற வாழ்வு நடத்துகின்ற இல்லறம் அமைய வேண்டும். அத்தகைய இல்லறத்துக்குக் கருவியாகிய கணவனும், மனைவியும் மாறுபட்ட கருத்தின்றி, ஒத்த கருத்தில் வாழ்க்கையை நடத்த வேண்டும். அப்போதுதான் உண்மை அறம் அங்கே மிகும். ஆக அறத்தால் பொருளும், பொருளால் நல்லற வினைகளை இயற்றுகின்ற இல்லற வாழ்வும் மாந்தருக்குத் தேவை. அறம், பொருள், இன்பம் ஆகிய இம்மூன்றையும் பரனாகிய இறை நினைவில் திளைத்து' ஒன்றி, துறந்து விடுவதே பேரின்பம் ஆகிய விடு பேறு என்று ஔவையின் இச் செய்யுள் நமக்கு விளக்குகிறன்து.

இக் கருத்தே, 'ஸ்ரமண் உபாசக்' ஆகிய இல்லறம் வாழ் ஜைனனுக்கும், ஸ்ரமண்' ஆகிய ஜைனத் துறவிகளுக்கும் ஏற்புடைய ஜைன நெறிகள் என்று விளக்கம் பெறலாம்.

விடு பேறு நிலையாகிய பரி நிர்வாண நிலையை மனித உயிர்கள் அடைய வேண்டும் என்று உபதேசித்த பகவான் ஸ்ரீ வர்த்தமான மகாவீரர் உபதேசத்துடன் நில்லாமல், அவ்வழியே வாழ்ந்தும் காட்டியிருக்கிறார்.

அவரது பாதையில், நாம் பார்க்கின்ற ஜைனத்தின் இறுதி இலக்கே 'Where?' என்பதற்கான 'பரி நிர்வாண நிலை' என்பதை இதன் மூலம் அறிகிறோம். அந்த 'இலக்கு ஏன்? Why?' என்பதற்கான விளக்கத்தைப் பின்னர்ப் பார்ப் போம்.

## II

## ஏன் நோக்குகிறோம்?

## Why Do You Look?

பகவான் மஹாவீரரின் ஜைன நெறிகளின் பாதை யானது உயிர்களை மோட்ச கதியாகிய 'பரி நிர்வாண நிலைக்கு' இட்டுச் செல்கிறது என்பதைக் கண்டோம்.

பரிநிர்வாண நிலையானது 'ஏன்' தேவை என்பதற்கு "Why Do You Look?" என்ற கேள்வியைக் கேட்டுக் கொண்டு அதற்கான விளக்கத்தை இங்கே சிந்திப்போம்.

மோட்ச கதியாகிய வீடுபேற்று நிலைக்கு நற்காட்சி, நல்லறிவு, நல்ஒழுக்கம் என்ற மூன்றும் அவசியம் என்பதைப் பகவான் மகாவீரர் தம்மைப் பின்பற்றியவர்களுக்குத் தெளிவாக வலியுறுத்துகிறார்.

மோட்ச கதியாகிய 'வீடுபேறு' ஓர் உயிருக்கு எவ்வாறு கிடைக்கிறது என்பதை மேலும் ஓர் எளிய உதாரணத்தின் மூலம் நாம் தெளியலாம். எப்படி? ஒருவனுக்கு நோய் ஒன்று பற்றியிருக்கிறது என்று கொள்வோம். அந்த நோய் இன்னதென்று அறிவதற்கு முன்பே, நோயின் பாதிப்பால் அவனது உடல் அன்றாட இயல்புகளிலிருந்து மாறுபட்டு, உண்ட உணவு செரிக்காமலும், உணவே உட் செல்லா மலும் அவன் அல்லலுறுவான் அல்லவா? அவனைப் பார்த்த மாத்திரத்தில் 'ஓ... இவன் நோயாளி... இவனுக்கு ஏதோ நோய் பற்றியிருக்கிறது' என்ற உணர்வை நாம் அடைகிறோம் என்று வைத்துக் கொள்வோம். அத்தகைய

உணர்வு அல்லது ஆற்றலே காட்சி, என்கிற நம்பிக்கை ஆகும். அந்த நம்பிக்கை நமக்கு ஏற்பட்டதும் என்ன செய்வோம்? 'இந்த நோயாளிக்கு இந்த நோய் பற்றியுள்ளது. இந்த நோய்க்கு இன்ன மருந்து கொடுத்தால் குணமாகும்' என்ற சரியான உணர்வை நாம் பெறுவதே 'அறிவு' என்பதாகும். நம்பிக்கையும் அதற்கான அறிவும் நமக்கு ஏற்பட்டதும் உரிய மருந்தை அந்த நோயாளிக்குக் கொடுத்து, நோயாளியைப் பராமரிப்பதே நடத்தை என்கிற ஒழுக்கம் ஆகும்.

ஆக ஒரு நோயை உணர்வதற்குக் காட்சியும் (மெய்ப்பாட்டுணர்வு என்றும் சொல்லலாம்) அறிவும், அதைப் போக்குவதற்குரிய நடத்தையும் நமக்குத் தேவை. அப்பொழுதுதான் நோயிலிருந்து நோயாளியை மீட்க முடியும். வள்ளுவ தேவர் இதையே, தமது குறட்பாவில்—

' நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும்
வாய் நாடி வாய்ப்பச் செயல் '

—திருக்குறள்; மருந்து : 8

என்று அழகாகச் சித்திரித்துக் காட்டியிருக்கிறார்.

நோயிலிருந்து விடுதலை பெற்ற மனிதனைக் கர்மாக்களிலிருந்து விடுதலை (வீடுபேறு) பெற்ற உயிராக, பரிசுத்த ஆன்மாவாக, நாம் கருத்தில் கொண்டால், ஜீவனாகிய உயிரின் உலக பந்தமானது பிறவிப் பயனாகிய 'கர்மா' என்று ஆகிறது அல்லவா?

ஆகவே, பிறவியாகிய கர்மாவை விட்டு உயிரானது முற்றாக நீங்குவதே விடுதலை, அதாவது 'வீடுபேறு' என்று சொல்கிறோம். இந்த வீடுபேறாகிய முக்திக்கு, ஜீவனானது அஜீவனாகிய ஜடப் பொருளோடு (உடல்) ஏற்படும் சம்பந்தத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதற்கான மார்க்கத்தை உணர வேண்டும். அதற்குத் தான் நற்காட்சி, நல்லறிவு, நல்ஒழுக்கம் என்ற மூன்று தகுதிகளை உயிர் அடைய வேண்டும் என்று பகவான் ஸ்ரீ மகாவீரர்

தெள்ளத் தெளிவாக உணர்த்தியிருக்கிறார். இந்த மும்மணிகளில் எது ஒன்று குறைந்தாலும் அல்லது எது ஒன்று பலவீனம் பெற்றாலும் உயிர்க்கு முக்தி இல்லை என்பதையும் தெளிவுறுத்தி, 'எதிலும் விழிப்புடன் இரு' என்றும் எச்சரித்திருக்கிறார்.

அத்தகைய விழிப்பை நற்காட்சி, நல்லறிவு, நல்ஒழுக்கம் ஆகிய முப்பரிமாணத் தகுதிகளிலும் பிசகாது கொண்டிருந்து, ஜைன மார்க்கிகளாகிய சாதகர்கள் இடையறாத ஞானப் பயிற்சியின் மூலம் உலக மாயையாகிய பந்தங்களை எந்த உருவிலும் அறுத்தெறிய வேண்டும்; உலகப் பொருட்கள் பற்றிய மெய்யுணர்விலும் வழுவாது இருக்க வேண்டும்.

'விழிப்பு' தவறும் போது, எத்தகைய உயர்நோக்கமும் தாழ்ந்துவிடுகிறது என்பதற்கு ஒரு சிறுகதை மூலம் இங்கு உணரலாம் :

துறவி ஒருவர் உலக பந்தங்களிலிருந்து விடுபட்டு, மிகமிக எளிய நிலையில் ஒரு கிராமத்தின் புறப்பகுதி ஒன்றில் தங்கியிருந்து தவம் செய்து வருகிறார். சில நாட்களில் அத்துறவி அவ்வூரை விட்டு, துறவு நெறிப்படி வேறு இடத்துக்குப் புறப்பட விரும்புகிறார். உடனே கிராம மக்கள் அவரது காலடியில் பணிந்து, கண்ணீர்விட்டு, "சுவாமி, நீங்கள் எங்கள் கிராமத்திற்குக் கிடைத்த தெய்வ வரம். உங்களைப் பிரிந்தால் எங்களுக்கு நற்கதி இல்லை. தயவுசெய்து, இங்கேயே நீங்கள் இருந்து தவம் செய்து எங்களை ரட்சிக்க வேண்டும்" என்று மன்றாடினர். கிராம மக்களின் அன்பினாலும், அவர்கள்பால் ஏற்பட்ட கருணையினாலும் துறவி, அக் கிராமத்தின் புறப்பகுதியிலேயே தங்க முடிவு செய்தார். அவருக்கென்று தனிமையான இடத்தில் ஒரு சிறு ஆசிரமம் ஏற்படுத்தப்பட்டது.

அவருடைய உடைமையாக இருப்பதோ கோவணம் ஒன்று தான். அந்தக் கோவணத்தை உலர்த்துவதற்காக

அவர் கொடியில் தொங்க வைக்கும் சமயத்தில் எல்லாம், அங்குள்ள எலி, அதைக் கடித்துச் சின்னாபின்னமாக்கி விடுவதை அக் கிராம மக்கள் கண்டனர். உடனே மக்கள் அத்துறவியின் குடிசையில் பூனை ஒன்றைக் கொண்டு வந்து விட்டனர். அப்பூனையால் எலித்தொல்லை ஒழிந்தது கண்டு துறவி மகிழ்ந்தார். ஆனால் பூனையைப் பராமரிக்கத் தினமும் பால் தேவைப்பட்டது. உடனே கிராம மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, அப்பூனைக்குப் பால் நிரந்தர மாகக் கிடைப்பதற்காக, ஒரு பசுமாட்டைத் தானமாகக் கொடுத்தனர்.

பூனைக்குப் பால் கறப்பதற்காகத் துறவி தினமும் தனது தியான நேரத்தையும் தவ வேளையையும் குறைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. அவரது தவத்திற்கும், தியானத்திற்கும் இடையூறு ஏற்படுவதைக் கண்ட மக்கள், "சுவாமி, நீங்கள் இதில் எல்லாம் கவனம் செலுத்த வேண்டாம். பூனையைப் பாதுகாக்க நாங்கள் ஏற்பாடு செய்கிறோம். நீங்கள் உங்கள் தவத்தைப் பிசகாது செய்யுங்கள்" என்று வேண்டிக் கொண்டனர். அதன் பிறகு துறவியும் தமது தவத்தின் பொருட்டுத் தாம் நிர்மாணித்திருந்த குகைக்குள் சென்றுவிட்டார்.

அந்தக் குகையில் அவர் பல நாட்களாக உலகை மறந்து, உணவு, பசி, தூக்கம், தாகம் அனைத்தையும் துறந்து, கடும் தியானத்தில் ஆழ்ந்துவிட்டார். பல நாட்கள் கழிந்த பின் தமது தியானத்தை முடித்துக் கொண்டு குகையை விட்டு வெளியே வந்த துறவிக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

அதாவது, அவரது குடிசைக்குப் பக்கத்தில் பல குடிசைகள் எழுப்பப்பட்டு, பல குடும்பங்கள் தம்மைச் சூழ்ந் திருப்பதைக் கண்டார். 'இதெல்லாம் என்ன?' என்று அங்குள்ள மக்களைக் கேட்டார். மக்கள் மிகப் பணி வன்போடு அவரை வணங்கிச் சொன்னார்கள்: "சுவாமி, தங்கள் தவத்திற்கு இடையூறு ஏற்படாதவாறு இருக்க

நாங்களே இங்குக் குடிவந்துவிட்டோம். ஏனென்றால், முற்றும் துறந்த தங்களுக்கென்று இருப்பதோ கோவணம் ஒன்று தான். அதைக் கடித்துத் தொலைக்கும் எலியைத் தொலைக்கப் பூனையை வளர்த்தோம். அந்தப் பூனையும் பல குட்டிகளைப் பெற்று விட்டதால், அவற்றுக்கு நிரந்தர மாகப் பால் கிடைப்பதற்காக ஒரு பசுவை இங்கேயே வளர்த்தோம். அந்தப் பசுவை நல்லவிதமாகப் பராமரிக்க வேண்டும் அல்லவா? அதற்காக ஓர் இடையனை உங்கள் குடிசைக்குப் பக்கத்தில் குடி வைத்தோம். அந்த இடையனுக்கும், அவன் மனைவிக்கும் அடிக்கடி சச்சரவு. அதனால் அவர்கள் அடிக்கடி பசுமாட்டை விட்டு விட்டு ஊருக்குள் வந்து எங்களிடம் நீதி கேட்கிறார்கள். பசு மாட்டைக் கவனிக்காவிட்டால், பூனைக்குட்டிகளின் பசிக்கு யார் பால் வைப்பது? அப்புறம் பூனை என்னாவது? பூனை எங்காவது ஓடி விட்டால் மறுபடியும் எலித்தொல்லை தானே! அதனால் தங்கள் கோவணத்தை யார் பாதுகாக்க முடியும்? ஆகையால், இடையன் குடும்பம் சண்டை, சச்சர வின்றி இருப்பதற்காக, நாங்களே இங்குக் குடிசை போட்டுக் கொண்டு விட்டோம். இனி உங்கள் தவத்துக்கு என்றும் இடைஞ்சலே இருக்காது.''

துறவிக்கு மின்னலாய் ஓர் அதிர்ச்சி. ''துறவியாகிய நாம் எல்லாவற்றையும் துறந்து தனிமையை நாடி இங்கே வந்தோம். அந்தத் தனிமைக்காகவும் தவத்துக்காகவும், இம்மக்கள் காட்டிய ஆதரவும் அதில் நாம் வைத்த பற்றும் அல்லவோ மறுபடியும் நம்மை உலக பந்தத்துக்குள் கட்டி விட்டது. அன்று நம் போதனைகளை இம்மக்கள் மிகவும் வேண்டுகிறார்கள் என்று மகிழ்ந்து மனம் ஒப்பிய வினையால் அல்லவா இது நேர்ந்தது? என்று எண்ணி எண்ணி 'விழிப்புத் தவறி விட்டோம்' என்று உணர்ந்தார். அன்று நள்ளிரவே யாருக்கும் சொல்லாமல் மீண்டும் தமது தனிமையான தவத்துக்காகவும் துறவு ஒழுக்கத்துக்காகவும் காடு மலை தேடிப் பயணத்தைத் தொடங்கி விட்டார்.

இக்கதை மூலம் சாதகனாகிய மனிதனை, அவன் எந்த நிலையில் இருந்தாலும், அவனைத் தனது பயிற்சியிலிருந்து சறுக்கி விடும் 'உலக பந்தத்தை' நாம் உணர முடியும். உலக பந்தமே 'மாயை' ஆகி உயிர்களைத் தன்னுள் இரு வினையாகிய நூலால் கட்டி வைக்கிறது அல்லவா?

ஆகவே, 'விழிப்பு' என்பதை எப்போதும், எஞ்ஞான்றும், எந்நிலையிலும் தவறாது கொண்டிருப்பதன் மூலமே சாதகன் ஒருவன் படிப்படியாக உலக பந்தங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு இறுதியில் முக்தியாகிய வீடுபேற்றை அடைய முடியும் என்பதைப் பகவான் மகாவீரர் வலியுறுத்தியிருக்கிறார்.

வீடுபேற்று நிலையை அடைவதற்கு முன் உயிர் எந்தேந்த வகையில் சம்பந்தம் கொண்டுள்ளது; அந்தச் சம்பந்தங்களிலிருந்து விடுபடுவதற்கு சாதகன் உணர வேண்டிய நெறிமுறைகள் என்ன என்பதற்குப் பகவான் மகாவீரர் வழிகாட்டுகிறார்.

அவரது பாதையில் 'உயிரானது பரிநிர்வாணம் என்ற முக்தியை ஏன் அடைய வேண்டும்?' என்பதற்குரிய விளக்கத்தைப் பெறலாம். இதற்காகப் பகவான் மகாவீரரின் ஜைன சித்தாந்தம் உலகப் பொருட்கள் பற்றிய பாகுபாட்டை ஒன்பது வகையாக நமக்கு உணர்த்துகிறது. அவை முறையே—

1. உயிர்—(இது ஜீவன் எனப்படும்)
2. உயிரற்ற பொருள் — (சடப்பொருள், இது அஜீவன் எனப்படும்)
3. புண்ணியம்—நல்வினை
4. பாவம்—அதாவது, தீவினை
5. ஊற்று—(அதாவது உந்துதல்) இதை 'ஆஸ்ரவம்' என்பர்

6. கட்டு—அதாவது, பந்தம்.

7. செறிப்பு—'சம்வரம்' என்பர் (கர்மம் வரும் வழிக்குத் தடையை ஏற்படுத்துவது)

8. உதிர்ப்பு—இதை "நிர்ஜரை" என்பர். (கர்மபந்தத்தை முற்றாக உதிர்த்து விடுதல்)

9. வீடு—வீடுபேறு என்ற பரிநிர்வாணம்.

இந்த ஒன்பது வகையான பாகுபாட்டை ஒன்பது பதார்த்தங்கள் என்று ஜைனம் நமக்கு அறிவுறுத்துகிறது.

உயிராகிய ஜீவன் உயிரற்ற சடப்பொருளாகிய அஜீவனுடன் சம்பந்தப்படும்போது, புண்ணியம் பாவம் என்ற இருவினைகளில் உழன்று அதற்குரிய வினைப் பயன்களை அனுபவிக்கிறது. நல்வினை, தீவினை ஆகிய வினைகளுக்கு, அதாவது கர்மாக்களுக்கு, ஜீவனைத் தூண்டுகிற பொருளையே ஜைன மார்க்கம், 'ஆஸ்ரவம்' என்கிறது. 'ஆஸ்ரவம்' என்றால் ஊற்று என்று பொருள். அதாவது அனுபோக உணர்ச்சிக்கு ஜீவனைத் தள்ளுகிற உந்து விசை. இதனால் ஜீவனாகிய உயிர் நல்வினை, தீவினைகளில் உழல்வதால், அதற்குரிய வினைப்பயன்களாக 'உலக பந்தம்' ஏற்பட்டு விடுகிறது. இதுவே ஜீவனைக் கர்மாவில் கட்டி வைக்கின்ற 'பந்தம்' (கட்டு) என்று கூறும். இதனால் தான் உயிர் மீண்டும் மீண்டும் பிறந்தும் இறந்தும் உலக மாயையினுள் உழல்கிறது என்பதால், அதைத் தடை செய்கின்ற 'சம்வரம்' என்ற தத்துவத்தை நமக்கு ஜைனம் காட்டுகிறது. 'சம்வரம்' என்ற தத்துவத்தைச் சாதகன் விழிப்புடன் கடைப்பிடித்தால் முன்வினைகளில் உள்ள தீவினைப் பயனைத் தீர்த்துக் கொண்டும், பின் வினையாகிய கர்மாக்களில் நல்வினைகளைச் சேர்த்துக் கொண்டும் நல்லொழுக்கத்தில் நிற்க முடியும். இதுதான் பரிநிர்வாண நிலைக்கு உயிர் ஆயத்தமாகிற முதல் படி. இந்த 'சம்வரம்' என்ற பொருளை, ஜீவனைக் கட்டி

வைத்துள்ள கர்மவினைகளை ஜீரணிக்கின்ற தத்துவமாக வும், புதிய கர்மாக்களில் ஜீவன் சம்பந்தப் படுவதைத் தடை செய்கின்ற தத்துவமாகவும் நமக்கு உணர்த்திய பகவான் மகாவீரர், நல்வினை, தீவினை என்ற இரு வினையும் ஜீவனுக்கு முக்தியைத் தராது என்பதையும், அதனால் ''செறிப்பு'' மூலம் முதல்படியாக ஜீவனானது தீவினைகளிலிருந்து விடுபடவும், பின்னர் நல்வினைகள் மூலம் நல் ஞானத்தை அடைந்து, இறுதியில் நல்வினையை யும் ஒழித்து, அனைத்துக் கர்ம பந்தங்களையும் உதிர்த்து விட வேண்டும்' என்றும் காட்டுகிறார். இதுவே, 'நிர்ஜரை' என்று ஜைனம் காட்டும் 'உதிர்ப்பு' ஆகிய எட்டாவது பதார்த்தம். ஏனெனில் நல்வினையும் ஜீவனை உலக அனுபவத்தில் கட்டி வைப்பதால் அதற்குப் பிறவித் துன்பம் நேருகிறது. பிறவியினால் நல்வினை, தீவினை என்ற இருள் சேர்கிறது என்பதை நாம் உணர்கிறோம்.

இதைத் தான் வள்ளுவ தேவர் கூட, தமது குறளில் கடவுள் வாழ்த்து அதிகாரத்தில்—

**'' இருள்சேர் இருவினையும் சேரா ; இறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு ''**

—திருக்குறள்; கடவுள் வாழ்த்து : 5

என்று குறிப்பிடுவார்.

நன்றாக இக்குறளின் பொருளை நாம் சிந்திக்க வேண்டும். நல்வினை, தீவினை இரண்டுமே இருள் ஆகிய துன்பத்தை உயிருக்குச் சேர்க்கக் கூடியன என்று தெளிந்த வள்ளுவர், 'இறைத்தன்மை' என்று ஜைனம் குறிப்பிடும் உயிரின் இறுதி நிலையான 'வீடுபேற்று நிலை' யை அடை வதையே 'இறைவன் பொருள்' என்றும், உணர்ந்திருப்ப தால் —'இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'— (அதாவது பரிநிர்வாணநிலை பெற்ற ஜீவனுக்கு) நல்வினை, தீவினை இரண்டுமே சேர்வதில்லை' என்றும் நமக்குக் கூறி யிருக்கிறார்.

ஆகவே, ஜைன சித்தாந்தம் மனிதப்பிறப்பாக உயர்ந்த நிலை பெற்ற உயிரைப் 'பரிநிர்வாண நிலைக்கு' எந்தெந்தத் தத்துவ நிலைகளில்—எவ்விதம், உயர வைக்கிறது என்பதை, பகவான் மகாவீரரின் பாதையில் நாம் காண முடிகிறது.

இந்த ஒன்பது பதார்த்தங்களையும் அதன் இறுதிப் பதார்த்தமான 'வீடுபேறு' நிலையை எட்டும் விதத்தையும் 'மேரு மந்திர புராணம்' என்ற நூலில்—ஜைன தத்துவத்தின் சாராம்சமாகவும் வீடுபேற்று நிலையின் பெருமை குறித்தும் இரத்தினச் சுருக்கமான செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. அச்செய்யுள் வருமாறு:

**' உயிரும் உயிரல்லதும் புண்ணியம் பாவம் ஊற்றும்**
**செயிர்தீர் செறிப்பும் உதிர்ப்பும் கட்டும் வீடும் உற்ற**
**துயர்தீர்க்கும் தூயநெறியும் சுருக்காய் உரைப்பன்**
**மயல்தீர்ந்த காட்சி யுடையோய் இதுகேள் மதித்தே.'**

"உலகபந்தமாகிய மயக்கத்தைத் தீர்த்துக் கொண்ட, நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் உடையவனே! உயிர் சம்பந்தப்படும் உலகப் பொருள்களின் ஒன்பது பதார்த்தங்களே, உயிருக்கு நேர்கின்ற பிறவித் துன்பத்தை நீக்கும் தன்மையுடையன என்பதையே உனக்குச் சுருக்கமாகச் சொல்லுவேன். நான் சொல்வதை மதித்துக் கேட்பாயாக!" என்பது இச்செய்யுளின் கருத்து. இந்த ஒன்பது பதார்த்தங்களுள் ஐந்து அத்திகாயம், ஆறு திரவியம், ஏழு தத்துவம் என்ற உட்பிரிவுத் தத்துவங்களும் விரித்து உரைக்கப்பட்டுள்ளன.

அதாவது ஐந்து, ஆறு, ஏழு என்று விரித்துப் பேசப்படும் தத்துவ விளக்கங்கள், இந்த ஒன்பது பதார்த்தங்களுள் அடங்குகின்றன. ஒன்பது பதார்த்தங்களில் இரண்டாவதான அஜீவனை (உயிரல்லாத சடப் பொருளை) ஐந்து வகையாகப் பிரித்துப் பேசுகிறது ஜைனம். அவை புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாயம், காலம் என்பன.

உயிரல்லாத பொருளின் ஐந்து பிரிவுகளுடன் ஜீவனாகிய முதல் பதார்த்தத்தையும், சேர்த்தால் ஆறு திரவியம். இந்த ஆறு திரவியத்தில் கடைசிப் பொருளை அதாவது, உயிரல்லாததன் ஐந்தாவது பகுப் பொருளான 'காலம்' என்பதை நீக்கிவிட்டு, மற்றப் பகுப்பொருட்களான புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாயம் என்ற நான்கினோடு ஜீவனையும் இணைத்து 'ஐந்து அத்திகாயம்' என்று ஜைனம் குறிப்பிடுகிறது. இதன் மூலம் ஐந்து அத்திகாயம், ஆறு திரவியம் என்பன என்ன என்று நாம் உணர்கிறோம்.

முன்னதாகக் குறிப்பிட்ட ஒன்பது பதார்த்தங்களில், புண்ணியம், பாவம் என்பதை நீக்கிவிட்டால், எஞ்சியுள்ள ஏழு பதார்த்தங்கள் மட்டும் 'ஏழு தத்துவம்' என்று விளக்கப்பட்டுள்ளது.

ஆக, உயிர் + உயிரல்லாதது என்ற இரண்டு பதார்த்தங்களுள் ஆறு திரவியம் என்ற சித்தாந்தம் இருப்பதும், உயிரல்லாத அஜீவனின் ஐந்து பகுப்பொருட்களில் கடைசிப் பகுப்பொருளான காலத்தை நீக்கி, மீதி நான்கு பகுப்பொருள் + உயிர் என்ற முதல் பதார்த்தத்தைச் சேர்த்து 'ஐந்து அத்திகாயம்' என்ற சித்தாந்தம் இருப்பதும், ஒன்பது பதார்த்தங்களில் புண்ணியம், பாவம் என்ற இரு வினைகள் நீங்கலாகப் பிற ஏழு பதார்த்தங்கள் மட்டும் 'ஏழு தத்துவம்' என்ற சித்தாந்தம் பெற்றிருப்பதும், ஜைன மார்க்கத்தில் மட்டுமே காட்டப்படுகிறது.

ஐந்து அத்திகாயம், ஆறு திரவியம், ஏழு தத்துவம் என்ற இவற்றோடு புண்ணியம், பாவம் என்ற இரு வினைகள் சம்பந்தப்படுவதே உயிரின் பிறவித் தத்துவமும், பிறவியை அறுத்துப் பரிநிர்வாண நிலையை உயிர் அடைகின்ற விளக்கமும் ஆகின்றது.

சரி, உயிருக்கு 'பரிநிர்வாணம், எவ்விதம் ஏற்படுகிறது என்பதற்கான பதிலை இங்குச் சிந்திக்க வேண்டி இருக்கிறோம்.

ஜைனம், இந்தப் பிரபஞ்சத்தின் இயக்கத்தை நிரந்தரம் என்று ஒப்புக்கொண்டு, அதை அறிவியல் ரீதியான, என்றும் மாறாத இயல்பைப் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்பே கணித்தும் இருக்கிறது.

நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மணி ஆகிய பஞ்ச பூதங்களின் தன்மைகளுக்கேற்ப உயிர்களின் இயக்கமும், குணாதிசயங்களும், வாழ்வும் அதன் முடிவும் அமைந் துள்ளன. பஞ்சபூதங்களின் ஆதிக்கமே இந்தப் பிரபஞ்ச வெளி எங்கனும் வியாபித்துள்ளது. நாம் வாழ்கின்ற பூமியாகிய மண்ணுலகில் இதன் சேர்க்கையே மண், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என்று இருப்பது போல், மற்றக் கிரகங்களில் இந்தப் பஞ்சபூதங்களின் சேர்க்கை மாறு பட்டிருந்த போதும், பரவெளி எங்கும் பஞ்சபூதங்களே நிரந்தரமானது என்பது ஜைனத்தின் முடிவு.

இதன் அடிப்படையிலேயே உயிரும் நிரந்தரமானது என்றும், அது அடைகின்ற உடலாகிய கூட்டின் தன்மைக் கேற்ப வடிவம் பெறுகிறது என்றும் நமக்கு ஜைனம் கூறும். உதாரணமாக, எறும்பின் வடிவில் இருக்கின்ற ஜீவனும், யானையின் வடிவில் இருக்கின்ற ஜீவனும் ஒன்றே. ஆயினும், ஆன்மாவானது, தான் அடைகின்ற கூட்டுக்கு ஏற்ப, தன்னை அதன் வடிவ அளவுக்கு விரிவுபடுத்திக் கொள்கிறது என்று பொருள் ஆகிறது.

'துறவுக்கு ஒரு பட்டினத்தார்' என்று இன்று நாம் புகழ்கின்ற அளவுக்கு, அனைத்தையும் துறந்த பட்டினத்து அடிகளின் கருத்து ஒன்றிலிருந்து இந்த விளக்கத்தை வேறு ஓர் உருவகத்தில் காணலாம். அவர் கூறுவார்:—

" அப்பென்றும் வெண்மைய தாயினும்
ஆங்கந் நிலத்தியல்பாய்த்
தப்பின்றி யேகுண வேற்றுமை
தான்பல சார்தலினால்

**செப்பில் அபக்குவம் பக்குவ**
**மாயுள்ள சீவனிலும்**
**இப்படி யேநிற்பன் எந்தை**
**பிரான்கச்சி யேகம்பனே!''**

—பட்டினத்தார் பாடல்கள்; திருஏகம்பமாலை: 20

மகாபிரும்ம ஞானியரான பட்டினத்து அடிகளின் இந்தக் கருத்தில் ''இறைவனாகிய ஏகாம்பரேச்வர் இந்தப் பிரபஞ்சக் கூறில் உயிர்வாழ்கின்ற ஜீவர்களின் பக்குவம், பக்குவமற்ற தன்மைக்கேற்பவே ஒவ்வொரு ஜீவர்களிலும் நிற்கிறான்'' என்பது பொருள்.

தண்ணீரின் நிறம் தூய படிக நிறம் ஆயினும், அந் நீரானது எந்த நிலத்தில் மழை நீராக வீழ்கிறதோ, அந்த இடத்து மண்ணின் நிறத்தையே பெற்று விடுவதைப் போல், பேரான்மாவாகிய இறைவன் பொருட்கள்தோறும், அவற்றின் வடிவங்களின் தன்மைக்கேற்ப மாறுபடுகின்றான் என்பது இதன் தெளிவான பொருள்.

பட்டினத்தடிகள் முற்றும் துறந்து, கேவல ஞானத்தை அடைந்தவர் என்பதை உலகம் அறியும். எனினும், அவர் இறைவன் என்ற 'பேரான்மா' ஒன்றை ஏகாம்பரேச்சுவராக உருவகப் படுத்தியிருப்பதை ஜைனம் நேரிடையாக ஒப்புக்கொள்ளாது (நேரிடையாக என்பதன் உள்ளர்த்தம் குறித்துச் சாதகனின் லட்சணங்களை உரைக்கும்போது காண்போம்). இங்குச் சாதாரண ஆன்மா என்றும், பேரான்மா என்றும் இறைவனைத் தனிப்பெரும் பரம் பொருளாக்கி, மனிதனைப் பிரித்துப் பேசப்படுவதை, அதாவது பரமாத்மா—ஜீவாத்மா வாதத்தைப் புறக்கணித்து, பட்டினத்தடிகளின் பாடலையே உதாரணமாகக் கொண்டு, வேறொரு பார்வையில் உயிரின் தத்துவத்தை ஜைனம் நமக்குக் கூறுகிறது. அதன்படி ஒன்பது பதார்த் தங்களில் முதலாவதான 'உயிர்' என்ற ஜீவனுக்கு மட்டும் ஒன்பது பண்புகள் உண்டு என்பதும் அதன் மூலம் 'கடவுள்'

என்ற தனித்தத்துவத்தை ஜைனம் மறுப்பது சரியானதே என்பதும் நமக்குப் பகவான் மகாவீரர் பாதையில் உணர்த்தப்படுகின்ற வியப்பான விளக்கங்கள் ஆகும். 'உயிர்' என்பது எவ்விடத்தும், எப்பிறப்புக்கும் பொதுவானதே என்று ஜைனம் உரைப்பதையே—

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்"**

—திருக்குறள்: பெருமை : 2

என்று வள்ளுவரும் தமது குறளின் பொருட்பாலில் ஒழிபியலில் உணர்த்தியிருக்கிறார்.

அதாவது 'உயிர்' என்பது ஒன்றே என்பதும், அது தனது ஒன்பது வகையான பண்புகளின் அடிப்படையிலேயே 'செய்தொழிலாகிய' வினையை, பிறவித்தன்மைக்கேற்பப் புரிகிறது என்ற ஜைனத்தின் அகப்பொருளாக உரைக்கப் படுகிறது.

உயிரின் ஒன்பது தன்மைகளாக ஜைனம்:

1. உயிரின் பிராணன்களுடன் கூடியது.
2. உபயோகம் என்னும் பண்புடையது.
3. உருவம் அற்றது.
4. எந்த உடலைத் தரிக்கின்றதோ அந்த உடல் அளவு பரந்திருப்பது.
5. வினையைச் செய்வது.
6. அவ்வினைப் பயனை அனுபவிப்பது.
7. சம்சாரத்தில் (பிறவியில்) உழல்வது.
8. சித்தநிலை பெறுவது.
9. மேல்நோக்கி எழும் பண்புடையது.

என்று வகைப்படுத்தியுள்ளது.

உயிரானது இந்தத் தத்துவக் குணங்களின் மூலமே, பல்வேறு பிறப்புக்களில், ஜீவர்களின் தன்மைக்கேற்ப குண

பேதமுற்றுத் திகழ்கிறது. அதன் பரிணாம இயல்பான 'சித்தநிலை' பெறும் பண்பின் மூலமாகக் கேவல ஞானத்தைப் பெறவும், மேல் நோக்கி எழும் பண்பின் காரணமாக அது 'வீடுபேறாகிய' பரிநிர்வாண நிலைக்குத் தன்னை உட்படுத்தவும் விழைகிறது என்று உணரலாம். ஆகவே உயிர் ஒன்றே தாழ்ந்த சாதாரண ஜீவ ராசி முதல் உயர்ந்த ஜீவப் படைப்பான மனிதப் பிறவி வரை வேறுபடும் இயல்புடையது என்பதால் அதுவே, இறைத்தன்மைக்கும் உயர முடியும் என்ற விளக்கம் நமக்குக் கிடைக்கும்.

இந்த நுட்பமான உண்மையின் அடிப்படையிலேயே மனிதனைப் பிறவிகளிலேயே மேலான தகுதி பெற்ற 'உயிர்' என்று ஜைனம் விளக்குகிறது.

மனிதப் பிறவியிலும் 'மனம்' என்ற சிந்தனை ஆற்றலைப் பெற்றால் ஒழிய மனித உயிர் மோட்ச கதிக்குச் செல்கின்ற பாதையை உணராது. அதன் விளைவாக அது மனிதப் பிறப்பிலிருந்து கீழான பிறப்புக்கும் செல்கின்ற வினைகளில் ஈடுபடும் என்பதும் மகாவீரரால் நமக்கு உணர்த்தப்படுகிறது.

இந்த உண்மையைப் பழம்பெரும் நூலாகிய தொல்காப்பியத்தில்:—

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே"

—தொல்காப்பியம் ; மரபியல்: 27

என்று மரபியல் சூத்திரத்தில் தொல்காப்பிய தேவர், ஓரறிவு முதல் ஆறறிவு வரையுள்ள புலன் அமைப்பை உரைத்திருக்கிறார்.

உயிரானது தனது பிறவிகளிலேயே இறுதிப் பிறவி யான மனிதப் பிறப்பை எடுத்துள்ளதால், உயிரின் ஒன்பது பண்புகளில் கடைசிப் பண்பான 'மேல் நோக்கி எழும்' பண்பின் விதிப்படி, தாழ்ந்த பிறப்பிலிருந்து உயர்ந்த மேலான பிறப்பாகிய மனிதப் பிறப்புக்கு வந்துள்ளது என்ற விளக்கத்தை இதன் மூலம் பெறலாம்.

இதன்மூலம் ''மனித உயிரானது சரணடைவதில்லை; அது இறைத்தன்மைக்குத் தன்னை உயர்த்திக் கொள் கிறது'' என்பதே ஜைனம் காட்டும் ஆன்மநெறி.

''பரமாத்மா வேறு இல்லை; ஜீவாத்மா வேறு இல்லை. வாழ்ந்து கொண்டு இருக்கும் ஒவ்வோர் உயிரும் சுத்தி யடைந்து பரமாத்மா நிலையை அடைகிறது. ஒவ்வோர் உயிருக்கும் அந்த உயர்ந்த நிலையை அடைவதற்குத் தகுதி உண்டு'' என்பதை எடுத்துச் சொல்வதுதான் ஜைனத்தின் உன்னத வெறி.

ஆகவே, உயர்ந்த பிறப்புள்ள உயிர், இதிலிருந்தும் மேலான, தனது பிறப்பற்ற தன்மையாகிய மோட்ச கதிக்குச் செல்வதற்கு, மனித உடலால் ஆகும் உண்மைப் பயனை அது அடைய வேண்டாமா? அந்தப் பயனை 'உயிர்' பெற்று மோட்ச கதியாகிய வீடுபேற்றைப் 'பரிநிர்வாண நிலையை' அடைவதில் தான் அதற்குப் பேரின்பம் இருக்கிறது. அதுவன்றி உயிரின் பிறப்பினால் உலக வாழ்வின் வினைப்பயனால் கிட்டுகின்ற இன்பங்கள் அனைத்தும் 'உண்மை இன்பங்கள்' அன்று; அது பிறவித் துன்பத்தை விளைவிக்கின்ற கர்மாக்களைக் கொண்டவை. நல்வினையாயினும் அதன் வினைப்பயன் விளைவிப்பதும் பிறவித் துன்பமே என்று பகவான் மகாவீரர் நமக்கு வெளிச்சம் காட்டுகிறார்.

'பிறப்பு' என்பதே உயிருக்குக் கர்மவினையால் நேரு கின்ற—இன்ப, துன்பங்களுக்கெல்லாம் ஆதாரமான முதல் துன்பம் என்பதை, அவரது வெளிச்சப் பாதையில் பார்க் கிறோம்.

அந்தப் பிறவித் துன்பத்தினை, உயிராகிய ஜீவன் உணர்கின்ற நற்காட்சியின் விளைவாக, மனிதப் பிறப்பாகக் கருவுற்று, தாயின் வயிற்றிலிருந்து மண்ணில் விழுந்ததும் முதன் முதலாகத் தனது உணர்வை, அழுகை மூலம் வெளிப்படுத்துகிறது, என்று சொல்லலாம்.

ஏனெனில், உயிர் மனிதப் பிறப்பாகப் பிறவி எடுப்பதே அதன் முன்வினையின் நல்வினை ஒன்றினால்தான் என்ற ஜைன சித்தாந்தப்படி நல்வினைப் பயனோடு மனிதனாகப் பிறக்கும் உயிருக்கு, தீவினைகள் குறைந்து அல்லது முற்றாக, அதன் முன்பிறவிக் கர்மாக்களினால் தீவினைப் பயன் தீர்ந்து விட்டதால் மேல் நோக்கி எழும் பண்பினால் மேலான பிறவியை எய்துகிறது என்றாகிறது. ஆகவே மேலான பிறவியாகிய இந்த மனிதப் பிறப்பின் நோக்கம் இரண்டே இரண்டாகத்தான் இருக்க முடியும் என்று நம்பலாம்.

1. முன் ஜென்மாக்களில் முடிவாக உயிருக்குள்ள தீவினைகளை, முற்றாக மனிதப் பிறப்பின் மூலம் ஒழித்து மோட்ச கதியை நோக்கக்கூடிய நல்வினைப் பிறவிக்குத் தன்னைத் தயார்ப் படுத்துவது.

2. மனிதப்பிறப்பின் மூலம் தீவினைப் பயனே இல்லாது, மீதியிருக்கும் நல்வினைகளையும் அறுத்தெறிந்து மோட்ச கதிக்குத் தன்னை உயர்த்திக் கொள்வது.

இந்த இரண்டு நோக்கங்களே மனிதப்பிறப்புக்குள் அடங்கி இருக்கின்றன. இதன் மூலம் மனிதர்களாகப் பிறப்பெடுத்த அனைவருமே மோட்சகதிக்குரிய இறுதி இலக்கை மனிதப் பிறப்பில் பெறுவதில்லை என்ற உண்மையும் பொதிந்துள்ளதை அறியலாம். ஆக, மனிதர்களாகிய நாம், நமக்குள்ள ஆறறிவாக உயர்ந்த தகுதிகளின் வாயிலாக நமது வாழ்க்கையில் எவ்வுயிருக்கும் துன்பம் தராத கொள்கைகளையே உணரவேண்டும். இதுவே நற்காட்சி:

நற்காட்சியின் வாயிலாக, மனிதன் நல்லறிவும், நன்னடத்தையையும் அடைந்து விடுவதால் நல்வினை எது? தீவினை எது? நல்வினைப்பயன் எது? தீவினைப் பயன் எது? என்பதெல்லாம் மனித உயிருக்கு விளங்குகிறது.

அதன் முடிவாக உலகக் கட்டுகளை அறுத்து, 'சம்வரம்' என்ற பொருள் மூலம் கர்மம் வரும் வழிக்குத் தடை ஏற்படுத்தி, தேங்கியுள்ள வினைப்பயன் அனைத்தையும் 'நிர்ஜரை' மூலம் உதிர்த்து மோட்ச கதியாகிய பரிநிர்வாண நிலையை எய்துவதற்கு, இந்த மனிதப்பிறப்பும் காரணமாயிருக்கிறது என்ற உண்மையை நாம் உணரவேண்டும். ஆகவே, மனிதன் அல்லாத எப்பிறவியிலும் உயிரானது இருவினைகளையும் அறுக்கின்ற தகுதிகளைப் பெறுவதில்லை என்ற உயிரின் உயர்வான பரிணாமத் தத்துவத்தை ஜைன மார்க்கத்தின் மூலம் உணர்த்தி மனிதப் பிறப்பின் விடுதலைக்கும் உயிரின் வீடுபேற்று நிலைக்கும் பகவான் மகாவீரர் பாதை வகுத்துள்ளார்.

அவர் காட்டும் பாதையின் இறுதி இலக்கே மனித உயிர்க்கு வீடுபேற்றை அளிக்க வல்லது என்பதை, ஜைன சித்தாந்தத்தின் ஒவ்வொரு நெறிகளின் அணுகுமுறைகளிலும் நாம் உணர முடியும். எனினும், ஜைன மார்க்கம் எம்மதத்தினருக்கும் விரோதமான போக்கைக் கொண்டிருக்கவில்லை. இன்னும் சொல்லப் போனால் ஜைன மார்க்கம், வேறு எந்த மதங்களின் தத்துவ வாதங்களையும் கடந்து நின்று, வேறு எந்த மார்க்கத்தினராலும் சொல்ல முடியாத மிக நுட்பமான முறையில், பிரபஞ்சத்தின் நிரந்தரத் தன்மைகளோடு விரிவுபடுத்தி நமக்கு உரைக்கிறது. இதனால் ஜைனமார்க்கம் ஒன்றே மனிதப் பிறவியின் மூலம் உயிருக்குப் 'பரிநிர்வாண நிலையை' அளிக்கக்கூடிய பாதையைக் கொண்டது என்பது, இம்மார்க்கத்தின் சித்தாந்தங்களை முழுமையாக உணர்பவர்களுக்கே புரியும்.

ஆகவே, 'பரிநிர்வாணம்' ஒன்றே உயிரின் தனித் தன்மை என்பதும், அதன்மூலம், உயிரானது அஜீவனோடு தொடர்பு கொள்ளக் காரணமான இருவினைகளை அறுத்து, பிறப்பு இறப்பற்ற பேரின்ப நிலையில் நிலைத்து விடுகிறது என்பதும், அதுவே உயிரின் இறுதியான இலக்கு என்பதும் பகவான் ஸ்ரீமகாவீரர் பாதையில் நாம் காண்கின்ற விளக்கங்களாகும்.

மனிதப் பிறவியின் பயன் என்பது 'வீடுபேறு' என்ற முக்தி நிலைக்கு உயிரைச் செலுத்துகின்றதாகவே அமைய வேண்டும். இந்த நோக்கமே அன்றி வேறு எதுவும் மனிதருக்குப் பயனுள்ளதாக இருக்க முடியாது. இக்கருத்தை மனிதர்களாகிய சாதகருக்குக் காட்டுவதற்காக—

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பினை யானிருந் தோம்பு கின்றேனே!"

—திருமந்திரம்: 275

என்று திருமூலர் பாடுவார். திருமந்திரமாகிய திருமூலரின் கருத்து ஜைனம் நமக்கு உரைக்கின்ற 'உயிர்' என்ற பொருளின் உன்னதத் தன்மையை உரைப்பதையே இங்கே நோக்கவேண்டும்.

பல்வேறு ஞானியர்களும் 'உடம்பாகிய' மனிதப் பிறப்பை இழுக்கு என்று சலித்துக் கொண்டிருக்க அவர்களது கருத்துப்படியே உடம்பாகிய மனிதப் பிறப்பு இழுக்கு என்று திருமூலரும் நம்பியிருந்தாராம். பின்னர், தொடர்ந்த தவத்தின் மூலம் 'கேவல ஞானம்' கிட்டிய போது, இந்த உடம்பின் வடிவில் உயிராகிய உன்னதப் பொருள் பிறவிகளிலேயே மேலான பிறப்பெடுத்துள்ளது, என்ற விளக்கம் அவருக்குக் கிடைக்கிறதாம். அதனால் தனது பிறவிகளிலேயே மனிதப் பிறப்பாகிய உத்தமப்

பிறப்பின் மூலம் உயிராகிய இறைவன் உடலைக் கோவில் கொண்டதாக இருப்பதால் இந்த உடம்பை நல்ல முறையில் பராமரித்துப் போற்றுகின்றாராம், திருமூல தேவர். 'உடம்பை ஓம்புகின்றேன், என்பது, மனிதப் பிறப்பின் மூலம், உடம்பு என்ற கருவியினால் உயிருக்குக் கிட்ட வேண்டிய உண்மைப் பயனை (வீடுபேற்றை) அளிப்பதற் காக நற்றவத்தில் செலுத்திக்கொண்டேன் என்ற பேரின்ப உணர்ச்சியைக் காட்டுகிறார். அதனால்தான்—

" உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்,
கள்ளப் புலன் ஐந்தும் காளா மணிவிளக்கே!"

—திருமந்திரம்: 1823

என்றும் திருமூலர் பாடுவார்.

ஆகவே, 'சீவனாகிய உயிர்தான் இறைத்தன்மை யுடையது என்பது 'தெள்ளத் தெளிந்தவர்க்கே'—அதாவது ஜைன நெறிகளின் வாயிலாக, சீலம் தவறாது ஒழுகி உணர்ந்தவர்க்கே புலனாகும்.

எனவே பரிநிர்வாண நிலை எய்துவதற்குரிய ஜைன நெறிகளின் விரிவே 'How do you look?' என்பதற்கான விளக்கமாகும். எவ்வாறு? என்பதை அடுத்தபடியாகச் சிந்திப்போம்...

## III

## எவ்வாறு நோக்குகிறாய்?

ஜைனம் உயிர்களுக்கு முக்தியாகிய 'வீடுபேற்றை' அளிக்கின்ற நோக்கத்திலேயே, தனது மார்க்கப்பாதையைக் கொண்டுள்ளது என்றும், அந்தப் பாதையின் வழியே, உயிர்களிலேயே உயர்ந்த நிலை பெற்ற மனித உயிரானது, முக்திக்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்ள வேண்டியதன் காரணம் என்ன என்பதையும் கண்டோம்.

கற்பதும், கற்பிக்கப்படுவதுமான உயர்ந்த ஆற்றலைக் கொண்ட மனிதர்களாகிய நமக்கு, இந்தப் பிரபஞ்சத்தையும், அதன் இயக்கத் தன்மையையும், அதில் உயிர்களும், உயிர்கள் அல்லாததும், நம் கண்ணுக்குத் தெரிவனவும், அறிவுக்கு மட்டுமே புலப்படுவனவுமான பொருள்கள் பற்றிய சித்தாந்தங்களை ஒன்பது பதார்த்தங்களின் பகுப்பின் மூலம் ஜைனம் நமக்கு விரிவாக உணர்த்துகிறது.

இந்த ஒன்பது பதார்த்தங்களின் அடிப்படையிலும், 'ஜீவன்' என்ற உயிரின் ஒன்பது பண்பியல்களின் அடிப்படையிலும், மனித உயிரானது 'பரிநிர்வாணம்' என்ற வீடுபேற்றை அடையமுடியும் என்பதே ஜைனம் மனித குலத்துக்குக் காட்டுகின்ற வெளிச்சம். பகவான் ஸ்ரீமகாவீரர் அந்த வெளிச்சத்தை மேலும் பிரகாசமான தாக்கி, மனித உயிர்களாகிய நமக்கு, உயர்ந்த மார்க்க நெறிகளைக் காட்டியிருக்கிறார்.

அவரது மார்க்கப் பாதையில் 'How Do You Look?' என்ற கேள்வியைக் கேட்டுக்கொண்டு, அதற்கு விளக்கமாக அப்பாதையின் மார்க்க நெறிகளை, இனி இங்கே காண்போம்.

மனித உயிருக்கு எது உன்னதமான ஸ்தானத்தை அளிக்க வல்லதோ, அதை—அந்த மார்க்கத்தை, ஜைனம் நமக்குத் தந்துள்ளது. மார்க்கத்தைத் தந்துள்ளது மட்டுமன்றி, அம்மார்க்கத்தின் உண்மையைச் சரியான முறையில் அறிந்து கொள்ளவும், அறிந்ததன் வழியே சாதகனானவன் வாழ்க்கையில் சரியான முறையில் செயல்படுத்தவுமான இலக்கணத்தையும், இலட்சணத்தையும் ஜைனம் காட்டுகிறது என்பதை நாம் பெருமையோடு சொல்லிக் கொள்ள முடியும்.

இன்றைக்கு மட்டுமன்றி அன்றைக்கும், இனி என்றைக்கும் மனித குலத்துக்கு மேன்மையும், அமைதியும்,

வாழ்வும் தருகின்ற 'சமாதானம்', 'சமரசம்' முதலான மனிதாபிமான நெறிகளின் ஜீவதளமாக ஜைன மார்க்கம் இருப்பதையும் அதன் நெறிகளின் போக்கில், மனித குலத்துக்கே உறுதுணையாகும் உன்னத நோக்கம் இருப்பதையும் உணரலாம்.

ஜைன நெறிகளை 'உயிர்க்கு உறுதுணையாகும் உன்னத விளக்கமாக' நாம் உணர்வதற்கு அடிப்படைக் காரணம், ஒரு பொருள் பற்றிய உண்மைத் தன்மையை, உண்மையாகவே அறிய, அது வழிகாட்டுவதேயாகும். இவ்வாறு 'உண்மையை, உண்மையாக உணர வைக்கின்ற தனிச்சிறப்பு' மிக்க அறிவை, தத்துவத்தை ஜைனம் கொண்டுள்ளது என்பதை நாம் இங்கே விசேஷமாகக் குறிப்பிட வேண்டியிருக்கிறது. அந்தத் தத்துவம்தான் 'அநேகாந்த வாதம்' என்ற ஒரு கோட்பாடு.

'அநேகாந்த வாதம்' என்றால் என்ன?' என்பதற்கு, திருவள்ளுவர் நமக்கு எது மெய்யறிவு? என்று உணர்த்துகிற கருத்தை இங்கே குறிப்பிட்டால் அது மிகப் பொருத்தமாக இருக்கும்.

**"எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு"**

—திருக்குறள்; மெய்யுணர்தல்: 5

என்று திருக்குறளில் அறிவுடைமையை விளக்கும் ஒரு குறளில் இக்கருத்தைச் சொல்லியிருக்கிறார்.

எந்த ஒரு பொருளை யார் சொல்லக் கேட்டாலும் அதன் உண்மையான பயனைக் காண வல்லதே 'மெய்யறிவு' என்கிறார் வள்ளுவர்.

வள்ளுவர் வலியுறுத்துகின்ற மெய்யறிவைத்தான் ஜைனமும், மனிதனாகிய சாதகனுக்கு, அறிவின் அடிப் படைக் கோட்பாடாக வற்புறுத்துகிறது.

"எந்த உண்மையையும் காண முயலும் போது, ஒரு கோணத்தில் நின்று முடிவு செய்வது தவறு; அப்பொருள் பற்றிய முழுப் பரிமாணத்தையும் காண்பதற்குப் பல கோணங்களிலிருந்து பார்த்து, ஆராய்ந்து முடிவு செய்வதே உண்மையான முடிவாகும். ஒரு கோணத்தில் மட்டும் பார்த்து முடிவுக்கு வருவது ஒரு சார்பான உண்மையாகுமே தவிர முழு உண்மையும் ஆகாது" என்ற மெய்யுணர்வினால் ஜைனம் இந்த அநேகாந்தவாதக் கோட்பாட்டின் மூலம் சாதகனுக்கு, தனது மார்க்க நெறிகளை விரிவாக, பல்வேறு பௌதிக, அறிவியல் உண்மைகளைக் கொண்ட சித்தாந்தங்களாக உணர்த்துகிறது. இந்த அநேகாந்த வாதத்தை 'சியாத் வாதம்' என்றும் குறிப்பிடுகிறார்கள்.

"ஒரு பொருள் பற்றிய மெய்யான முடிவை ஏழு கோணங்களில் இருந்து ஆராய்ந்து முடிவு செய்யவேண்டும்" என்று இந்த அநேகாந்த வாதக் கோட்பாட்டின் மூலம் ஜைனம் சாதகனுக்கு நியதி சொல்லும். இந்நியதியை, 'ஸ்பித பங்கி நியாயம்' என்று சொல்வர். இக்கோட்பாட்டின் மூலமே, ஜைனம் வகுத்துள்ள ஒன்பது பதார்த்தங்களும், உயிரின் ஒன்பது பண்பியல்புகளும் அது தொடர்பான பிறவித் தத்துவங்களும் நமக்கு உணர்த்தப்பட்டுள்ளன. (அவற்றை இப்பகுதியின் முடிவில் காண்போம்).

அநேகாந்த வாதக் கோட்பாட்டின் மூலம் முரண்பட்ட உண்மைகள் நமது அறிவை வியக்கவும், ஆழ்ந்து சிந்திக்கத் தூண்டவும் செய்யும். உதாரணமாக ஒன்றைக் குறிப்பிடுவோம்:

ஓர் அரசமரத்தடியில் விநாயகர் சிலை ஒன்று இருக்கிறது. அவ்வழியே சென்று கொண்டிருக்கும், இந்து மதத்தைச் சேர்ந்த ஒருவர் தனது காலில் இருந்த செருப்பைக் கழற்றி வைத்துவிட்டு, அம்மரத்தடி விநாயகரை மிகவும் பயபக்தியோடு வணங்கிவிட்டுச் செல்கிறார். அதே வழியில் கடந்து செல்கிற இஸ்லாம் மார்க்கி

ஒருவர் அதே விநாயகரை வெறும் கல்லாகவே பார்த்து அதற்கு எவ்வித மரியாதையும் செலுத்தாமல் செல்கிறார்.

ஆகவே, ''ஒருவருக்கு உண்மையாய் இருப்பது, மற்ற வருக்கு உண்மையற்றதாகவும், ஒருவருக்கு நன்மை தருவது, மற்றொருவருக்கு தீமை பயப்பதாகவும் இருப்பது உலகப் பொருட்களின் இயல்பு'', என்ற போதிலும், ஒரு பொருளை உண்மையானது என்றும், உண்மையற்றது என்றும் ஒரே கோணத்தில் முடிவு செய்யாமல், அதன் முழு உண்மையை யும் உணர ஜைனத்தின் இந்த அநேகாந்த வாதக் கோட் பாடு உதவுகிறது. இதன்மூலம் நம் கண்ணுக்குத் தெரிகிற பொருட்களின் உண்மைத் தத்துவமும், கண்ணுக்குப் புலப் படாத பொருட்களின் தன்மைகளும் ஜைனத்தில் உணர்த்தப்பட்டுள்ளன.

உலகில் வேறு எந்த மார்க்கமும் அல்லது மதமும் கொண்டிராத 'அநேகாந்த வாதம்' என்ற இக்கொள் கையை ஜைனம் மட்டுமே விசேஷமாகக் கொண்டிருப்பதை நாம் இங்கே சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஒரு நீதிபதியானவர் 'குற்றவாளி' என்று குற்றவாளிக் கூண்டில் ஏற்றப்பட்ட ஒருவனை, 'அவன் குற்றம் செய் தானா? அவன் செய்தது உண்மையில் குற்றம் தானா? ஏன் அக்குற்றத்தைச் செய்தான்? எந்தச் சூழ்நிலையில் செய்தான்? அப்படிக் குற்றம் செய்யும்போது அவன் எத்தயை உணர்வுகளுக்கு ஆட்பட்டிருந்தான்? அந்த உணர்வைத் தூண்டியது யார்? அக்குற்றம் செய்ததால் அவன் அடைந்த பயன் என்ன? அதன் காரணம் மனிதாபி மானக் கண்ணோட்டத்தில் ஏற்கக்கூடியதா? அல்லது பரிவு காட்டப்படக் கூடியதா? அவன் குற்றம் செய்தான் என்று குற்றம் சாட்டியவர்கள் யார்? அக்குற்றத்தினால் அவர் களுக்கு ஏற்பட்ட பாதிப்பு எத்தகையது? குற்றம் சாட்டி யவர்களின் பின்னணி என்ன? குற்றவாளியின் முன் வாழ்க்கை எத்தகையது? அவன் இக்குற்றத்தைச் செய்வது

மூதல் த்டவையா? அல்லது தொடர் வரலாறாகவா?'' என்று பல்வேறு கோணங்களிலும் பார்த்து, உணர்ந்து துருவித் துருவிக் கேள்விகள் கேட்டு, அவன் குற்றம் தொடர்பான சாட்சியங்களை யெல்லாம் ஆராய்ந்து, இறுதியில் தனது மனச்சாட்சி—சட்டத்தின் போக்கு இரண்டையும் ஒப்பிட்டு, 'தீர்ப்பு' செய்வார் அல்லவா? அத்தகைய 'பல்கோணச் சிந்தனை'யால், ஒரு பொருள் பற்றிய உண்மையை, மனித உயிர் உணர வேண்டும் என்பதே ஜைனத்தின் 'அநேகாந்த வாதத் தத்துவம்' என்று உவமையோடும் உவகையோடும் சொல்லலாம்.

இந்த 'அநேகாந்த வாதக்' கொள்கை ஒன்றினாலேயே ஜைன மார்க்கம் அறிவுபூர்வமான உயர்ந்த நெறிகளைக் கொண்டிருக்கிறது, என்று உலகின் மாபெரும் சித்தாந்த வாதிகளும், அறிவியலாரும் போற்றியிருக்கின்றனர்.

ஒரு நவீன விஞ்ஞானிக்குரிய ஏன்? எப்படி? எங்கு, எதற்கு? எவ்வாறு? என்ற சிந்தனைத் தூண்டுதலை; பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகவே ஜைன மார்க்கம் கொண்டிருக்கிறது என்பது ஒன்றே, இது மற்ற மதங்களி லிருந்தும் மாறுபட்ட பார்வையை மனிதகுலத்துக்குத் தந்துள்ளது என்று துணிந்து கூறலாம்.

''ஒரு விதையானது கனிந்த பழமாகவும், அதற்கு முன் காயாக, பூவாக, பிஞ்சாக இருந்ததும், அதற்கும் முன் விதையாகவே மண்ணில் இருந்து மரமாக முளைத்து வளர்ந்து பூத்துக் குலுங்கி, கனியாகி, இப்போது விதையாக நம் கண்ணுக்குத் தெரிகிறது'' என்ற பல்கோண அறிவை நமக்கு அளிப்பதுதான் ஜைனத்தின் 'அநேகாந்த வாதம்' என்றும் விளக்கலாம்.

இதனால் 'உலகில் தோன்றுவதும், மறைவதும், இருப்பதும் பொருட்களின் இயற்கைத் தன்மை—என்பதை 'அநேகாந்த வாதத்' தத்துவத்தின் மூலம் நமக்கு

உணர்த்தி, உயிர்களின் தன்மையையும், சடப்பொருள் களின் தன்மையையும், ஜீவன், அஜீவனோடு தொடர்பு கொள்வதால் ஏற்படும் 'கர்ம பந்தத்தையும் நமக்கு விஞ்ஞான பூர்வமான பார்வையில் விளக்கி, உயிரின் மோட்ச கதிக்கான வழியையும் சொல்கிறது.

உயிரின் மோட்சகதிக்குரிய மார்க்கத்தில், நெறிகளின் அனுஷ்டானத்தையும், அவற்றின் உண்மை இயல்புகளையும் நமக்கு உணர்த்துகிறது.

அவ்விதம் உணர்த்துகின்ற நெறிகளுக்கு அது கர்ம வாதத்தைக் கொண்டு உள்ளது. இந்தக் கர்ம வாதத்தை ஜைனம் இரண்டு நிலைகளில் எடுத்துச் சொல்கிறது.

அவை 'சேதனம், அசேதனம்' என்ற இரண்டு நிலை களாகும். இந்த இரண்டு நிலைகளில் சேதனம் என்பது உயிர், அசேதனம் என்பது அஜீவன்.

உலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் அநாதிகாலமாக இருந்து வருகின்றன. அதைப்போலவேதான் அஜீவன் களாகிய சடப் பொருள்களும், அநாதிகாலமாக இருந்து வருகின்றன—என்பதை ஜைனம் நமக்கு இதன்மூலம் உணர்த்துகிறது. இவ்வாறு ஜைனம் காட்டுகின்ற உண்மையை உணராது ஒரு பொருளை ஒரே நோக்கில் கொண்டு உணர்வதுதான் ஏகாந்த வாதம் என்று சொல்கிறோம்.

இந்த ஏகாந்தவாத உணர்வினால்தான், 'பொய்' யாகப் போகக்கூடிய இந்த உடம்பை 'மெய்' என்று சொல்லி, அதில் ஒரு போலியான நிரந்தரத் தன்மையை ஏற்படுத்திக் கொண்டு அதன் மூலம் நமது உண்மை அறிவை இழந்து, ''நாம் வாழ வேண்டும்; இவ்வுலகில் நிறையப் பொருள் சேர்க்க வேண்டும். பொருள் சேர்த்துக் கொண்டு துன்பமே என்னவென்று அறியாது இன்பமாக வாழ

வேண்டும்'' என்ற மாயா ஆசையை மனித சமுதாயம் வளர்த்துக் கொள்கிறது.

அதனால்தான், 'கானலை' நீர்த்தடாகம் என்று நம்புகின்ற மான்களாய், மனிதர்களாகிய நாம் அலை மோதுகிறோம்; அல்லலுறுகிறோம். நாம் ஆசையினால் செய்கிற தீவினைகளைத் 'தேவையின் இயல்பாகக் கொண்டு' அதன் விளைவுகளை உணராமலேயே அழிகிறோம்.

இந்த அழிவிலிருந்து மனித உயிரை மீட்கத்தான் ஜைனத்தின் அறிவுப்பாதை நமக்கு வெளிச்சம் காட்டுகிறது. அதற்கு அதன் 'அநேகாந்த வாதம்' துணையாகிறது.

இந்த 'அநேகாந்த வாதத் தத்துவத்தின்' மூலம் பொருள்களிடத்தில் உள்ள நிலையான தன்மையும், அது மாறுபடுகின்ற தன்மையும் நமது அறிவுக்கு உணர்த்தப் படுகின்றன.

இந்தத் தெளிவிலிருந்து, பொருள்களின் நிலையான தன்மைக்குக் காரணமான இயல்பையும், அதே பொருள் மாறுபடுகின்ற அல்லது அழிந்துவிடுகின்ற தன்மைக்குக் காரணமான இயல்பையும் உணர்வதற்குத் தான், நாம் முன்பே சொன்ன 'பஞ்சாஸ்தி காயம்' (உயிர், புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாயம்) ஆறு திரவியம் (பஞ்சாஸ்தி காயம் காலம் என்ற ஒன்று) என்று ஜைனம் கொண்டுள்ள சித்தாந்தப் பகுப்புணர்வுக் கொள்கைகள் உதவுகின்றன.

ஆகவே, ஒரு பொருளின் உண்மை நிலையை ஜைனத்தின் அநேகாந்த வாதக் கொள்கை மூலம் தெளிந்தால், அப்பொருளானது நிலையான தன்மை கொண்டிருப்பதற்கு அடிப்படையான, 'உட்பொருள்' விளக்கத்தின் மூலம் அப்பொருள் நிஜம் (நித்தியம்) என்றும், அப்பொருள் மாறுபடுகின்ற தன்மையின், 'உட்பொருள்' விளக்கத்தினால், அப்பொருள் பொய் (அநித்தியம்) என்றும் நமக்குத் தோன்றும். ஆகவே, 'பொய்' என்பது நிஜம் போலும்

'நிஜம்' என்பது பொய் போலும் நமக்குத் தோன்றும். உணர்வுகளின் பிடிப்பிலேயே நாம் ஒன்றை 'உண்டு' என்றும் இல்லை என்றும் வாதிடுகிறோம். இதை ஜைனம் 'அஸ்தி'—'நாஸ்தி' என்று குறிப்பிடும். எந்த ஒரு தத்துவத்தையும் நிஜம் என்று நம்பியிருப்பவன் 'ஆஸ்திகன்' என்றும், நம்பா திருப்பவனை 'நாஸ்திகன்' என்றும் நாம் குறிப்பிடுவது இந்த முறையில் தான்.

ஜைனம் இந்த இரண்டு வாதங்களையும் கடந்து, ஒரு பொருள் பற்றிய முரண்பட்ட இரண்டு உண்மைகளை, தனது நெறிகளின் நுட்பமான கோட்பாடுகளினால், நமக்கு உணர்த்துகின்ற அநேகாந்த வாத விளக்கத்தை—

**" பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்;**
**பொன்னில் மறைந்தது பொன்னணி பூடணம்**
**தன்னை மறைத்தது தன்கரணங்களாம்**
**தன்னில் மறைந்தது தன்கரணங்களே!"**

— திருமந்திரம்: 2289

என்ற திருமூல நாயனாரின் திருமந்திர வாக்கால் அறியலாம்.

'பொன்' ஆகிய தங்கத்தை நாம் பல்வேறு வடிவத்தில் உருமாற்றி, அழகாக அணிந்து கொண்டிருக்கிற ஆபரணம் மறைத்து விட்டது. அது 'தங்க நகை' என்ற உணர்வு நமக்கு வரும்போது ஆபரணத்தின் வடிவம் தம் உணர்வில் மறைந்து 'தங்கம்' என்ற மதிப்பே நமக்குள் எழுகின்றது. இது போன்றே 'உயிர்' என்ற ஜீவனை 'கரணங்கள்' என்ற கர்மாக்கள் (அல்லது அது பிறப்பெடுத்துள்ள உருவம்) மறைத்து உள்ளன. உயிரின் உண்மைத் தத்துவத்தில் கர்மாக்களாகிய கரணங்கள் மறைந்து விடுகின்றன. இதைத் திருமந்திரம் நமக்கு உணர்த்துகின்ற 'அநேகாந்த வாத'த் தத்துவம் என்று உணரலாம். இதே நோக்கில் இந்தப் பிரபஞ்சத்தையும்—

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதமே!"

— திருமந்திரம் : 2290

என்ற திருமந்திரத் தத்துவச் செய்யுளால் நமக்குத் திருமூல நாயனார் தெளிவு படுத்துவார். இச்செய்யுளின் பொருள்:

"மரத்தால் செய்யப்பட்ட யானை ஒன்றைப் பார்க்கிறோம். யானை என்ற உணர்வு நமக்குத் தோன்றுகிறது. இன்னொரு பார்வையில் 'மரம்' யானை உருவில் அமைந்திருக்கிறது என்று நோக்கும் போது, 'யானை' என்ற உருவம் மறைந்து மரம் என்ற உண்மை நம்முள் புலப்படுகிறது. இது போல் தான் இந்தப் பரவெளி என்கிற பிரபஞ்ச வெளியானது நீர், நிலம், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களின் உருவில் நம் கண்களுக்குத் தெரிகிறது. அதை உற்றுப் பார்க்கும்போது அதே பஞ்ச பூதங்கள் மறைந்து போய் 'பரவெளி' மட்டுமே நம்முள் உணரப் படுகிறது."

இவ்வாறு "தோன்றுகிற பொருள் நமது அகச் சிந்தனைக்கு மறைந்து போவதும், மறைந்துள்ள பொருள் தோன்றுவதும் மாறுபடுவதுமான பல்வேறு இயல்புகளில் இருக்கின்றன" என்ற அறிவினுள் அறிவான பார்வையை ஜைனத்தின் 'அநேகாந்த வாதம்' நமக்குத் தருகிறது. இந்தச் சித்தாந்தத்தின் அடிப்படையிலேதான் உலகின் மாபெரும் மானுட விஞ்ஞானியான ஐன்ஸ்டின் நமக்கு உணர்த்திய 'Relativity Theory' அமைந்துள்ளது எனப் பல்வேறு அறிஞர்களும் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

பிறவிகளுக்கு மூலகாரணமாயும், கர்மாக்களில் உழன்று பிறவிப்பயனை அனுபவிப்பதும், ஓர் உடலை விட்டு நீங்கினாலும் அழியாது நிரந்தரத் தன்மையிலேயே இருப்பதுமான 'ஜீவன்' என்கிற உயிரையும், அது தொடர்

பான "அஜீவன்" பற்றியும் ஜைனம் கொண்டுள்ள சித்தாந்தம் மிகவும் சரியானதே என்பதற்கு இந்த 'அநேகாந்த வாதக்' கொள்கையும் முக்கிய காரணமாக இருக்கிறது.

இக்கொள்கையின் வாத அறிவு மனித உயிருக்கு இல்லாது போகுமானால், "உயிரானது ஒரு போதும் தன்னை உணராது, மாயத் தோற்றமாகிய பிறவிகளையே நம்பி, அதிலேயே உழன்று, கர்மாக்களிலே அது நிலைத்து நின்று மோட்சகதியை அடையாது" என்பதால், 'எழுமின், விழிமின், நினைமின்' என்று உயிரைத் தட்டி எழுப்புகின்ற அறிவைப் பகவான் ஸ்ரீமகாவீரர் நமக்குப் புகட்டியிருக்கிறார்.

அவரது மார்க்கநெறிகளின் உண்மை அனுஷ்டானத்தின் மூலமே உயிரானது 'மோட்சகதி' பெறும் என்பதை ஜைனர்களின் வழிபாட்டுச் சின்னம் மூலம் இங்கே விளக்கம் பெறலாம்.

கிட்டத்தட்ட ஒரு மனித உருவம் 'பத்மாசனமிட்டு' அமர்ந்திருப்பதைப் போலக் காட்டுகின்ற உருவகக் கோட்டினுள் கீழே 'அபய அஸ்தம்' ஒன்றும், அதற்கு மேலே ஸ்வஸ்திக் சின்னமும், ஸ்வஸ்திக் குறிக்கு மேலே மூன்று புள்ளிகளும், அவற்றுக்கு மேலே பிறைவடிவக்கோடும், அதற்கு மேலே ஒற்றைப் புள்ளியும் குறிப்பிடப் பட்டுள்ளதைக் காண்கிறோம். அபய அஸ்தத்துள் சக்கரம் ஒன்றும் வரையப்பட்டுள்ளது. இந்த மனித உருவ வடிவகக் கோட்டினை மனிதப் பிறப்பாகவும் உலகத்தின் அமைப்பாகவும் நாம் கொள்ளலாம்.

ஆகவே, மனித வடிவான உருவகத்தின் குறிப்பிடப் பட்டுள்ள சின்னங்களின் விளக்கம் வருமாறு:

'அபய அஸ்தம்' ஆகிய கைச் சின்னம் 'அச்சம் அற்று வாழ்' என்ற உணர்வைப் புகட்டி, 'வாழு, வாழவிடு' என்ற

நெறியைக் காட்டுகிறது. கைக்குள் அமைந்துள்ள சக்கரம் 'அகிம்சா' தர்மத்தை வலியுறுத்துகிறது. சக்கரத்துக்குள் உயிர்களுக்குத் தொண்டு செய்கின்ற பரிவுணர்வை மனிதகுலத்துக்கு வற்புறுத்துகின்ற வாக்கியத்தைக் கொண்டுள்ளது.

'ஸ்வஸ்திக்' சின்னம் இரண்டு கோடுகளில் நான்கு வளைவுகளைக் கொண்டுள்ளது அல்லவா? இரண்டு கோடுகள் நல்வினை, தீவினை என்ற இரு வினைகளைக் குறிப்பிட்டு, அந்த இரு வினைகளின் பயனாக அவற்றின் வழியே உயிரானது மனித கதி, தேவ கதி, விலங்கு கதி (மிருகங்கள், பறவைகள் ஆன பிறப்பு) மற்றும் நரக கதி ஆகிய நான்கு வகை கதிகளில் மீண்டும், மீண்டும் பிறந்தும், இறந்தும் பிறவிக் கர்மாக்களிலேயே உழல்கிறது என்ற விளக்கத்தைக் கொண்டுள்ளது.

'ஸ்வஸ்திக்' சின்னத்துக்கு மேலேயுள்ள மூன்று புள்ளிகள் ஜைனம், மனிதனாகிய சாதகனுக்கு இன்றியமையாத தகுதிகளாக வலியுறுத்தும் 'நல்லறிவு' 'நற்காட்சி' 'நல்லொழுக்கம்' என்ற முப்பரிமாண ஆற்றல்களை அடையாளமாகக் காட்டுகின்றன.

அவற்றுக்கு மேலே உள்ள பிறைவடிவக் கோடானது, 'நிர்ஜரை' என்ற உதிர்ப்பின் வாயிலாக உயிரானது தனது கர்மாக்களை உதிர்த்த 'சித்த சிலாநிலை' (உலக உச்சியை) அடைந்துள்ளதையும், அதற்கு மேல் உள்ள ஒற்றைப் புள்ளியானது, உயிர், பிறப்பு இறப்பற்ற மோட்ச கதியில், பரிநிர்வாண நிலையில் உச்சநிலை பெற்றுத் திகழ்வதையும் குறிப்பிடுகிறது.

இத்தகைய விளக்கங்களை குறியீடுகள் மூலமாகத் தன்னகத்தே கொண்டுள்ள இச்சின்னத்தை 'Jain Pratik' அதாவது ஜைன நெறிச் சின்னம் என்று சொல்வோம்.

'அகிம்சை' என்ற ஜீவதத்துவம் ஒன்றே ஆதாரமாகக் கொண்டு, அதை மண்ணுலகில் உண்மையாகவும் மேன்மை

யாகவும் நிலை நிறுத்துகின்ற மார்க்க நெறிகளை நமக்கு உணர்த்தி, அதன் பலனாக ''அகிம்சையை உணர்ந்த உயிரானது, அஜீவனின் தொடர்பற்று இரு வினைத் தளை களையும் முறித்துப் புதிய கர்மாக்களின் தாக்குதலிருந்து தனக்குத் தடை ஏற்படுத்திக் கொண்டு, ஏற்கெனவே உள்ள கர்ம பந்தங்களை அறுத்தும், உதிர்த்தும் மோட்ச கதியை அடைகின்ற உன்னத நிலையை எய்துகிறது'' எனும் ஜைன மார்க்கப் பாதையை இஜ்ஜீவனம் மிகச் சிறந்த விளக்க மாக நமக்கு உணர்த்துகிறது.

உயிர்களின் தோற்றத்தில் உயர்ந்த நிலையை எய்தி யிருப்பது 'மனிதப் பிறப்பே' என்று ஜைனம் வலியுறுத்து கிறது அல்லவா? ''அந்த மனிதனாகிய சாதகன், தனது இடைவிடாத விழிப்புணர்வால், நல்லறிவு, நற்காட்சி, நல்லொழுக்கம் என்ற முப்பரிமாணத் தகுதிகளின் வாயிலாக, 'அநேகாந்த வாதத் தத்துவ அறிவினால், ஜைன மார்க்க நெறிகளின் போக்கை உணர வேண்டும்; உணர்ந்து கடைப்பிடிக்க வேண்டும்; கடைப்பிடிக்கும் போது எவ்விதத்தும் வழுவாது இருக்க வேண்டும்; இத்தகைய ஜைன மார்க்க நெறிகளில் தன்னை அர்ப் பணித்துள்ள சாதகன் எவ்விதப் பலனையும் மனம், செயல், வாக்கால் கருதிடாமல் தன்னை உணர்ந்து தன்னையே அடக்கி, தானே கர்மமற்றுப் போகின்ற நிலையை அடைய வேண்டும்'' என்றெல்லாம் மிகக் கடுமையான எச்சரிக்கைகளையும் மார்க்கப் பயிற்சிகளை யும் தனது பாதையில் பகவான் ஸ்ரீமகாவீரர் நமக்கு உணர்த்தியிருக்கிறார்.

அவர் காட்டும் வழியில் பொருள்களை ஒன்பது பதார்த் தங்களாகவும், ஜீவனின் குண இயல்பை ஒன்பது வகை யாகவும், பஞ்ச (ஐந்து) அஸ்திகாயம், ஆறு திரவியம், ஏழு தத்துவம் என்றெல்லாம் விரித்தும், பகுத்தும், மிக நுட்ப மான கண்ணோட்டத்தில், அறிவியலாரும் திகைக்கின்ற

ஆழ்ந்த காட்சிகளையும் பொருள்கள் பற்றிய தத்துவங் களையும் தனக்கே உரிய விசேஷ பாதையில் ஜைனம் உணர்த்துகிறது.

இதன் அடிப்படையில், 'பொருட்களுக்கு குணங்களும், பரியாயங்களும் (மாறுபாடு) உண்டு' என்பது ஜைனம் உணர்த்தும் மற்றொரு சிறப்பு விதியாகும். அதாவது 'பொன்' ஆகிய பொருளுக்கு நிறம் முதலியவை குணங்கள் என்றும், பொன்னால் செய்யப்படுகின்ற ஆபரணங்கள், அதன் பார்யாயங்கள் என்றும் விளக்கம் தருகிறது.

எனவே ''குணங்களும் பார்யாயங்களும் இல்லாமல் ஒரு பொருள் இல்லை; அதுபோல் பொருள் இல்லாமல் குணங்களும், பார்யாயங்களும் தனித்து இருக்க முடியாது. குணங்களின் தொகுப்பே பொருள். பொருள் நித்தியம், அதன் பார்யாயங்கள் அநித்தியம். ஆகவே பொருளின் இலக்கணத்திலும் நித்திய, அநித்திய தருமங்கள் காணப் படுகின்றன'' என்ற விளக்கத்தை இவ்விதி மூலம் ஜைனம் உணர்த்துகிறது.

இவ்வாறு ஒரு பொருள் பற்றிய தத்துவப் பரிமாணங் களை பல்வேறு கோணங்களில், மிக நுட்பமான நோக்கில் விரித்து உரைப்பதன் மூலம், இந்தப் பிரபஞ்சத்தின் உண்மையையும், அதைச் சார்ந்துள்ள உலகியல்வாதத்தை யும் நமக்குச் சரியான பார்வையில் ஜைனம் காட்டுகிறது.

அதன் பாதையில் காட்டப்படுகின்ற ஜைனநெறிகளின் சித்தாந்தங்களின் விரிவு எவ்வாறு அமைந்துள்ளது என்பதைச் சுருக்கமாகப் பார்ப்போம்.

•**அத்திகாயம் அல்லது அஸ்திகாயம்:** உயிர், புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாயம் என்பன 'பஞ்சாஸ்தி காயங்கள்' ஆகும். 'அஸ்தி' என்றால் எப்போதும் இருப்பதையும், 'காயம்' என்றால் இடப்பரப்பையும் குறிக்கும். இந்த பஞ்ச அஸ்தி காயங்கள் இடப் பரப்புகளைக்

கொண்டு எப்போதும் இருக்கின்றன என்பது ஜைனம் காட்டும் உண்மை.

•**ஆறுதிரவியம்:** மேற்குறித்த பஞ்சாஸ்தி காயங்களுடன் 'காலம்' என்ற சித்தாந்தம் சேர ஆறு திரவியங்கள் ஆகின்றன. காலத்துக்குக் காயம் என்ற 'இடப்பரப்பு' இல்லை. அது பொருந்தவும் செய்யாது என்பதால் இது அத்திகாயம் ஆகாது.

•**ஏழு தத்துவங்கள் :** புண்ணியம், பாவம் நீங்கலாக ஒன்பது பதார்த்தங்களில், புண்ணியம், பாவம், இல்லாத மற்றப் பதார்த்தங்களே ஜீவன், அஜீவன், ஆஸ்ரவம், பந்தம், சம்வரம், நிர்ஜரை, மோட்சம் என்னும் ஏழு தத்துவங்கள். புண்ணியம், பாவம் சேர்த்து ஒன்பது பதார்த்தங்கள்.

ஜீவனாகிய உயிர், ஒன்பது குண இயல்புகளைக் கொண்டிருக்கிறது என்று முன்பே அறிந்தோம். அதன் உட்பிரிவுகளின் விளக்கம் வருமாறு:

1. **பிராணன்களுடன் கூடியது:** பொதுவாகப் பொறி, பலம், உயிர்ப்பு, (மூச்சு விடுதல்) ஆயுள் என்று பிராணன் நான்கு வகைப்படும். பொறியாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து, பலம் ஆகிய மனம், சொல், செயல் ஆக எட்டும், உயிர்ப்பு ஆயுள் என்ற இரண்டும் சேரப் பிராணன் பத்துவகையாகவும் பகுக்கப்படும்.

2. **உயிர் உபயோகம் என்னும் பண்புடையது:** இது 'தர்சன உபயோகம்' என்றும், 'ஞான உபயோகம்' என்றும் இருவகைப்படும். தர்சன உபயோகம் 'சக்சு, அசக்சு, அவதி, கேவலம்' என்று நான்கு வகைப்படும். 'சக்சு' என்பது கண் வழியாகப் பார்த்து உணர்வது. அசக்சு என்பது கண் அல்லாத மெய், வாய், மூக்கு, செவி ஆகியவற்றால் ஒரு பொருளை உணர்வது. இதுவுமின்றி மனம் மட்டும் ஒரு பொருளை, கால, இட எல்லைக்குள் உணர்வது 'அவதி உபயோகம்'. முக்காலத்தும், மூவுலகிலும் நடைபெற்ற,

நடைபெறுகின்ற, நடைபெறக் கூடியவற்றை உணர்தல் 'கேவல' உபயோகம்.

'ஞான உபயோகத்தின் மதி, சுருத, அவதி, மனப் பர்யாய, கேவல ஞானங்கள் என்ற நல் ஞான உபயோகம் ஐந்தும், குமதி, குஸ்ருதி, விபங்க ஞானங்கள் என்ற தீய ஞானங்கள் மூன்றும் ஆக எட்டு வகைப்படும்.

**3, 4 உயிரின் அருவ, உருவத் தன்மை:** நிச்சய (உண்மை) நோக்கில் உயிர் உருவமற்றது. கரண (உலக) நோக்கில் அது எந்த உடலைத் தரிக்கின்றதோ அந்த உடல் அளவு பரந்திருக்கும். அதாவது, பெரிய உருவத்தில் விரிந்திருக்கும்போது, இடை விட்டுவிட்டோ, சிறிய உருவத்தில் தங்கியிருக்கும்போது சுருங்கி மடிந்தோ இருப்பதில்லை.

**5, 6 வினையைச் செய்வது (கர்த்தா), வினையை அனுபவிப்பது (போக்தா):** உயிரானது ஐம்பொறி வயப் பட்டுப் பொருட்கள் மீது விருப்பு, வெறுப்புக் கொள்வதால் ஏற்படும் உந்துதலால் (ஆஸ்ரவப்) கர்மாக்களுக்கு கர்த்தா வாகிறது. ஆகவே வினையைச் செய்வதன் மூலம் அக் கர்மப் பயனையும் அது அனுபவிக்கிறது.

**7. பிறவியில் (சம்சாரத்தில்) உழல்வது:** கர்மக் கட்டி னால் சிக்கி நான்கு கதிகளிலும் பிறந்து, இறந்து, துன்புற்று உழல்வது.

**8. சித்து நிலை (முக்தி நிலை) பெறுவது:** உயிரானது கர்மத் தளைகளினின்றும் முற்றாக விடுபட்டுப் பிறவி நீங்கி 'வீடு பேறு' அடைவது. அது நீங்க வேண்டிய கர்மங்கள் ஞானவரணீயம், தர்சணாவரணீயம், மோகனீயம், அந்த ராயம், வேதனீயம், ஆயுள், நாமம், கோத்திரம் என்று எட்டு வகைப்படும். இவற்றை உயிரானது 'நிர்ஜரை' என்ற உதிர்ப்பினால் நீங்குவதன் மூலம், 'மோட்ச கதி' பெற்றுக் கடையிலா ஞானம், கடையிலாக் காட்சி, கடையிலா இன்பம், கடையிலா வீரியம், அழியா இயல்பு,

ஆயுள் இன்மை, நாமம் இன்மை, கோத்திரம் இன்மை என்னும் எட்டுக் குணங்கள் நிறைந்து 'சித்தி சிலா தலம்' என்னும் உலக உச்சியில் அது நிரந்தரமாகத் தங்கியிருக்கும் நிலையே, 'முக்தி உயிர்'. இதுவே 'இறைத்தன்மை' என ஜைனம் விளக்கும்.

**9. மேல்நோக்கி எழும் பண்புடையது:** உயிரின் இத் தன்மையின் காரணமாகவே கர்மாக்களிலிருந்து உயிர் தன்னை விடுவித்துக் கொண்டு 'உலக உச்சி' என்கிற 'சித்தி சிலா தலத்தினை'ச் சென்று அடைந்து கைவல்ய நிலையினை அடைகிறது.

*** உயிரின் ஐவகைப் பாகுபாடு:** உயிர்கள் ஓரறிவு முதல் ஐயறிவு வரை உள்ள ஜீவன்கள் என்று ஜைனம் பகுத்து உரைப்பதை அறிந்தோம். இந்த ஐயறிவு வகை யான உயிர்கள் வருமாறு:

1. மரம், செடி, கொடிகளான தாவர ஜீவன்கள் மற்றும் சூட்சும உயிர்கள் என்ற கண்ணுக்குப் புலப்படாத நுண்ணுயிர்கள் முதலானவை. தொடு உணர்வு மட்டுமே கொண்ட ஓர் அறிவு உயிர்கள்.

2. தொடு உணர்வுடன் சுவையுணர்வு கொண்ட கிளிஞ்சல், நத்தை, புழு, அட்டை முதலான ஈரறிவு உயிர்கள்.

3. ஈரறிவுடன் மூக்கின் தன்மை சேர்ந்த கரையான், பேன், மூட்டைப்பூச்சி முதலான மூவறிவு உயிர்கள்.

4. மூவறிவுடன் கண்ணின் ஆற்றல் (ஒளி) சேர்ந்த வண்டு, நண்டு, தேனீக்கள் முதலான நாலறிவு உயிர்கள்.

5. நான்கு அறிவுடன் செவியுணர்வு சேர்ந்த ஐயறிவு உயிர்கள். இந்த ஐயறிவு உயிர்களில் விலங்கு,

பறவை, முதலை முதலான இனங்களும், மனிதர், தேவர், நரகர் என்ற மூவகையினரும் அடங்குவர். இதில் மனிதர், தேவர், நரகர் என்போர் மனம் என்ற ஆறாவது அறிவைக் கொண்ட உயர்ந்த பிறவிகள். விலங்கினத்துக்கு இந்த ஆறாவது அறிவு கிடையாது.

ஓரறிவு உயிர் இனங்களில் நிலைத் திணை என்றும் இயங்கு திணை என்றும் இரு வகைப்படும். 'நிலைத் திணை' என்பது Immovable ஜீவன்களான மரம், செடி, கொடி வகைகள். இயங்கு திணை என்பது Movable ஜீவன்களான நுண்ணுயிர்கள். இவை நம் கண்களுக்குப் புலப்படா. ஓர் அங்குல இடைவெளியில் சுமார் முப்பதாயிரம் நுண்ணுயிர்கள் இருக்கின்றன. இந்த நுண்ணுயிர்களும் நீர் வாழ்வன, நிலம் வாழ்வன, நெருப்பில் வாழ்வன, காற்றில் வாழ்வன, தாவரங்களில் வாழ்வன என்று ஐந்து வகையாகப் பிரிக்கப்படும். இந்த உயிர்கள் நமது செயல்களால் எவ்விதத்தும் பாதிக்கப்படலாகாது என்ற அகிம்சையை ஜைனம் வலியுறுத்துவதால் ஜைன மார்க்கிகள் உயிர்க் கொள்கையில் மிகவும் கவனத்துடன் இருப்பது ஒரு நியதி.

இவ்வாறு ஜைனம், உயிர்களின் தகுதியை உணர்த்தி, அதில் மனித உயிரின் முக்திக்குரிய மூலப் பொருட்களாக ஒன்பது பதார்த்தங்களையும், அவற்றின் தனித் தனித் தத்துவக் குணங்களின் பரிமாணத்தையும் மிகமிகத் துல்லிய மாக வகுத்து நமக்கு உணர்த்துகிறது. இதில் உயிராகிய ஜீவனின் ஒன்பது குணங்களை மேலே கண்டோம். இனி ஜீவன் சம்பந்தப்படுகின்ற அஜீவனின் பகுப்பொருள் சித்தாந்தத்தைச் சுருக்கமாகப் பார்ப்போம்.

ஜீவனின் கர்மாக்கள் வெளிப்படும் கரணங்களாக அஜீவன் என்ற சடப் பொருள் தத்துவம் இருக்கிறது. இந்த அஜீவன் — புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாயம்,

காலம் என்று ஐந்து வகைப் பரிமாணத்தில் உள்ளது. அவற்றின் தனித் தன்மை வருமாறு:

* **புத்கலாத்திகாயம்:** மிகச் சிறிய பரமாணு முதல் மிக மிகப் பெரிய எல்லாச் சடப் பொருட்களும் 'புத்கலம்; என்றே குறிப்பிடப்படும். இது ஒன்றோடு ஒன்று சேரக் கூடியது—சேர்ந்து மிகுதியாகக் காணப்படுவது—பிரியக் கூடியது—மென்மை, வன்மை, கனம், வழவழப்பு முதலான தன்மைகளில் இருப்பது. உயிருக்கு முரணான பண்புகளை யுடைய புத்கலம்தான், வினைப் பயனை உயிர் அனுபவிப் பதற்கேற்ற கருவியாக (உடலாக)வும் இருக்கக்கூடியது. புத்கலப் பொருள் இல்லை என்றால் உயிர், வினைப்பயனை அனுபவிக்க முடியாது. புத்கலத்தின் மூலமே உயிர் தங்கி, வினைகளிலிருந்து விடுபட்டு வீடுபேறு பெறுகிறது.

* **தர்மாத்திகாயம்:** இதுவும் அணுவாக உருவமற்று உலகமெங்கும் பரவியிருந்து உயிர்களின் நடமாட்டத்துக்குக் காரணமாயிருப்பது. ஆயினும் பொருட்களின் நடமாட் டத்தைத்'தர்மாத்தி காயம்' கட்டுப்படுத்துவதில்லை.அவை செல்ல முயன்றால் உதவியாக இருக்கிறது. 'தர்மாத்தி காயம்' என்னும் பொருள் இல்லையேல் உலகில் உயிர் களின் இயக்கம் இல்லை.

* **அதர்மாத்திகாயம்:** 'தர்மாத்திகாயம்' எவ்வாறு உயிர்கள் இயங்க உதவியாக இருக்கிறதோ அதுபோல் 'அதர்மாத்திகாயம்' என்ற பொருள் உயிர்களின் ஒய்வுக்கு அதாவது நிலைபேற்றுக்குக் காரணமாக இருக்கிறது. தர்மாத்திகாயம் ஒரு 'பாஸிட்டிவ்' என்றால், இது 'நெகடிவ்'. இன்னும் நுட்பமாகச் சொல்வதென்றால், கர்ம அணுக்கள் உயிரில் கலந்து பிறவிப் பயனை அனுபவிக்கக் காரணமாவது தர்மாத்திகாயம். கர்மாக்களில் இருந்து விடுபட்ட உயிரானது மேல்நோக்கி உயர்ந்து, 'சித்தி சிலா தலமாகிய' உலக உச்சிக்குச் சென்றதும் அது (உயிர்) முக்தி யடைந்து அங்கேயே நிரந்தரமாக நிலைபெற்றிருப்பதற்குக் காரணம் அதர்மாத்திகாயம்.

* **ஆகாயத்திகாயம்:** அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற வியாபித்திருந்து உயிரும், உயிர் அல்லாத பொருட்களான புத்கலம், தர்மம், அதர்மம் ஆகிய பொருட்களும் தங்க இடமாகி, தானும் அவற்றுடன் தளர்வின்றி நிலைத்திருக்கும் தத்துவம் இது. ஆகாயத்தின் எந்தப் பகுதியில் உயிர் முதலான எல்லாப் பொருள்களும் அடங்கியுள்ளனவோ, அந்தப் பகுதியை 'உலக ஆகாயம்' என்றும், உலகத்திற்கு அப்பாற்பட்ட பரவெளியை 'அலோக ஆகாயம்' என்றும் ஜைனம் சொல்கிறது. 'அலோக ஆகாயத்தில்' ஆகாயம் இருந்த போதும் தர்மாத்திகாயம் அதர்மாத்திகாயமும் இல்லை என்ற உண்மையை, விண்வெளி அறிஞர்களும் விண்டுரைக்காத பல நூற்றாண்டுகளுக்கு முன்பே ஜைனம் கண்டுணர்ந்து சொல்லியிருக்கிறது. பொருட்களின் நடமாட்டத்துக்குக் காரணமான தர்ம, அதர்ம அத்திகாயங்கள் இந்த அலோக ஆகாயத்தில் இல்லாதிருப்பதாலேயே வேற்றுக் கிரகங்களின் ஆராய்ச்சிக்கு விண்வெளியில் பறக்கின்ற மனிதர்கள், பூமியில் இயங்குவது போல் தங்கள் கைகால்களை அசைக்க முடிவதில்லை. 'உலக ஆகாய' எல்லையுடன் தர்மாத்திகாயமும், அதர்மாத்திகாயமும் முடிந்து விடுவதால், அவை முடிகின்ற இடமே 'உலக உச்சி' என்று ஜைனம் கணித்து, அதன் மூலம் ஆகாயத்தின் தன்மைகளை நமக்கு உணர்த்துகிறது.

* **காலம்:** காலம் என்பது அருவப் பொருள். இதன் மூலமே உலகில் தோன்றிய புதிய பொருள் பழமையடைகிறது. பழமையானது அழிந்து விடுகிறது, புதிய பொருள் தோன்றுகிறது. சிறுவன் வாலிபனாகிறான், வாலிபன் வயோதிகனாகிறான், வயோதிகன் மரணமடைகிறான். ஆக, புதுப்புது உருவங்கள், வெவ்வேறு மாற்றங்கள் என்பதெல்லாம் காலத்தையே சார்ந்துள்ளன. காலத்தின் உதவியின்றிப் பொருட்கள் மாற்றம் அடைவதில்லை.

இவ்வாறு பஞ்சாஸ்தி காய தத்துவங்களையும், உலக இயக்கத்தில் அவை சம்பந்தப்பட்டுள்ள தொடர்பையும்

நுட்பமான கண்ணோட்டத்தில் உணர்த்தி மனிதனை, அவன் கர்மாக்களிலிருந்து முற்றிலும் தன்னை விடுவித்துக் கொண்டு, அவனைப், 'பரிநிர்வாண நிலை'யாகிய இறைத் தன்மைக்கு உயர்த்துகின்ற இலக்கைக் காட்டுகிறது.

இந்த வெளிச்சமும், விளக்கமும் பகவான் ஸ்ரீமகாவீரர் நடந்து சென்ற பாதையின் வழியே, நமக்கு விஞ்ஞான பூர்வமான கண்ணோட்டத்தில் மேலும் பிரகாசமாகக் காட்டப்பட்டுள்ளன.

மனித குலத்துக்கு ஒப்பற்ற மேன்மை தரத்தக்க 'அர்வறத்' தர்மமான ஜைன நெறிகளைக் கடைப்பிடிக்கின்ற சாதகனின் இலட்சணங்கள் மூலமே அதன் பயன் மேன்மையானதாகவும், உண்மையானதாகவும், உறுதியானதாகவும் விளக்கம் பெற முடியும்.

ஆகவே சாதகனின் லட்சணங்களை 'What do you look?' என்ற பார்வையில் அடுத்துச் சிந்திப்போம்.

## IV

## எதனை நோக்குகிறாய்?

பகவான் ஸ்ரீமகாவீரரின் பார்வையில் ஜைனத்தின் நோக்கையும் போக்கையும் இது வரை மூன்று நிலைகளில் பார்த்தோம். ஜைனத்தின் இலக்கு உயிரின் மோட்சகதியாகிய பரிநிர்வாண நிலையே என்றும், பரிநிர்வாண நிலைக்குரியது உயிரின் இயல்பே என்றும், ஜைன மார்க்க நெறிகளின் சித்தாந்தமானது எத்தகைய வழிகளில் பௌதிக, அறிவியல் கண்ணோட்டத்துடன் ஏந்தியிருக்கின்றன என்றும் அதில் பார்த்தோம்.

இன்று, உயிரின் முக்திக்குரிய மார்க்க நெறிகளைக் கடைப்பிடிக்கின்ற சாதகனின் இலட்சணங்கள் குறித்து ஜைனம் காட்டும் பாதையை நோக்குகிறோம். எந்த ஓர் இலட்சியம் ஆயினும் அதைச் சொல்பவனும், செயல்படுத்து

பவனும், அதன் பலனை அனுபவிப்பவனும் மனிதனே. 'சுவர் இருந்தால்தானே சித்திரம்'. அந்தச் சுவராகிய சாதகனை ஜைன மார்க்கம் எப்படி நோக்குகிறது? என்பதை—

" செய்பவன், கருவி, நிலம், செயல், காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே ! "
—நன்னூல்; வினையியல்: 1

என்ற நன்னூல் சூத்திரம் நன்கு விளக்குகிறது.

(உயிர்—செய்பவன்; கருவி—மானுடப்பிறப்பு உடல்; நிலம்—ஜைனப் பாதை; செயல்—வாழ்க்கை; காலம்—ஜைனக் கோட்பாடுகள்; செய்பொருள்—முக்தி. )

உயிரானது பரிநிர்வாணம் அடைகிறது என்பதை 'ஒரு மனிதனின் பரிநிர்வாணம்' என்றுதான் உலகம் சொல்கிறது. உயிர் வாழ்க்கையில் மனிதனே உயர்ந்து நிற்கிறான் என்பதால், உயர்ந்த உயிரை மனிதனாகவே உலகம் காண்கிறது. ஜைனம் இதையே இயல்பான அறிவோடும், சித்தாந்தங்களின் இலக்கணச் செறிவோடும் மனித வடிவில் இருக்கின்ற உயிரின் உன்னதத் தகுதிகளை நமக்கு உரைத்து மனித வாழ்க்கைக்கே உரிய இயல்பான ஒழுக்கநெறிகளைப் போதிக்கிறது. அதே சமயம் அதன் சித்தாந்தங்களின் இலக்கணமானது, நன்னூல் சூத்திரம் போன்று உயிருக்குரிய இலக்கணமாக என்றென்றும் மாறாத, எவராலும் மறுக்க முடியாத எக்காலத்துக்கும் பொருந்துகின்ற உண்மைகளின் முடிவு என்பதும், 'கற்றாய்ந்த பண்டிதர்களுக்கே புலப்படுவது போல்' புரியும்.

ஆகவே, ஜைன மார்க்கம் காட்டுகின்ற வழியில் உயிரின் முக்திக்கும், உயிரானது தன்னை உலகக் கர்மாக்களிலிருந்து முற்றாக விலக்கிக் கொண்டு, தனக்கே உரிய மேலான தன்மைக்குத் தன்னைச் செலுத்திக் கொள்வதற்கும் ஒரு கருவியாகவே சாதகன் இருக்கிறான். அந்த சாதகனுக்குரிய இலட்சணங்களையும், அவன் எவ்விதம்

செயல்படுவதன் மூலம், தனக்கே உரிய இயல்பான இலட்சணத்தை அடைகிறான் என்பதையும் தெளிவாக ஜைன மார்க்கம் காட்டுகிறது.

சாதகனாகிய மனிதனின் உண்மை இயல்பில் ஜாதி, மதம், மொழி இன உணர்வுகளைக் கடந்து, இங்கு ஒரு முறை அகச்சிந்தனை கொள்ள வேண்டும்.

தாயின் கருப்பையை விட்டுப் பிறக்கும் மனிதன் கள்ளம் கபடமற்ற உயிரின் இயல்பான தன்மையோடுதான் பிறக்கிறான். பிறந்த மறுகணமே அவனை உறவு முதலான உலக பந்தங்கள் பற்றுகின்றன. அந்தப் பந்தம் வாயிலாகவே, பிற கர்மாக்களும் அவனைச் சேர்கின்றன. அவன் எந்தச் சூழ்நிலையில் யாரால், வளர்க்கப்படுகிறானோ, அதற்கேற்பக் கர்மாக்கள் அவனைச் சூழ்ந்து விடுகின்றன. அதுவே தனது இயல்பான குணம் என்று எண்ணிக்கொண்டு அதற்கேற்ற புண்ணிய பாவங்களில் அவன் உழல்கிறான். இதனால்அவனுள் இருக்கும் உயிரானது கர்மாக்கள் என்ற திரையினால் மூடப்பட்டு, தனது உண்மைக் குணங்களை இழந்து நிற்கிறது.

ஆனால், உண்மையில் அம்மனிதனின் இயல்பு, அதாவது உயிரின் இயல்பு அவன் வாழ்கின்ற சூழ்நிலையின் குண இயல்புகளா? என்றால் நிச்சயமாக இல்லை.

இந்த உண்மையை, உண்மை அறிவு கொண்டு மனிதனுக்கு, மனித உயிருக்குப் புண்ணிய, பாவங்கள் இருவினையாகிய கர்மாக்கள் தானே தவிர, அவை உயிரின் உண்மை இயல்பு அன்று. அந்தக் கர்மாக்களை அது முற்றாக உதிர்த்து தனது இறுதி இலக்கான வீடுபேற்றுக்கு, உயிருக்கிருக்கின்ற மேல்நோக்கி எழும் தன்மையைக் கொண்டு உயர்கின்ற பாதையை ஜைனம் காட்டுகிறது. இதற்காக உயிரின் ஒன்பது குணங்களையும் ஒன்பது பதார்த்தங்களையும் காட்டி, பஞ்ச அஸ்திகாயங்கள், ஆறு திரவியம், எழு தத்துவங்கள் என்று மிக நுட்பமான சித்தாந்தங்களையும் துல்லியமாக உரைக்கின்றது.

'தன்னை மறைத்தது தன் கரணங்களே' என்று திருமூலர் திருமந்திர வாக்குக்கு ஏற்ப, உலக வாழ்வின் கர்மாக்களால் உயிர் கவ்வப்பட்டுள்ளதால், அவற்றிலிருந்து அது தன்னை விலக்கிக் கொள்வது என்பதுதான் வீடுபேற்றுநிலை. அந்த வீடுபேற்று நிலைக்கு உயிரை உயர்த்துகின்ற ஒரு கருவியாக, உந்து விசையாக மனிதன் அமையவேண்டும் என்பதற்குரிய இலக்கணத்தை அவனது லட்சணங்களாக ஜைனம் நெறிகளை உரைக்கின்றது. ஜைனசித்தாந்தங்கள் மூலம் மனிதன் உண்மை நெறிகளைப் பேணித் தன்னை இறைத் தன்மைக்கு உயர்த்திக் கொள்ள முடிகிறது என்பதுதான் ஜைன சித்தாந்தங்களிலிருந்து நாம் உணர்கின்ற தெளிவான பார்வையாகும்.

மனிதப் பிறப்புற்ற உயிர், அது தரித்துள்ள உடலை, மிகச் சிறந்த கருவியாகக் கொண்டு இயங்குகின்ற நெறிகளைத் தெரிவிக்கும் ஜைனம் அக்கருவியைத் தவறான பாதையில் செலுத்துவது கூடாது என்பதையும் எச்சரிக்கிறது. தவறான பாதைகளில் உடலாகிய கருவி (சாதகன்) இயங்கினால், அதனுள்ளே இருப்பிடம், கொண்டுள்ள உத்தமப் பொருள் ஆகிய உயிர் மறுபடியும் கர்மாக்களுக்காகவே அழியும் என்கிறது பகவான் மகாவீரரின் மார்க்கப் பாதை.

இதைத் திருமூல நாயனார் மிகத் தீர்க்கமாகவே சொல்கிறார்—

**"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்;**
**திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்;**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**
**உடம்பை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேனே!"**

— *திருமந்திரம் : 724*

எத்தகைய உண்மையை, ஜைனத்தின் பார்வையை எவ்வளவு தெளிவாக எடுத்துச் சொல்கிறார், திருமூல மாமுனி.

''உடம்பாகிய சாதகன், உண்மைக்குப் புறம்பான நெறிகளில் உழன்று அழிந்தால் (அதாவது கெட்டுப் போனால், கெட்ட நெறிகளில் உழலுவானாயின்) அதன் பலனாக உடம்புள் உயிர்த்திருக்கும் உயிரும் கெடும். (உயிரார் என்று அந்த உயிருக்கு உத்தமநிலை கொடுத்துப் போற்றிப் புகழ்ந்திருப்பது, உயிருக்கு ஜைனம் உரைக்கின்ற இறைத் தன்மையைக் காட்டுவதாகும்.) ஆகவே, திடம்பட என்பது—'இறுதி நிலையை எட்டுகின்ற' நிலையாகும். மெய்ஞ்ஞானம்—உண்மை ஞானத்தை அந்த உயிர் அடையாது'' என்று திட்டவட்டமாக உரைக்கும் திருமூலர் அதற்காக உடம்பை வளர்க்கின்ற உண்மை நெறியாகிய உபாயம் (மார்க்கம்) அறிந்து அதன் வழியே உடம்பை வளர்த்து அதனால் உயிரையும் வளர்த்ததாக (உயர்த்திய தாக)வும் விளக்குகிறார்.

எந்த முறைகளில் நமது பிறப்பைப் பயன்படுத்திக் கொள்கிறோமோ, அந்த முறைகளுக்கேற்ப உடலும், அதன் உணர்வாகிய உயிரும் பக்குவப்பட்டு விடுகிறது. உதாரண மாக, தமிழ்நாட்டில் பிறந்த ஒரு குழந்தையை அது பிறந்த வுடன் ஆப்பிரிக்காவில் ஏதாவது ஒரு பகுதியில் விட்டு விட்டால் அது அப்பகுதியின் சூழ்நிலையிலேயே வளர்ந்து, அங்குள்ள மக்களின் குணாதிசயங்களையே கொண்டு வளரும். வாலிபனான பிறகு அவன் தமிழர்களின் மொழி, பண்பு முதலான ஆற்றல்களை அறியாதவனாகவே இருப்பான். தான் ஓர் ஆப்பிரிக்கவாசி என்றே கருத்துக் கொண்டிருப்பான் அல்லவா? அதுபோன்றே, உயிரானது எந்தச் சூழ்நிலையில் பிறக்கிறதோ, அந்தச் சூழ்நிலையின் தாக்குதல்களைத் தாங்கிக் கொள்கின்ற இயல்பிலேயே தனது பிறப்பை வளர்த்துக்கொள்கிறது. ஆகவே மனித உயிர், உண்மையான முக்தி வழிக்குரிய மார்க்கப் பாதையில் தன்னைப் பயிற்றுவித்துக் கொள்கின்ற சூழ் நிலையை அதாவது வாழ்க்கை நெறிகளை, உண்மை அறிவை, எட்டுவதற்குப் பகவான் ஸ்ரீ மகாவீரர் பாதை

காட்டியிருக்கிறார். அப்பாதையே ஜைன மார்க்கத்தின் லட்சணங்களை ஏற்கின்ற சாதகனின் இலக்கணம். ஜைனம் காட்டுகின்ற—பாதையை உயிரை வளர்க்கின்ற உண்மை உபாயம் ஆகும்.

இந்த உபாயத்தையே அறிந்து அதன் வழியே உயிரை வளர்த்து மெய்ஞ்ஞானம் எட்ட முடியும் என்பதும் திருமூலரின் திருவாக்கு.

'மெய்ஞ்ஞானம்' என்பது மேலும் ஒரு வியப்பான உண்மையை நமக்கு உணர்த்துகிறது. மெய்ஞ்ஞானம் என்பது உண்மை ஞானம் என்ற மேலோட்டமான பொருளைத் தந்தாலும் மெய்யினால் (உடம்பினால்) அடைகின்ற ஞானம் என்ற நுட்பமான பொருளைக் கொண்டிருக்கிறது. இங்கு ஞானம் என்பது முக்தி நிலையை உணர்த்துகின்ற கைவல்ய நிலையாகிய கேவல (கைவல்ய) ஞானம் என்பது பொருள். அதுவே மெய்ஞ்ஞானம். வாலறிவு என்ற இந்த மெய்ஞ்ஞானத்தை அடைவதற்கு மனித உடம்பே ஒரு சாதனம். இதனால் உடம்பைக் கொண்டுள்ள மனிதனே சிறந்த சாதகனாகிறான். அவனே உயிரை முக்தி நிலைக்குச் செலுத்துகின்ற இறுதி சாதனம் என்பது ஜைனம் விளக்குகின்ற உண்மை. ஆகவே, சாதகனை சுவராகக் கொண்டு முக்தி மார்க்கத்துக்குரிய நெறிகளாகிய சித்திரத்தைச் செம்மையாகத் தீட்டுகிறது ஜைனம்.

அந்தச் சாதகனுக்குரிய இலட்சணங்களையும், அவன் கைக்கொண்டு ஒழுக வேண்டிய அனுஷ்டான நெறிகளையும் ஜைனம் விரிவாகக் காட்டுகிறது. மனித உயிரின் இறுதி நிலை 'முக்தி' என்ற 'பரிநிர்வாணம்' ஒன்றே என்று காட்டுவதற்கேற்ப, சாதகனின் இறுதிநிலையும், முற்றும் துறந்த துறவு நிலையும் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும் என்கிறது அது. ஆகவே, அத்தகைய முழுத்துறவு நிலையும் சாதகனுக்கு இயல்பாகவே ஏற்படும்படியான வாழ்க்கை நெறிகளை அது படிப்படியாகப் போதிக்கிறது.

அதற்காகச் சாதகனை அவனது தகுதி நிலைக்கேற்ப மார்க்க நெறிகளைப் பயிலப் போதித்தும் இருக்கிறது. அவை, ஏற்கெனவே சொல்லப்பட்ட 'ஸ்ரமண் உபாசக்' என்ற இல்லறத்தார்க்குரிய 'சிராவக் தர்மம்' என்றும் 'ஸ்ரமண்' எனப்படும் துறவிகளுக்குரிய 'சாது தர்மம்' என்றும் முறைப்படும்.

'ஸ்ரமண் உபாசக்'. ஆகிய இல்லறத்தாரைச் 'சிராவக்' என்றும் சொல்கிறோம். அதே போல் 'ஸ்ரமண்' ஆகிய துறவிகளை சாதுக்கள் என்றும் சொல்லுகிறோம். இங்கு சிராவக்குகள் ஆன இல்லறத்தாரும், சாதுக்களும் ஒருவருக் கொருவர் ஜைன நெறிகளில் தொடர்பு கொண்டவர் களாகவே மதிக்கப்படுவர்.

**" நோற்பவ ரில்லவர்க்குச் சார்வாகி இல்லவரும்**
**நோற்பவர்க்குச் சார்வா யறம்பெருக்கி—யாப்புடைக்**
**காழுங் கிடுகும்போல் நிற்குங் கயக்கின்றி**
**ஆழிசூழ் வையத் தறம் "** —அறநெறிச் சாரம் : 15

என்று அறநெறிச்சாரம் உரைக்கும் இல்லற, துறவறங் களின் ஏற்றம் போல், தவம் மிகும் சாதுக்கள் இல்லறத் தார்க்கு 'முக்தி நெறி' காட்டுகின்ற வழிகாட்டிகளாகவும் இல்லறத்தார் அந்த சாதுக்களைப் போற்றியும், வணங்கியும், உபசரித்தும் மனம் உவந்து ஆதரிக்கின்றவர் களாகவும் ஒருவருக்கொருவர் இயல்பான தொடர்பில் சட்டமும் தூணும் ஒன்றையொன்று சார்ந்து பலம் பெற்று கூரையைத் தாங்குகின்ற இணக்கம்போல், ஜைன ஒழுக்கத்தைத் தாங்க வேண்டும் என்பது சாதகர்களின் பொது இலட்சணமாகும்.

ஆயினும், முக்தியை நோக்கித் தங்கள் உயிர் உயர் வதற்கு உரிய மார்க்க அனுஷ்டானங்கள் இவ்விருவரின் தகுதிகளுக்கேற்பவே காட்டப்படுகின்றன. அதிலும் ஜைன மார்க்கத்தின் இயல்பான எதார்த்த நோக்கும், அதன் ஜீவ

இழையான 'அகிம்சை' நெறியும் தவறாமல் வலியுறுத்தப் படுகிறது.

முக்தி என்ற வீடுபேறு உயிரை இறைத்தன்மைக்கு உயர்த்துகிறது என்பதற்காக, மனிதர்களை உடனடியாகச் சர்வ பரித்தியாகத்துக்கு ஜைனம் வற்புறுத்துவதுமில்லை, இழுப்பதுமில்லை. மனித உயிர்களுக்குள்ளும் பல்வேறு தகுதிகள் இருப்பதை அது நுணுகி உரைப்பதற்கேற்ப, இல்லற நெறி என்றும், சாது தர்மம் என்றும் இரு பெரும் வகையில் அனுஷ்டான நெறிகளை உரைத்து, அவற்றுக் குள்ளும் பல்வேறு நெறி ஒழுக்கங்களையும் வகுத்துள்ளது. இத்தகைய ஒழுக்கங்களை எல்லாம் தவறாது கடைப் பிடித்து, ஒவ்வொரு நிலையிலும் விடுபட்டு, இறுதி நிலை நோக்கி உயர்கின்ற உயிரின் இயல்புக்கேற்பவே அதன் போதனைகளும் அமைந்திருப்பது என்பது வியக்கத்தக்க உண்மையாக விளங்குகிறது.

உயிர், தனது ஒன்பது தனிக்குணங்களுக்கேற்பவே, நுண்ணுயிர் முதல் மனித உயிர் வரை படிப்படியாக உயர்ந்த பிறவித் தகுதிகளை அடைவதையும் மனிதப் பிறவியிலும் தனது மார்க்க நெறிகள் மூலம் சாதாரண கர்மாக்கள் முதல் பெரிய கர்மாக்கள் வரை அது கடப்பதற் குரிய அனுஷ்டமான முறைகளைக் கொண்டிருப்பதையும் அதன் பிறகு 'சிராவக்' என்கிற இல்லற நெறியாளர்கள் பல்வேறு நிலைகளைக் கடந்து இறுதியில், துறவறத்தின் மேன்மையை இயல்பாக உணர்த்தக்க வகையிலும் துறவி யாகிய சாதுக்கள், மிகக் கடுமையான துறவிகளாகி முற்றும் துறந்து ஞானம் பெற்ற நிலையிலும் போதனையாளர்கள், குருமார்கள் என்றெல்லாம் உலக உயிர்களுக்கு முக்திநெறி காட்டுகின்ற வழிகாட்டிகளாக உயர்ந்தும், பின்னர் சித்தநிலை பெற்றவர்களாகவும், அருக நிலையுற்றவர்களா கவும் இறுதியிலும், இறுதிநிலையை உயிர்கள் அடைகின்ற தகுதிகளைக் காட்டுவதிலும் ஜைன மார்க்கத்தின் ஏற்றமும்,

உயர்வும் அதன் அனுஷ்டானப் படிகளும் அறிவுபூர்வமான சித்தாந்ததங்களாக அமைந்துள்ளன. இல்லற நெறியான சிராவகத் தர்மத்தையும், துறவற நெறியான சாது தர்மத்தையும் விரித்துப் பார்ப்பதன் மூலம் இந்த மேன்மை நெறிகளை உணரலாம்.

சிராவகர்கள் (1) கொல்லாமை (2) (பொய்யாமை 3) கள்ளாமை (4) பிறன் இல் விழையாமை (5) மிகு பொருள் விரும்பாமை ஆகிய விரதங்களுடன் திசை விரதம், அணர்த்த தண்ட விரதம், போகோப போக பரியாணம் என்ற மூன்றுகுண விரதங்களையும் சாமாயிகம், புரோஷ தோபவாசம், தேசாவகாசிக விரதம், அதிதி சம்விபாக விரதம் என்றநான்கு சிட்சா விரதங்களையும் கடைப்பிடிப்ப தன் மூலம் 'சிராவக தர்ம அனுஷ்டானிகள்' ஆகின்றனர்.

ஆக, இல்லறத்தார் மேற்குறித்த பன்னிரண்டு நெறிகளை வழுவாது ஒழுகுவதே இல்லற தர்மம் என்றும் அதன் முடிவே முழுத்துறவுக்கும் உரிய மோட்ச பாதையைத் திறக்கின்ற திறவு கோலாக, துறவு நிலை இயல்பாகத் தோன்றுகிற வகையில் இல்லற நெறிகளின் முடிவு சாதகனைச் செலுத்தும்.

> " துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை "
>
> —திருக்குறள். இல்வாழ்க்கை : 2

என்ற வள்ளுவர் வாக்குப்படி இல்வாழ்வானாகிய ஜைன சிராவக்குகள் துறவிகளையும் அனாதைகளையும், அடைக்கலம் ஆனவர்களையும் ஆதரித்து அறநெறியில் வாழ வேண்டும் என்பதே இந்தப் பன்னிரண்டு நெறிகளின் பொது நோக்கமும் சாராம்சமும் ஆகும்.

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை'—ஆயினும் பிறர் பழித்துரைக்காத வகையில் எவ்வுயிருக்கும் தீங்கின்றி, அறஞ் செய்து வாழ வேண்டும் என்பதும் சிராவக தர்ம

அனுஷ்டானத்துக்கு விடப்படும் எச்சரிக்கை. சிராவக தர்மத்தைச் சுருக்கமாகக் காண்போம்.

* **கொல்லாமை :** மனித குணங்களில் சிறந்தது அகிம்சை ஒன்றே என்பது ஜைனக் கோட்பாடு. அதை வாழ்வில் ஒழுகுவதற்குக் 'கொல்லாமை' என்கிற விரதம் முக்கியமானது.

**'' கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும் ''**

—திருக்குறள்; புலால் மறுத்தல்: 10

என்ற குறள்விளக்கம்போல் வாழ்கின்றவன் ஜைனக் கோட்பாட்டின் அடித்தளத்தில் நிற்பவன் ஆகிறான். பிற உயிர்களைக் கொல்லாமலும், பிற உயிர்களின் புலாலைத் தனது உணவாக ஏற்காமலும் வாழ்கின்ற நெறியாளனே உயிர்களால் தொழத் தக்கவன் ஆகிறான். அத்தகைய பெருமையுடையவனுக்கே, அகிம்சையின் முழுப்பரி மாணமும் எட்டும்.

* **பொய்யாமை :** இல்லறத்தான் எந்நிலையிலும் பொய் சொல்லிப் பிழைக்கின்ற தீமையை வெறுத்து ஒதுக்க வேண்டும். பொய்மை ஒன்றே வாய்மைக்கு வித்து. இத்தகைய விரதத்தின் மூலமே மனக்கட்டுப்பாடும், உறுதியும் வலுப்படும்.

* **கள்ளாமை :** பிறர் பொருளை, கவர்ச்சியின் பொருட்டோ, தேவையின் பொருட்டோ அல்லது அவர் களை இம்சிக்கும் பொருட்டோ அல்லது அவர்களைக் கேட்காமலோ தனது உடைமையாக்குவது குற்றம். ஆகவே, இதை விழிப்புடன் இருந்து கடைப்பிடிக்க வேண்டும்.

* **பிறன் இல் விழையாமை:** காமத்தின் பொருட்டு எழும் குற்றம் பிறன்மனை விழைதல், பகை, பாவம், பழி, அச்சம் நான்கும் பிறன்மனைவியை விரும்புகின்றவனை விட்டு விலகாது என்பார் வள்ளுவர். பிறன் மனைவியை

விரும்புகின்றவனுக்கு நரக கதிதான் கிட்டும் என்பதைச் சீவக சிந்தாமணி கூறும்.

* **மிகு பொருள் விரும்பாமை:** தனது தேவைக்கு மேல் அதிகப் பொருள்களை இல்லறத்தான் விரும்புவதும், சேர்த்துவைப்பதும் குற்றம். பொருள் ஆசையுள்ளவனை அருள் ஆசை அணுகாது. பொருள் ஆசையே மற்ற எல்லாப் பாவங்களையும் உண்டாக்கித் தூண்டக் கூடியது. ஆகவே ஜைன சிராவக் ஆகிய இல்லறத்தான், தன்னிடம் சேர்கின்ற அதிக லாபங்களை, தேவைக்கு மேல் சேர்ந்த பொருட்களை ஈகையாகவும், சமுதாய நன்மைக்காகவும் பொது நோக்கத்துக்காகவும் செலவிட்டு அறத்தை நாட்ட வேண்டும் என்கிறது ஜைன மார்க்கத்தின் போதனை.

ஆக இல்லற ஜைனர்கள் மேற்குறித்த ஐந்து அணு விரதங்களையும் உண்மையாக ஒழுகவேண்டும். அவற்றைக் கடைப்பிடிக்கும்போது, ஒவ்வொரு விரதத்திற்கும் ஊறு நேருகின்ற சறுக்கல்களுக்கு 'அதிசாரங்கள்' என்று பெயர். அந்த அதிசாரங்கள் பல வகைகளில் அறிவை ஏமாற்றி இயல்பாக நம்பவைக்கின்ற உணர்வினைச் சாதகனுக்குத் தோற்றுவித்துவிடும். அதனால் அவற்றை விழிப்புடன் சாதகன் தடுத்து உரிய நெறிகளில் வழுவாது இருக்க வேண்டும்.

இந்த அணுவிரதங்களைச் செம்மையாக நிறைவேற்ற உதவும் குணவிரதங்களையும் அவற்றுக்குப் பின் சிட்சா விரதங்களையும் சிராவக்குகள் முழுமையாகக் கடைப் பிடிக்கவேண்டும்.

* **குணவிரதக் கோட்பாடுகள்: (1) திசை விரதம்** இல்லறத்தான் தனது அணுவிரதங்கள் தவறாது இருப்பதற் காகப் பயணக்கட்டுப்பாடான திசை விரதத்தை மேற் கொள்ளவேண்டும். இதை மீறினால் சாதா வேதனீயம்— அசாதா வேதனீயம் என்கிற விருப்பு வெறுப்புக்குக் காரணமாகிய கர்மபந்தம் அவனைக் கவ்வும்.

**(2) அனர்த்த தண்ட விரதம்;** திசை விரதம் என்ற கட்டுப்பாட்டினால் ஒருவன் பயனுள்ள வகையில் வாழ்கின்ற நெறிகளை விட்டுவிடலாகாது. அந்த திசை விரத ஒழுக்கத்திலும் அறவழிக்குரிய உணர்வில் பயனுள்ளவனாக அவன் வாழ்வதற்குரிய ஒழுக்கங்களே அனர்த்த தண்ட விரத நெறியாகும். உதாரணமாக, தீயசிந்தை, தீயஉபதேசம், வீணாக தாவரவகைகளை வெட்டுதல், பயனில்லாத செயல்கள், கொலைக்கு மறைமுகமாகயிருக்கின்ற உணர்வு, செயல் போன்ற பாவங்களை உண்டாக்கும் வழிகளை எச்சரிப்பது இந்த ஒழுக்கமாகும்.

**(3) போகோப போக பரிமாண விரதம்:** ஐம்புலன்களைக் கட்டுப்படுத்தி, அவற்றின் நுகர்ச்சிக்குரிய பொருட்களை வரையறுத்துக் கொள்வதன் மூலம் ஆசைகளைப் படிப்படியாக வென்று அடங்குதல்.

*** சிட்சா விரதங்கள்: (1) சாமாயிக விரதம்:** பஞ்ச பிரமேஷ்டி வணக்கங்களில் ஈடுபட்டு, தியானத்திலும் ஆத்ம சிந்தனையிலும் தம்மைப் பயிற்றுவித்தல்.

**(2) புரோஷதோபவாச விரதம்:** குறிப்பிட்ட விரத நாட்களில் உணவை விலக்கி உண்ணாநோன்பு நோற்றல் ஜைன அனுஷ்டானத்தில் மிகச் சீரிய நெறியாக மதிக்கப்படும்

**(3) தேசாவகாசிக விரதம்:** சாதகன் நாடு விட்டு நாடு செல்லும் பிரயாணத்திலும் ஒரு கட்டுப்பாட்டை ஏற்படுத்திக் கொள்வது இந்நெறி.

**(4) அதிதி சம்விபாக விரதம்;** துறவிகள், விரத அனுஷ்டானிகள், விருந்தினர் ஆகிய தூயோருக்கு உணவு, மருந்து, இருப்பிடம் ஆகியவற்றை மனம் உவந்து கொடுத்து உதவுகின்ற அறநெறி இது. அவற்றைக் கொடுக்கும் போதும் அதற்குரிய பணிவு நெறிகளான ஒன்பது இயல்புகளை ஜைனம் வற்புறுத்துகிறது.

இவ்வாறு 12 நெறிகளையும், அதற்குரிய அதிசாரங்களாகிய சறுக்கல்களையும் உணர்ந்து விழிப்புடன் ஒழுகுகின்ற இல்லறத்தாரைப் படிப்படியாகப் பதினோரு நிலைகளில் பகுத்துள்ளது ஜைனம். இல்லறத்தாரின் பதினோராவது நிலையே, துறவிகளாகத் தங்களை இயல்பாகவே மாற்றிக் கொள்ளும் கருவியாகும்.

**சாது தர்மம்;**

ஜைனத் துறவிகளுக்குரிய மகாவிரதங்கள் 5 என்று அறிந்தோம். இந்த ஐந்து விரதங்களும் இல்லறத்தாரின் அணுவிரதங்களின் கூர்த்த பார்வைகளையே கொண்டுள்ளன. அவற்றின் விளக்கம் வருமாறு:

(1) 1. கொல்லாமை 2. வாய்மை 3. கள்ளாமை 4. பிரமச்சர்யம், 5. அவாவின்மை ஆகிய 5 மகா விரதங்களுடன் ஐந்து சமிதிகள் ஐம்புல அடக்கம், ஆறு வகை முக்கிய கருமங்கள், தலை மயிரை அகற்றுதல், ஆடைகளைத் துறத்தல், நீராடாமை, தரைமீது படுத்தல், பல் துலக்காமை, நின்று உண்ணல், பகலில் ஒருவேளை மட்டும் உணவு ஏற்றல் ஆகிய நெறிகளையும் சேர்த்து 28 மூலகுணங்களாக ஜைனத் துறவிகளுக்கு விதிகள் விதிக்கப்பட்டுள்ளன. இதில் ஈர்யா, பாஷா, ஏஷாணா, ஆதான நிட்சேபணா, உத்சர்க்க என்பன ஐந்து சமிதிகள். நுண்ணுயிர் முதல் எவ்வுயிர்க்கும் மனம் வாக்கு செயலால் துன்பம் வராமல் நடப்பது ஈர்யா சமிதி. அலங்காரம் ஏதும் இன்றிச் சுருக்கமாக, உண்மையாகப் பயன்கருதாது முக்திக்குரிய தர்மங்களைப் பிறருக்கு உரைப்பது பாஷா சமிதி. உணவைப் பிட்சை ஏற்கும் முறையில் நாற்பத்தாறு குற்றங்களை நீக்கிய உணவாக ஏற்பது ஏஷணா சமிதி. சாதுக்கள் தாங்கள் பயன்படுத்தும் பொருட்களில் வரையறை செய்து கொண்டு பயன்படுத்தும் முறை ஆதான நிட்சேபணா சமிதி. தங்கள் உடலிலிருந்து வெளிப்படுத்தும் கழிவுப் பொருட்களால் பிற நுண்ணுயிர்கட்கும்

துன்பம் வராதபடி ஏற்பாடு செய்து கொள்வது உத்சர்க்க சமிதி.

ஐம்புலன்களாகிய மெய், வாய், கண், மூக்கு செவி இவற்றின் நுகர்ச்சிகளை அடக்கிக் கொள்வது இன்றியமை யாத சாது தர்மம்.

இவ்வாறு இரண்டு வகை நெறியாளர்களான சாதகர் களுக்கு இல்லற, சாது தர்மங்களைப் போதிக்கும் ஜைனம், பொறை, பணிவு, நேர்மை, தியாகம், காமமின்மை என்ற பத்துத் தர்மங்களும் உத்தமா தகுதியில் சாதகருக்கு இருக்க வேண்டும் என்பதையும் வலியுறுத்துகிறது. இவற்றின் மூலமே சாதகன் படிப்படியாக உயர்ந்து துறவுநிலை பெற்று இறுதியில் முக்தி நிலைக்குத் தனது உயிரைச் செலுத்த விழைகிறான். இதற்குத் தவம் என்ற தகுதி அடிப்படையாகிறது. இந்தத் தகுதியும், புறத்தவம் என்றும், அகத் தவம் என்றும் இரு பிரிவுகளாகும். அகத்தவத்தில் உட்பிரிவுகள் ஏழு. அதில் தியானம் ஒன்று. தியானம் நான்கு வகைப்படுகிறது.

ஒரு நோக்கத்தைச் செலுத்துவதிலும், செலுத்துகின்ற விதத்தை அறிவதிலும், எவ்விதம் செலுத்தவேண்டும் என்பதைத் தீர்மானிப்பதிலும், மனிதனே ஆதாரமான பொருளாகிறான். நோக்கங்களும், நோக்கங்களின் இறுதி இலக்கும், மனிதன் என்ற சாதகனுக்காகவே. ஆகவே சாதகனாகிய மனிதன், தனக்குரிய உண்மை அறிவைப் பெற்றாக வேண்டும். அந்த அறிவை அடைவதற்கு அவன் உரிய வழிகளில் பயிற்சியினைப் பெற்றாக வேண்டும். அந்தப் பயிற்சியை ஒரு சாதாரண மனிதனும் பெறக் கூடிய வழி தியானம் ஒன்றின் மூலமாகத்தான் இருக்க முடியும். எனவே சாதகனுக்குரிய முக்கிய சாதனமாக தியானத்தை ஜைனம் முறைப்படுத்திக் காட்டுகிறது.

சாதகன் ஒருவனது தியானம் என்பது அவன் மனம் இறைத்தன்மையை நோக்கி ஒருதலைப்பட்டுத் தியானித்

திருப்பது, அல்லது மௌனித்திருப்பது ஆகும். சாதகனின் மனம் ஒரு நிலைப்பட்டிருக்கும்போது அவனது இந்திரியங்களும் ஒடுங்கிப்போய் மனம் கூர்மைப்படுகிறது. தியானம் கூர்மைப்பட்ட நிலையில் மனத்தின் சுயதரிசனம் கிடைத்து ஜீவன், அஜீவன், பந்தம், பாவம், புண்ணியம், ஸம்வரம், ஆஸ்ரவம், நிர்ஜரை, மோஷம் என்ற ஒன்பது தத்துவங்கள் அவனுள் புலப்படுகின்றன. அந்தத் தத்துவ தரிசனமே அவனது மேலான பரிபக்குவ நிலைக்குப் படிக்கற்களாக அமைகின்றன.

இந்த தியானத்தை நான்கு வகையாக ஜைன நெறி வகுத்துள்ளது.

(1) ஆர்த்ர தியான், (2) ரௌத்ர தியான், (3) தர்ம தியான், (4) சுக்ல தியான்.

என்று குறிப்பிடும் நான்கில், முதல் இரண்டு தியானங்களில் மனது ஓரளவு ஒருநிலைப்படாமலும் ஆத்திரத்திலும் (ஆர்த்ர) கோபத்தாலும் (ரௌத்ர) கொள்ளும் தியானங்கள் இவை என்பதால் அதற்கேற்ற மனக்கிலேசமும் (சஞ்சலம்) ஏற்படத்தான் செய்யும். ஆகவே சாதகன் இவ்வகைத் தியானங்களுக்குத் தன்னை அர்ப்பணிக்கலாகாது என்கிறது ஜைனம்.

பின்னால் குறிப்பிடப்பட்ட தர்ம தியான், சுக்ல தியான் என்ற இரண்டும் சாதகனுக்கு நற்பயனை அளிக்கின்றன. இந்த வகைத் தியானங்களால் உள்ளம் உயர்நிலை அடைகிறது. இது நல்ஞானம் என்பது விருப்பு வெறுப்பற்ற சமநிலையிலும், தீமைகளிலிருந்து விடுபட்ட நிலையிலும் ஏற்படும் நல் அறிவு ஆகும். இதன் மூலம் நன்மை தீமை உணரப்படுகிறது.

ஆக ஆர்த்ர தியானம், ரௌத்ர தியானம், தர்ம தியானம், சுக்ல தியானம் என்ற நான்கில் கடைசி இரண்டு தியானங்களான தர்ம தியானத்தையும், சுக்ல தியானத்

தையும் நன்மையின் பொருட்டுச் சாதகன் கைக்கொள்வது, அவனை மிக உயர்ந்த நிலையில் வைக்கும். இந்த இரண்டு தியான நிலைகளுக்கு ஷாஆலம்பணம், நிர். ஆலம்பணம் என்ற இரண்டு தகுதிகளையும் அது குறிப்பிடுகிறது.

ஷா ஆலம்பணம் என்பது தியான நிலையில் அமர் வதற்கு ஏதாவது ஒரு பற்றுக்கோலைப் பற்றியிருப்பது, உதாரணமாக தியானம் கைகூடுவதற்கு மான்தோல், தண்டம் போன்ற உபகரணங்களை—சௌகரியங்களை வைத்துக்கொண்டு அமரும் நிலை. நிர்ஆலம்பணம் என்பது எவ்வித உபகரணங்களும் இன்றி எந்த இடத்திலும் மனத்தை ஒருநிலைப்படுத்தி அமர்வது. நிர்ஆலம்பணம் மூலம் தியானிக்கின்ற மனித உயிர் பரிநிர்வாண நிலை என்னும் இறைத் தன்மையை அடைகிறது.

இவ்வாறு சாதகனுக்குரிய மார்க்க நெறிகளை, அநேகாந்தவாதக் கோட்பாட்டினால் பகுத்து, ஒவ்வொரு பிரிவிலும் உள்ள பல்வேறு நிலைகளைக் காட்டி, அதற்குரிய லட்சணங்களையும், பலன்களையும் உரைத்து, அதற்கும் சீரிய மார்க்கப் பிரிவுகளையும் அனுஷ்டான விதிகளையும் காட்டி, அறிவினுள் அறிவாய் நுட்பமான மார்க்க இலக்கணங்களைத் தெளிவாகக் காட்டி, சாதகனின் இலட் சணங்களாக—தகுதிகளாக காட்டும் ஜைனம், ஏதாவது ஒருவகையில் மார்க்க நெறி தவறி அதிலிருந்து மீள முடியாது என்று துன்புறும் நிலை ஏற்பட்டால் சல்லேகனை என்னும் வடக்கிருத்தல் 'நோன்பை' உரைக்கிறது.

வடக்கிருந்து, உணவு உறக்கம் எதையும் நாடாமல் தமது உடலைத் தாமே தண்டித்துக் கொண்டு உயிர்விடும் முறைக்குச் 'சல்லேகனை' என்று பொருள். இதனால் மறுபிறப்பில் உயிரானது தூய்மையான பிறப்பை எய்தும் என்றும் கூறுகிறது.

ஆக, பகவான் ஸ்ரீ மகாவீரரின் பாதையில், ஜைனத்தின் பார்வைகளை, இங்குச் சிந்திப்பதற்கும் உங்கள் முன் எடுத்துச் சொல்வதற்கும் இந்த மாபெரும் வாய்ப்பை எமது ஜைன இயல் ஆய்வுக்கழகப் பணியின் சிறந்த பதிவுகளில் ஒன்றாக மதித்து மகிழ்கிறேன். அதற்குக் காரணமாக இருந்த 'நிர்வாண்' அமைப்புக்கு எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உண்மையில் மனிதாபிமானத்தின் உயர்ந்த நெறிகளைக் கொண்ட போதனைகளை மண்ணுலகில் போதிக்கும் ஜைனம், தனது மார்க்க நெறிகள் மூலம் மனித உயிர் முக்திபெறுகின்ற பேரருள் நோக்கம் கொண்ட 'பெரு நெறி' என்பதை— 'பெரு நெறி பிடித்து ஒழுக வேண்டும்' என்ற வள்ளல் பெருமானின் பார்வையில் நாம் காண முடியும்.

மானுட தர்மத்தின் மகத்தான மார்க்கமாகிய ஜைனத்தின் சித்தாந்தங்களை அணுகி, அணுகி—நுணுகி, நுணுகி, நோக்குவோருக்கு அதன் உண்மைப் பொருள் விளங்கும் என்பது உறுதி.

அந்த நம்பிக்கையை, நம் தமிழ் நாட்டுக்கு தருகின்ற பணியில் இணைத்துக் கொண்டுள்ள—

**" நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்**
**வான் பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்**
**ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்**
**தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே!"**

—திருமந்திரம்: 85

என்று திருமூலர் வாக்குப்படி உலக உச்சியாகிய சித்த சிலா தலத்தைப் பற்றி நிற்கும் தத்துவப் பொருளான உயிர் பற்றிய விளக்கத்தைச் சொல்லிடின், ஊன் ஆகிய அஜீவனை அது பற்றியுள்ள சித்தாந்தமாக ஜைன மார்க்கம் விளங்கும். அந்த மார்க்கத்தின் மேன்மை தானாகவே நமக்கு விளக்கமுறும்.

# 4

# ஜைனம் கூறும் வாழ்க்கை நெறி

உலகில் பிறக்கின்ற எண்ணற்ற கோடி ஜீவராசிகளில் மனிதனின் பிறப்பே உயர்ந்த புலன் ஆற்றல்களைக் கொண்டு திகழ்கின்றது. மனிதன் ஒருவனுக்கே ஆறறவு என்கின்ற மேலான சிறப்பு இருக்கிறது. ஆக, பிறவிகளில் மனிதப் பிறவியிலேயே இயற்கையின் படைப்பாற்றல் மேலோங்கி நிற்கிறது எனலாம்.

கிடைத்தற்கரிய இந்த மனிதப் பிறவியின் மூலம் உயிர்கள் பிறப்பற்றுப் போகின்ற இறைத்தன்மையை எய்தற்கு உரிய நெறிகளை உலகில் அவதரித்த ரிஷிகளும், மகான்களும் காட்டிச் சென்றிருக்கிறார்கள். அத்தகைய அவதார புருஷர்களில் தனிச் சிறப்பு வாய்ந்தவரும் இருபத்து நான்காவது தீர்த்தங்கரராகவும் ஜைன நெறி களைச் செம்மையாக்கி அவற்றுக்கு மெய்ஞ்ஞான வடிவம் தந்தவராகவும் வணங்கப் பெறுபவர் பகவான் மகாவீரர். அவர் மனிதப் பிறப்பின் உயர்ந்த நிலை குறித்தும் அந்தப் பிறப்பின் மூலம் மனிதன் என்கின்ற சாதகன் அதாவது பயிற்சியாளன் கர்மாக்களிலிருந்து முழு விடுதலை பெற்று ஜீவன் முக்தி என்னும் இறைத் தன்மையை எய்துவதற்கான உயர்ந்த—அதே சமயம் இயற்கைக்கு ஏற்ற தத்துவங்களை, நெறிகளைக் காட்டியிருக்கின்றார். அவரது மெய்ஞ்ஞான நெறிகளின்படி வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர்கள் ஜைனர்கள் என இன்று வழங்கப் பெறுகிறார்கள்.

ஜைனர்கள் அல்லது ஜைனம் என்ற சொல்லானது இன்று ஒரு மதத்தினரையோ அல்லது மதத்தையோ குறிக்கும் பொருள் என்று வழக்கத்துக்கு வந்துவிட்டாலும் உண்மையில் ஜைனம் என்பது ஒரு மதம் என்ற நோக்கில் கொண்டு பகவான் மகாவீரர் தம் காலத்து மக்களைத் தம் வழிக்கு இழுக்கவில்லை. சொல்லப்போனால் அவருக்கு முன்பே 23 தீர்த்தங்கரர்களும், அவர்களுக்கும் முன்பாக வரையறுக்க இயலாத காலத்தில் இருந்த முனிவர்களும் இன்று வழங்குகின்ற ஜைன நெறிகளின் கோட்பாடுகளை வலியுறுத்தி வாழ்ந்தும் காட்டி இருக்கிறார்கள். பகவான் மகாவீரர் நெறிகளின்வழி தாம் வாழ்ந்த காலத்தில் உலகத்தில் நாடுகளிடையே நிலவி வந்த போர்வெறி, மண்ணாசை, அதர்ம ஆட்சி, அநீதி முதலிய கொடுமைகளி லிருந்து மனித சமுதாயத்தை விடுவிக்கும் தனிமனிதனின் வாழ்க்கை அதற்கேற்ற நெறியில் அமையவும், கடும் தவத்தை மேற்கொண்டு, அதற்கான உண்மை நெறிகளைக் கண்டுணர்ந்தார். அவர்கண்ட நெறிகள் அன்றும் இன்றும் என்றும் இந்த உலகில் மனித சமுதாயத்துக்கு அமைதியும் ஒழுக்க வாழ்வும் அளித்து, மனிதப் பிறவியைக் கர்மாக்களி லிருந்து விடுதலை பெறத் தூண்டுவதாக இருப்பதை நாம் உணரலாம்.

பகவான் மகாவீரர் உணர்த்திய நெறிகளைக் கடைப் பிடித்து ஒழுகும் மனிதன் இந்த உலகாயதப் பற்றை வென்றவன் (Conqueror) என்ற பெருமைக்குரியவனா கிறான். அதனால் தான் அவர் ஜைனன் என்று அழைக்கப் படுகிறான். ‘ஜைனம்’ என்ற சொல் மகாவீரர் காலத்தே மக்களின் வழக்கில் இருந்து வந்த ‘பிராகிருத மொழிச் சொல்லான ஜினா (JINA) என்பதன் வழி வந்தது. JINA என்றால் வென்றவன் என்று பொருள். இப்போதுகூட வெற்றி என்ற பொருளுக்கு ஜெய், ஜெயம் என்று வட மொழிகளில் வழங்குவதைக் காணலாம். ஆக, ‘ஜைனம்’

என்பது வெற்றியையும் 'ஜைனன்' என்பது வென்றவன் என்பதையும் காட்டுகிறது என்பதை நினைவில் கொண்டு, அப்படி வெற்றிக்கான பாதையில் மனிதன் என்ற சாதகனை ஜைனம் எப்படி வழிப்படுத்துகிறது என்று நோக்க வேண்டும்.

ஜைன நெறியானது இயற்கைக்கு ஏற்ற வழியில் மனிதனை, மனிதனாக வாழச்செய்து அவன் இறைத் தன்மையை அடைவதற்கு 'பயிற்சி' என்னும் சாதகத்தை அளிக்கிறது. அது இறைவன் தனியே எங்கோ இருக்கிறான் என்ற கூற்றை மறுத்து இயற்கையான பிரபஞ்ச இயக்கத்தையும் அதன் நிரந்தரத் தன்மையையும் ஒப்புக்கொண்டு, அதில் மனிதனின் சாதகலட்சணங்களை வலியுறுத்தி அவன் பரிபக்குவம் என்ற முக்தியை, பிறவாத தன்மையை அடைய வழி காட்டுகிறது.

ஜைனத்தின் இறுதியான நோக்கம் மனிதனை முழுத் துறவுக்கு வலியுறுத்தி அவனை முக்தி அடையச் செய்வது ஒன்றே, என்றாலும் அத்தகைய நிலைக்கு மனிதனைத் தயார்ப்படுத்தச் சாதகமான அதாவது எளிதான தர்மங்களையும் காட்டுகிறது.

அது,—'சிராமன்' என்றும் முழுத் துறவிகள் என்றும், 'சிராமன் உபாசக்' என்றும் துறவுத்தன்மையை உபாசிக்கின்ற அதாவது துறவுத் தன்மைக்குத் தயாராகின்ற இல்லறத்தான் என்று மனிதர்களை இருவகையாக்கி அவர்களுக்கு உரிய நெறிகளைக் காட்டுகிறது.

மனிதன் பிறந்ததும் இந்த உலகப்பற்றிலிருந்து முற்றும் துறந்துவிட முடியாது அல்லவா? ஆகவே முதலில் இல்லறத்தை மேற்கொண்டவர்களுக்குச்சாமானிய தருமம் என்னும் பொது அறநெறியை வகுத்து அதில் 12 வகையான உண்மைகளைக் கடைப்பிடித்து நடக்கத் தூண்டுகிறது. இந்தப் பன்னிரண்டு வகையான உண்மை நெறிகளைத்

தவறாது ஒருவன் கடைப்பிடித்து வாழ்ந்தால் அதன் இயல்பான பலனால் அவனுக்குத் துறவு நிலை தோன்றிவிடும். துறவியான நிலையில் அவன் விசேஷ தருமம் சிறப்பான ஆச்சார நெறிகளைக் கைக்கொள்ளச் செய்கிறது. இதில் குறிப்பாக ஐந்து நெறிகள் உணர்த்தப்படுகின்றன. இதன் முடிவே மனித உயிரானது பரிபக்குவம் என்கின்ற முக்தியை, விடுதலையை அடைகிறது. இதுவே 'மோட்சம்' என்றும் சொல்லலாம்.

ஆயினும் இந்த இருவருமே மோட்சத்தை அடைவதற்கு,

1. நல்லறிவு (Right Knowledge)
2. நற்காட்சி அல்லது நன்னம்பிக்கை (Right Faith)
3. நல்லொழுக்கம் (Right Conduct)

என்ற மூன்று வகையான மெய்ப்பாட்டை அறிவுறுத்துகிறது.

இதைத்தான் பலநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஆச்சாரியா உமாஸ்வாதி தமது தத்வார்த்த சூத்திரத்தில்

Samyak Dharshau Gyana
Charitrani Moksha Marga:

என்று காட்டியிருக்கிறார்.

அதாவது நற்காட்சி, ஞானம் என்கிற நல்லறிவு மற்றும் நன்னடத்தையில் ஒழுகுவதுதான் ஜைனனுக்கு மோட்சத்தை அடைய வழி என்று இதன் பொருள். இதை மும்மணிகள் (திரி ரத்னம்) என்று ஜைனர் கொண்டாடுவர்.

இம்மூன்று மெய்ப்பாட்டு நெறிகளில் வாழ விரும்பும் மனித உயிருக்குச் சில கட்டுப்பாடான வாழ்க்கை அவசியம் ஆகிறது.

அதற்கென்ற சில விரதங்களை - நியமங்களைத்தான் மேலே குறிப்பிட்ட 'சிரமான' என்னும் துறவிக்கும் 'சிராமன உபாசக்' என்னும் இல்லறத்தானுக்கும் மோட்சம் அடைவதற்கான லட்சணங்களை, மார்க்கத்தை ஜைன நெறி காட்டுகிறது.

இதில் இல்லற வாழ்வுக்குரிய பன்னிரெண்டு நெறி களைக் கடைப்பிடிப்பது அனுவிரதம் என்றும், துறவறத்தில் கடைப்பிடிக்கின்ற ஐந்து நெறிகளை மகாவிரதம் என்றும் சொல்கிறோம்.

**இல்லறத்துக்கான பன்னிரண்டு நெறிகள் வருமாறு:**

1. பிற உயிர்களைத் துன்புறுத்தாதிருத்தல்
2. சகஜ வாழ்வில் பொய் பேசாதிருத்தல்
3. நன்னடத்தை, அதாவது கூடா ஒழுக்கத்தை எச்சரிக்கிறது.
4. திருடாமை. (கள்ளாமை)
5. 'அபரிகிரஹா' என்னும் இல்லறத்தில் தேவைப் படும் பொருளைத் தவிர, தேவைக்கு மேல் சேர்த்து வைக்காதிருத்தல்.
6. பிரயாணக் கட்டுப்பாடு (திசா விரத்)
7. உணவுக் கட்டுப்பாடு. இதில் உடலுக்கு இயைந்த குறைந்த உணவை — குறிப்பாக மரக்கறி, உணவையே உட்கொள்ளல். இதன் விளக்கம் புலால் மறுத்தல் என்பதே.
8. பயனில சொல்லாமை. அதாவது பயனற்ற சொற்களைச் சொல்லாதிருப்பது மட்டுமன்று, தீய, கடுஞ்சொற்களை நாடாமல் இருப்பதும் தேவை.
9. 'சமாயக் விரத்' என்னும் மனத்தைச் சமன் படுத்தும் தியானப் பயிற்சியைக் குறிப்பிட்ட வேளைகளில் தவறாமல் செய்து வருவது.
10. நல்ல ஒழுக்கம் உள்ளவர்களையே தேர்ந்தெடுத்துப் பழகுதல்.
11. உபவாச நெறி, அதாவது குறிப்பிட்ட வேளை களில் உண்ணா நோன்பிருந்து மனத்தைச் சுய தரிசனம் பெறச் செய்வது இதன் பொருள்.

12. விருந்தோம்பல். இல்லறத்தான் கடைப்பிடிக்க வேண்டிய அணுவிரதம் என்ற இந்தப் பன்னிரண்டு நெறிகளை நடைமுறைப்படுத்தும்போது சில விதிவிலக்குகளையும் ஜைனம் ஏற்றுக் கொள்கிறது. அதுவும் நன்மையின் நோக்கம் கருதியே.—

உதாரணமாக,

சகஜ வாழ்வு எனப்படும் வணிகம், உத்தியோகம் போன்ற துறைகளில் முழுக்க உண்மைகளையே கடைப் பிடிக்க முடியாது என்பதால், சந்தர்ப்ப வசத்தால் பொய்மையையும் அனுமதிக்கத்தான் செய்கிறது.

**'' பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்''** —திருக்குறள்; வாய்மை: 2

என்று வள்ளுவர் வகுத்துக் காட்டியதை இங்கு உதாரணமாக ஏற்கலாம்.

மற்றபடி இந்த ஒழுக்கங்களை முழுப் பரிமாணத்தோடு ஒழுகுவதே சாதகனின் லட்சணமாக ஜைனம் வலியுறுத்து கிறது.

**'' உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்''**

—திருக்குறள்; கள்ளாமை: 2

என்று வள்ளுவர் எச்சரிப்பது முழுக்க முழுக்க ஜைனனுக்கே என்பதை ஏற்க வேண்டும். ஜைனன் என்று தன்னைத் தெரிவித்துக் கொள்ளும் ஒருவன் பிறரது பொருளை 'எப்படியாவது கைக்கொள்வோம்' என்று நினைப்பதே குற்றம் என்பதை ஜைனம் உறுதியாக ஒப்புக் கொள்கிறது.

இல்லறத்தானுக்கென்று வகுக்கப்பட்ட பன்னிரண்டு அணுவிரத நெறிகளின் அடிப்படை என்ன என்பதை நோக்கினால் 'அறம்' என்கின்ற முழு உருவம் புலப்படும்.

அறம் என்பது ஏதோ வெறும் தர்ம உணர்வையும் அதன் சொல்லையும் குறிப்பதன்று.

இதை வள்ளுவர் விளக்குவார்:

**" அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்"**

—திருக்குறள்; அறன் வலியுறுத்தல்: 5

அழுக்காறு என்பது பொறாமை. இதை எப்படி வெல்வது?

இஷ்ட வியோகம் என்கிற — விரும்பும் பொருள் கிடைக்காத போதும் அல்லது விரும்பும் செயல் நடக்காத போதும்,

அனிஷ்டயோகம் என்கிற—விரும்பாத பொருள் நம்மை அண்டும் போதும் மனத்தைச் சமநிலைப்படுத்திக் கொள்வதன்மூலமே அழுக்காறு வெல்லப்படும். நமக்குக் கிடைக்காத பொருள் பிறருக்குக் கிடைக்கும்போதும் நம் மனத்தைப் பொறாமையின் குறியில் தள்ளிவிடாமல் இருந்து அந்த அழுக்காறு நம்மை இழுக்காக்கிவிடாமல் பாதுகாக்க வேண்டும்.

அவா என்பது வணிகத்துறையிலோ உத்தியோகத் துறையிலோ சம்பந்தப்படும்போது லாபம், பதவி, புகழ் என்ற மயக்கங்கள் ஆசைகள் நம்மைக் கவ்வும்

வெகுளி என்ற கோபம் நம் அறியாமையினாலோ அல்லது பிறரது அறியாமைத் தனத்தின் மீதோ எழுவது:

இன்னாச்சொல் எழுவதன் காரணமே தீய நடத்தை, தீயவர் நட்பு, தீமையில் நாட்டம் என்ற காரணங்களால் தான். ஆகவே, நம் துன்பத்துக்கும் நம் தாழ்ச்சிக்கும் வித்திடும் அவா வெகுளி, தீய சொல் முதலியவற்றையும் நம்மோடு சம்பந்தப்படாமல் இருக்கச் செய்வதோடு தொடர்ந்து அவற்றிலிருந்து காத்துக்கொள்வதே அறம் ஆகும்.

இல்வாழ்வானை இத்தகைய நெறிகள் மூலம் செம்மைப்படுத்தி இயக்குவதன் காரணம் அவன் மூலம்

துறவிகளையும், அவர்களுக்கு உரிய மகா விரதங்களையும் கடுமையாகப் பயிற்சி செய்து வாழ்விப்பதே.

''துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை''

—திருக்குறள்; இல்வாழ்க்கை :2

என்ற வள்ளுவனின் இலக்கணப்படி, சாதகனானவன் துறவிகளுக்கும் அனாதைகளுக்கும் வறியவர்களுக்கும் தொண்டு செய்து அறம் புரிந்து இல்வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதையே ஜைனம் வலியுறுத்துகிறது.

இனி, —'சிராமன்' அல்லது 'சாது' என்றும் துறவிகளின் மகாவிரத நெறிகளைக் காண்போம்.

மகாவிரத நெறிகளைக் கடைப்பிடிக்கும் துறவிகள் அதற்கான நெறிகளிலிருந்து ஓர் இம்மியேனும் நழுவிவிடக் கூடாது.

1. அகிம்சை
2. வாய்மை எனப்படும் சத்தியம்
3. திருடாமை
4. பிரம்மச் சரியம்
5. பொருள்கள் மீது பற்றுக் கொள்ளாமை

என்ற பஞ்ச நெறிகளில் அவர்கள் கடுமையாக. விரதம் பூண்டொழுக வேண்டும்

துன்பங்களுக்குக் காரணமே ஆசை தான். ஆசைகளை விட்டொழிக்கும் வரை நம்மைத் துன்பங்கள் தொடர்ந்து கொண்டே இருக்கும். அதனால் மனிதனாகிய ஒவ்வொருவரும் பற்றற்ற வாழ்வைப் பின்பற்றவேண்டும் என்பதை ஜைனம் சாதகனுக்கு எடுத்துக் கூறித் துறவுக்கு இலக்கணம் வகுக்கிறது. மனித உயிரின் இறுதிப்படி துறவுதான். அதிலும் இந்திரியங்களால் ஆன ஐம்புலன்களையும்

அடக்கிச் சென்ற கடுமையான துறவு. அந்த நிலையே மோட்சத்தின் இறுதிப் படிக்கல் என்பது ஜைன நெறிகள் காட்டும் உண்மை. இத்தகைய துறவின் மேன்மையை—

**'' தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்''**

— *திருக்குறள்; துறவு : 8*

என்றும்,

**'' பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று**
**நிலையாமை காணப் படும்''**

— *திருக்குறள்; துறவு: 9*

என்றும் திருவள்ளுவ தேவர் விளக்குவார்.

ஜைனத் துறவிகளின் நடத்தை Code of Conduct, பற்றிப் பிராகிருத மொழியிலான ஆச்சாராங்க 'துத்ர உத்ராத்யயன சூத்ர தஸ்வை லாலி சூத்ர' என்ற ஜைனத் தத்துவ நூல்களில் மிக நுட்பமாக வர்ணிக்கப்பட்டுள்ளது.

குறிப்பாக ஜைன நெறிகளை மேற்கொண்ட சாதகன் ஒருவனுக்கு அவன் இல்லறத்தான் என்றாலும், துறவி என்றாலும் அவன் மிகமிக முக்கியமாகக் கைப்பற்றி இருக்கவேண்டியது 'அகிம்சை' என்ற பெரிய ஒழுக்கத்தைத் தான் பின்பற்றி இயல்பாகவே வரச் செய்யும் கருவி யாகும்.

அகிம்சை ஒன்றுதான் மற்ற நெறிகள் இயங்குவதற்கு அச்சுப் போன்றது என்பதால் உலகில் ஜைனமானது அகிம்சையை மிகஉயர்வாகக் கருதிப் போற்றுகிறது. ஜைனம் அகிம்சையை மதிப்பது போல், முக்கியத்துவம் அளிப்பது போல் மற்றெந்த மதங்களாவது போதிக்கின்றனவா என்றால் 'இல்லை' என்றுதான் சொல்ல வேண்டி வரும். அகிம்சை என்பது என்ன?

பிற உயிர்களின் துன்பத்துக்கு நாம் காரணமாக இருக்கக் கூடாது என்பது மட்டுமல்ல. பிற உயிர்கள்

துன்பம் அடையும்போது, அந்தத் துன்பம் நீக்கப்பட நாம், நம்மை எவ்வழியிலேனும் ஈடுபடுத்திக்கொள்வதே உண்மையான அகிம்சை.

வடலூர் இராமலிங்க வள்ளல் பெருமான் :

**மண்ணுல கதிலே உயிர்கள்தாம் வருந்தும்**
**வருத்தத்தை ஒருசிறி தெனினும்**
**கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்**
**கணமும் நான் சகித்திட மாட்டேன்**
**எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால்**
**இசைத்தபோ திசைத்தபோ தெல்லாம்**
**நண்ணுமவ்வருத்தம் தவிர்க்கும் நல்**
**வரந்தான் நல்குதல் எனக்கிச்சை எந்தாய்.**

— திருவருட்பா; பிள்ளைச் சிறு விண்ணப்பம்: 23

**" வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்"**

என்று ஒரு பயிர் வாடுவதைக் கூடத் தாங்க முடியாது துடிப்பார். ஜைனம் இந்தக் கோட்பாட்டில் இன்னும் அதிகத் தீவிரம் காட்டுவதை நாம் பார்க்கலாம்.

ஜைனத் துறவிகள், தங்கள் மூக்கையும் வாயையும் துணியால் பொத்திக் கொண்டு வெறும் பாதங்களில் மெல்ல நடந்து செல்வதும், பாதையை மயில் இறகால் விலக்கிச் செல்வதும் எதற்காக?

வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் வெளிப்படும் காற்றின் உஷ்ணம் பட்டு வெளிக்காற்றில் இருக்கிற கண்ணுக்குத் தெரியாத கிருமிகள் கூடப் பாதிக்கப்படக் கூடாது என்பதும், பாதையில் மண்ணின் கீழே மறைந்திருக்கும் சிறு புழுப் பூச்சிகள் கூட மிதிபட்டு விடக்கூடாது என்பதும் தான். எத்தகைய அகிம்சையை ஜைனம் போதிக்கிறது என்பதற்கு இதைவிடச் சிறந்த சான்று தேவையில்லை. இம்சையிலிருந்தே துன்பமெல்லாம் தோன்றுகின்றன

என்பது ஆசாராங்க துத்திரத்தில்' பகவான் மகாவீரர் வாக்கு குறிப்பிடப்பட்டுள்ளது.

**" நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்**
**நோய் இன்மை வேண்டுபவர்"**

— திருக்குறள்; இன்னா செய்யாமை: 10

என்று விளக்கம் காட்டுவார் வள்ளுவப் பெருமான்.

இச்சைக்குணம் எதிலிருந்து தோன்றுகிறது?

கோபம், பேராசை, அஞ்ஞானம் என்ற கேடுகளிலிருந்து என்கிறது 'பிரச்சினை வியாக்கரணம்' என்னும் நூல்.

அகிம்சையைப் பரிபூரணமாக உணர்ந்தவனுக்கு ஜைன நெறிகளின் மற்ற உயிர் ஒழுக்கங்களான வாய்மை| அஸ்தேயம் எனப்படும்—கள்ளாமை|அபரிக்கிரஹம் என்ற மிக பொருள் சேர்க்காமை|தனது நெறிகளில் அக்கறை (சிரத்தை)|எல்லா உயிர்களிடத்தும் சம நோக்கு (சம பாவனை) 'ஸரலதா' எனப்படும்—எளிமை|விநயம் என்கிற பணிவு| ஸத்ஸங்கமான நல்லவர் சேர்க்கை|அறத்தன்மை. முதலிய பண்புகள் அவனை இயல்பாகவே அண்டும். இத்தகைய பண்புகள் மூலம் சிறந்த பயிற்சியாளனாகும் அவன் புலனடக்கத்தின் அவசியத்தை உணர்ந்து துறவு நிலைக்கு மாறி விடுகிறான். துறவியின் இலக்கணங்களைக் காட்டும் நல்லொழுக்கம், நற்சாட்சி, நன்னம்பிக்கை ஆகிய திரி ரத்னங்கள் வாயிலாக மோட்சத்தை அடைந்தவனாகிறான்.

சாதகனின் இன்னொரு லட்சணமாகத் 'தியானம்' அவசியம் என்பதை ஜைனம் காட்டுகிறது.

சாதகன் ஒருவனது தியானம் என்பது அவன் மனம் இறைத்தன்மையை நோக்கி ஒருதலைப்பட்டுத் தியானித்திருப்பது, அல்லது மௌனித்திருப்பது. சாதகனின் மனம் ஒரு நிலைப்பட்டிருக்கும்போது அவனது இந்திரியங்களும்

ஒடுங்கிப்போய் மனம் கூர்மைப்படுகிறது. தியானம் கூர்மைப்பட்ட நிலையில் மனத்தின் சுயதரிசனம் கிடைத்து ஜீவன், அஜீவன், பந்தம், பாவம், புண்ணியம், ஆஸ்ரவம், ஸ்வரம், நிர்ஜரை, மோஷம் என்ற ஒன்பது தத்துவங்கள் அவனுள் தெரிகின்றன. அந்தத் தத்துவ தரிசனமே மேலான பரிபக்குவ நிலைக்குப் படிக்கற்களாக அமைகின்றன.

இந்தத் தியானத்தை நான்கு வகையாக ஜைன நெறி வகுத்துள்ளது.

(1) ஆர்த்தர தியான்

(2) ரௌத்ர தியான்

(3) தர்ம தியான்

(4) சுக்ல தியான்

என்று குறிப்பிடப்படும் நான்கில் முதல் இரண்டு தியானங்களில் மனது ஓரளவு ஒருநிலைப்பட்டாலும் ஆத்திரத்திலும் (ஆர்தர) கோபத்திலும் (ரெவத்ர) கொள்ளும் தியானங்கள் இவை என்பதால் அதற்கேற்ற மனக்கிலேசமும் (சஞ்சலம்) ஏற்படத்தான் செய்யும். ஆகவே சாதகன் இவ்வகைத் தியானங்களுக்குத் தன்னை அர்ப்பணிக்கலாகாது என்கிறது ஜைனம்.

பின்னால் குறிப்பிடப்பட்ட தர்ம தியான், சுக்ல தியான் என்ற இரண்டும் சாதகனுக்கு நற்பயனை அளிக்கிறது. இந்த வகை தியானத்தினால் உள்ளம் உயர் நிலையடைகிறது. இவை நல் ஞானத்தின் விளைவாக மட்டுமே ஏற்படும் தியான நிலையாகும். நல் ஞானம் என்பது விருப்பு வெறுப்பற்ற சமநிலையிலும், தீமைகளி லிருந்து விடுபட்ட நிலையிலும் ஏற்படும் நல் அறிவு ஆகும். இதன் மூலம் நன்மை, தீமை உணரப்படுகிறது.

தியானம் என்பதே தவத்தின் அடித்தளம் ஆகிறது. தியானத்தின் மூலம் தன்னைத் தானே தரிசிக்கும் உயர்ந்த ஞானம் சித்திக்கிறது என்பதே :

**உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்(பு) ஆலயம்**
**வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே**

— *திருமந்திரம்:* 1823

என்று தெளிந்து உரைத்திருக்கும் திருமூல தேவரின். திருமொழி, தியான நிலையின் உச்சமேயன்றி வேறென்ன? இதையே,

**'' நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது''**

— *திருக்குறள்; அடக்கமுடைமை:* 4

என்பார் வள்ளுவர்.

'அடங்கியான் தோற்றம்' என்ற பதத்தின் மூலம் மனத்தை ஒடுக்கி அமரும் நிலையைக் குறிக்கின்றார். 'மனத்தை' ஒடுக்கி ஒருநிலைப்பட்டு அடங்குவது என்பது தியான நிலை ஒன்றின் மூலமே தான் முடியும் என்பதைத் தெளிந்தால் ஜைனம் சாதகனுக்குக் காட்டும் 'தியானம்' என்கிற சாதக லட்சணத்தின் பெருமை அறியப்படும்.

ஆக, ஆர்த்ர தியானம், ரௌத்திர தியானம், தர்ம தியானம், சுக்ல தியானம் என்ற நான்கில் கடைசி இரண்டு தியானங்களான தர்ம தியானத்தையும் சுக்ல தியானத்தையும் நன்மையின் பொருட்டுச் சாதகன் கைக் கொள்வது அவனை மிக உயர்ந்த நிலையில் வைக்கும். இந்த இரண்டு தியான நிலைகளுக்கு 'ஷாஆலம்பணம்', 'நிர் ஆலம்பணம்' என்ற இரண்டு தகுதிகளையும் அது குறிப்பிடுகிறது.

ஷா ஆலம்பணம் என்பது தியான நிலையில் அமர்வதற்கு ஏதாவது ஒரு பற்றுக்கோலைப் பற்றியிருப்பது. உதா

ரணமாக தியானம் கைகூடப் புலித்தோல், மான்தோல், தண்டம் போன்ற உபகரணங்களை, செளகரியங்களை வைத்துக்கொண்டு அமரும் நிலை. 'நிர் ஆலம்பணம்' என்பது எவ்வித உபகரணங்களும் இன்றி எந்த இடத்திலும் மனத்தை ஒருநிலைப்படுத்தி அமர்வது. நிர்ராலம்பணம் மூலம் தியானிக்கின்ற மனித உயிர் பரமாத்மா நிலை என்னும் இறைத் தன்மையை அடைகிறது.

'மனித உயிரானது சரணமடைவதில்லை; அது இறைத் தன்மைக்குத் தன்னை உயர்த்திக் கொள்கிறது' என்பதே ஜைனம் காட்டும் ஆன்ம நெறி.

பரமாத்மா வேறு இல்லை; ஜீவாத்மா வேறு இல்லை. வாழ்ந்து கொண்டிருக்கும் ஒவ்வோர் உயிரும் சுத்தி யடைந்து பரமாத்மா நிலையை அடைகிறது. ஒவ்வோர் உயிருக்கும் அந்த உயர்ந்த நிலையை அடைவதற்குத் தகுதி உண்டு என்பதை எடுத்துச் சொல்வதுதான் ஜைனத்தின் உன்னத நெறி.

மனித உயிர்கள் தமது கர்மாக்களின் பலன்களிலிருந்து விடுதலை பெறுவதையே அது வீடு பேறு என்கிறது. வீடு பேறு என்பது பயிற்சி பெற்று மனித உயிர் பிறப்பு இறப்பு அற்ற தன்மையை, அதாவது விடுதலையடைவதே அதன் விளக்கம்.

அதற்கு உடம்பினால் எழுகின்ற ஆசைகளை அடக்கி அற வாழ்க்கை கண்டு, அதன் மூலம்தான் பொருள் இன்பமும், பின் வீடு பேற்று நிலையும் அடைய முடியும் என்பதை நமக்குக் காட்டுகிறது.

ஜைன நெறிகளைத் தமிழ் மண்ணுக்கு அற்புதமான நாலடிச் செய்யுட்களால் உணர்த்தும் 'நாலடியார்' என்னும் நூலில் இந்த உண்மையை நாம் உணரலாம். அது அறத்துப்பால், பொருட்பால் என்று இரண்டு பால்களுக்குப் பிறகு இன்பத்துப்பாலைக் காட்டிலும், காமத்துப்

பாலாகிய அதன் அமைப்பில் இன்ப துன்பவியலையும் இன்ப இயலையும் பிரித்துக் கூறுகிறது. இல்லறம் வாழ்வானுக்கு உணர்த்தும் பொருட்டுப் பெண்ணுக்கும் கூட அது இலக்கணத்தையும் வரையறுக்கிறது. இதன் காமத்துப் பால் இல்வாழ்வான் என்னும் சாதகனுக்கு மட்டுமே பொருந்தும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

திருக்குறள் வகுத்துள்ள நெறிகளையும் இவ்வாறே முழுக்க முழுக்க ஜைன நெறிகளுக்கு ஏற்புடைய விளக்க நூலாகக் கொண்டு பொருள் கொள்ள முடியும்.

ஜைனம் என்கின்ற நெறியானது பொதுவில் மனிதனை துன்பங்களிலிருந்து விடுவிக்கும் வழியைக் காட்டுகிறது. அதுவும் சாதாரண விடுதலை அன்று. வீடு பேறு என்கின்ற ஜீவன் முக்திக்கே வழிகாட்டுகிறது.

இந்த உலகில் ஜைனம் உயர்ந்த அகிம்சைத் தத்து வத்தைப் போதிப்பதால் போரும், பூசல்களும், ரணகளமும், உயிர்ப்பலியும், மண்ணாசையும், பதவிச் சண்டைகளும், பொய்யும், பித்தலாட்டங்களும் நிறைந்து எங்கும் அச்சமும், அமைதியின்மையும் தலைவிரித்தாடும் கோரச் சூழ் நிலையில் மக்களுக்கு அபயம் அளிக்கும் உயர்ந்த பீடமாகத் திகழ்வதை எவரும் மறுக்க முடியாது.

இந்த உலகின் சமாதானத்தையும், சாந்தத்தையும், சத்திய நெறிகளையும் மீட்கும் கருவியாக இருப்பது அகிம்சை ஒன்றைத் தவிர வேறு எதந்த் தத்துவமும் இல்லை. அந்த அகிம்சையின் முழுப் பரிமாணத்தையும் ஏற்றுத் துலங்கும் ஜைன நெறிகள் இந்த உலகின் அறத்தையும் அமைதியையும், ஆன்மீக இன்பதையும் மீட்டு நம் எல்லோர்க்கும் நல்வாழ்வு தரும் என்று நம்புவோமாக:

5

# ஆன்மீக வழிகாட்டி : குருநானக்

நம் நாட்டில் தோன்றிய பல முக்கியமான சமயங்களுள் சீக்கிய சமயமும் ஒன்று. அது தோன்றி ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளாகின்றன.

சீக்கிய சமய ஸ்தாபகர் குருநானக் இறையருள் நிரம்பப் பெற்ற ஒரு சான்றோராவார். இறையருள் பெற்ற குரு மூலம் இறைவன் ஒருவன் இருக்கிறான் என்பதை அறிந்து அவனை அடைய முயல்வதே மனித வாழ்வின் குறிக்கோள் என்று சீக்கிய சமயம் கூறுகிறது. பக்தி மூலம் இறைவனை அறிவதும், அறிந்த பின், இறைவனை அடைவதற்குரிய கடமைகளை மனப்பூர்வமாக நிறைவேற்றுவதுமே சீக்கிய சமயத்தின் அடிப்படைக் குறிக்கோள்.

சீக்கிய சமயம் தோன்றிய போது, இந்தியாவில் நான்கு சமயங்கள் இருந்தன, இந்து சமயம், இஸ்லாமிய சமயம், பௌத்த சமயம், ஜைன சமயம் என்று. இஸ்லாமிய சமயம் இந்தியாவுக்கு வருவதற்கு முன்னர், மற்ற மூன்று சமயங்களைச் சார்ந்தவர்கள் ஒருவரோடு ஒருவர் இணங்கி வாழாமல் போரிட்டுக் கொண்டார்கள். அதனால் ஒற்றுமை குலைந்து, சாதிப் பூசல்களும் சமயப் பூசல்களும் மலிந்து போனதால், முசுலிம்கள் இந்திய நாட்டை வெற்றிகொண்டு ஆள்வது எளிதாயிற்று, இந்தியாவில் நிலவும் சூழ்நிலைகளைப் பயன்படுத்திக் கொண்டு முஸ்லிம்கள் மத உத்வேகத்துடன் நாட்டை ஆள முற்பட்டார்கள். இந்தச்சூழ்நிலையில் அவலநிலைகள்

வடஇந்தியாவில், குறிப்பாக, பஞ்சாப் மாகாணத்தில் நிலவியபோதுதான் குருநானக் தேவர் அங்குப் பிறந்தார்.

நாட்டில் கொடுமை, கோழைத்தனம், நாணயமின்மை, அறியாமை, அச்சம், கயமை ஆகிய கீழான, கடையான பண்புகள் மதம் என்னும் போர்வைக்குள் பதுங்கிக் கொண்டு, மக்களுக்குத் தீமைகள் செய்தன; அற உணர்வுகள் மங்கி மறைந்து, மற உணர்வுகள் அட்டகாசம் செய்தன. மக்கள் போலி மத வாழ்க்கை வாழ்ந்ததுடன், போலி வாக்குவாதங்களில் ஈடுபட்டு ஒருவரோடொருவர் பிணங்கி வாழலானார்கள். பொது நல உணர்வும், ஒழுக்கமும் மங்கி, சுயநல உணர்வு பெருகலானது.

இந்நிலையில் உலகை உய்விக்கும் உத்தமராக. இறையருள் பெற்று அவதரித்தார் மகான் குருநானக் அவர்கள். நாடும் மக்களும் சீரிய, புதிய முறையில் வாழ வழிகள் வகுத்தார். பக்தி இயக்கம் தமிழகத்தில் தோன்றி வளர்ந்த சமயம். அதனைப் பஞ்சாப் நாட்டில் முழுக்க முழுக்க முயன்று பரப்பினார் குருநானக். சீக்கிய சமயத்தில் முக்கிய குருமார்கள் பத்துப் பேர் உண்டு. அவர்களுள் முதல் குருவாகத் திகழ்ந்தவர் குருநானக் ஆவார்.

சீக்கிய சமயத்தின் வரலாறு வீரமும், தியாகமும் நிறைந்தது. பக்தியோடு, வீரமும், தியாகமும் சேர்ந்து கொண்டால், அந்த இடத்தில் அக்கிரமும் அநியாயமும் அச்சுறுத்தலும் பலிக்க மாட்டா என்பதற்குச் சீக்கிய சமயம் அழகிய ஒரு முன் மாதிரியாகத் திகழ்கிறது. சீக்கிய சமயம் பிற மதங்களை எதிர்ப்பதற்காகத் தோன்றவில்லை. பிறமதத்தினர் செய்யும் தவறுகளையும், அநீதிகளையும் சுட்டிக்காட்டிச் சமுதாயத்தைச் சீர்திருத்தத் தோன்றிய ஒரு சமய நெறியாகும் என்று சீக்கிய குருமார்கள் கூறியுள்ளார்கள்.

குருநானக் அவர்கள் பெருந்திரளான மக்களுக்கு மதத்தின் தூய்மையும், புத்தொளியும் கிட்டும் பொருட்டு, பேச்சு வழக்கில் அப்போது பஞ்சாபில் இருந்த மொழியில் பிரசாரம் செய்தார். அவரது தூய சொற்பொழிவுகளும், பக்திப் பாடல்களும் முறையே "குரு கிரந்த சாகிப்" என்னும் நூலாக 'ஜாப்ஜி சாகிப்' என்னும் பக்திப் பாடல் களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. 'குரு கிரந்த சாகிப்' என்பதற்குத் 'தலையாய மறை நூல்' என்று பொருள். சீக்கியக் குருமார்களில் ஐந்தாமவரான குரு அர்ஜுன்சிங் அவர்கள், "குரு கிரந்த சாகிப்"பை முதலில் தொகுத்தார். பிறகு பத்தாவது குருவும் முகலாய மன்னர் ஔரங்கசீப் காலத்தில், சீக்கிய சமயத்தினரை ஆயுதம் தாங்கியவர் களாகச் செய்து, கால்சாவை உருவாக்கிய குரு கோவிந்தசிங் அவர்கள் மறுமுறையாகத் தொகுத்துப் புத்தொளி தந்தார்கள்.

சீக்கிய சமயம் கடவுள் ஒருவர் உண்டு என்பதை உறுதியாக ஒப்புக் கொள்கிறது. கடவுள் அவதாரம் எடுப்பார் என்பதைக் குருநானக் அவர்கள் ஏற்றுக்கொள்ள வில்லை. உருவ வழிபாடு தேவையற்றது; அவனைப் பக்தி யோடு இசை கலந்த இனிய பாடல்களால் வழிபடுவதால் மனம் ஒருமுகப்பட்டு அமைதி பெறுகிறது என்று போதித் தார் குருநானக் அவர்கள். இத்தகைய மன அமைதியால் கருணை வெள்ளம் பெருகி இறையருள் கிட்டும் என்றார் குருநானக் தேவர். எனவே "குரு கிரந்த சாகிப்" என்னும் மறை நூலின் உயிர்நாடியாக இருப்பது 'ஜபுஜி' என்னும் தோத்திரப் பாக்கள் ஆகும். அந்தப் பாக்களின் உயிர் நாடியாக விளங்குவது 'மூல மந்திரம்' என்னும் சூத்திரம் ஆகும். 'ஜபுஜி' என்பது மூல மந்திரத்தின் விரிவே என்று சீக்கிய மதப் போதகர்களும் ஆசிரியர்கள் பலரும் குறிப் பிடுகிறார்கள்.

"ஏக் ஓங்கார சத்நாம், கர்த்தாபுருக், நிர்ப் பய, நிர்வைர, அகால்முரத், அஜனி, சையாம் குரு

> பிரசாத்'' என்பதே அம்மூல மந்திரம். இறைவன், புலப்பட்டும் புலப்படாமலும் இருப்பவன்; சத்தியம் என்னும் பெயர் தரித்தவன்; அவனே இப் பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தா! எனவே அவன் நிர்ப்பயமானவன். பகைமையில்லாதவன்; மரணம் அவனைப் பாதிப்பது இல்லை. எனவே பிறப்பு இறப்பு அற்றவன்; சுயமாகத் தோன்றியவன்; குருபிரசாத்—குருவைப் போல் அருளுடையவன்

என்று மூல மந்திரத்தின் மூலம் இறைவனை விளக்குகிறார் மகான் குருநானக் அவர்கள்.

குருநானக் சுல்தான்பூரில் வசித்தபோது, வழக்கம் போல் 'பீன்' ஆற்றில் குளிக்கச் சென்றார். அப்போது அவருக்கு வயது இருபத்தேழு. ஆற்றில் இறங்கி நீராடும் சமயம் திடும் என அவர் மறைந்து போனார். மூன்று தினங்கள் வரை அவர் திரும்பவில்லை. அச்சமயம் அவருக்குச் சிறப்பான ஒரு தரிசனம் கிடைத்தது. அவர் கடவுளிடம் போய்ச் சேர்ந்தார். கடவுள் அது சமயம் குருநானக்கிடம் ஒரு கோப்பை அமிர்தத்தைக் கொடுத்துப் பருகச் செய்தார். குருப் பொறுப்பில் இருக்கும் நானக் தேவரவர்கள் தமது பணியில் முழு வெற்றி பெறவேண்டும் என்று வாழ்த்தித் தமது தெய்வீகச் சலுகையை இறைவன் அருளினார். பிறகு திருநாமத்தைக் கூறும்படியும், சீடர்களுக்குக் கற்பிக்கும்படியும், அதன் மூலம் மனித குலத்துக்குச் 'சத்தியம்' என்னும் உண்மை மதத்தை உபதேசிக்கும்படியும் குருநானக்கிடம் அருள்பாலித்தார் இறைவனார். இந்த இறையனுபவத்தின் விளைவாகவே சீக்கிய சமயத்தின் அடிப்படையாக விளங்கும் மூல மந்திரத்தை இயற்றினார் மகான் குருநானக் அவர்கள்.

மனிதன் பிழையாக வாழ்வதால்தான் பிணிகளுக்கு ஆளாகிறான். உடலை வாட்டும் நோய்களைக் கண்டு

பிடிப்பதும் அவற்றுக்கு மருந்துகள் கொடுப்பதும் எளிது. மனித சமுதாயத்தில் பசிப்பிணியையும், உடற்பிணியையும் போக்கச் சேவை செய்வதே தலையாய அறங்கள். பிறர் பசித்திருக்கப் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பவன் ஆன்மிக நெறியில் செல்பவன் ஆகான். பிறர் நோயால் வருந்தும்போது, உதவி செய்யாது ஒதுங்கிச் செல்வானும் அத்தகையோனே! இந்த இரண்டையும் அறிந்து,

**'' பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை''**

— திருக்குறள்; கொல்லாமை: 2

என்னும் வள்ளுவப் பெருமானின் வாய்மொழிக்கொப்பப் பகுத்து உண்பதன் மூலம் பசிப்பிணியை அகற்றுதலும் பல்லுயிர் ஓம்புதல் மூலம் உடற்பிணியை அகற்றுதலும் அவசியம் என்றும், அப்போதுதான் ஒருவன் ஆன்மீகத் துறையில் முன்னேற முடியும் என்றும் கூறுகிறார் மகான் குருநானக் அவர்கள்.

துறவறம் பூணாமல், இல்லற வாழ்வில் இருந்து கொண்டே மனிதன் தன் கடமைகளை மனத்தால் பொய்யாது நிறைவேற்றினால் உலகம் உள்ளளவும் நிலை பெற்றிருக்க முடியும் என்பதைத் தன் வாழ்க்கையின் மூலம் உலகுக்கு உணர்த்தியவர் குருநானக் அவர்கள். அவர் துறவறம் பூணவில்லை. இல்லறப் பொறுப்பை விடுத்து வாழ்ந்தாலும், அவ்வப்போது சமயப் பணிகளுடன் தம் மக்களையும் கண்காணித்து வந்ததுடன் அவர்கள் அனைவரையும் சீக்கியச் சமுதாய வளர்ச்சிக்கும், குருத் துவாரா என்று போற்றப்படும் மத வழிபாட்டு ஸ்தலங்களை அமைக்கவும் தூண்டினார். நான்கு முறை சமயப் பிரசார யாத்திரைகளை மேற்கொண்டபின், தமது அறுபத்து மூன்றாம் வயதில் கர்த்தாப்பூரில் நிலைத்துத் தங்கினார் குருநானக். பிரயாண காலத்தில் தாம் அணிந்திருந்த துறவற உடுப்புக்களைக் களைந்து போட்டுவிட்டு, இல்லறத்

தாருக்குரிய உடுப்புக்களை குருநானக் தேவர் அணிந்து கொண்டார்.

இல்லறத்திலிருந்துகொண்டு ஒருவன் துறவற உணர்வோடு வாழ்வது சிறந்த வாழ்வாகும். மனப்பக்குவம் அடையாது, இல்லறத்தைத் துறந்து போலித்துறவிகளாய், பகட்டிலும் படாடோபத்திலும் வாழ்வது சிறந்து வாழ்வாக முடியாது என்று போதனை செய்தார் குருநானக் அவர்கள்.

இவ்வாறாக, குருநானக் தேவரும், மற்ற சீக்கிய குருமார்களும் 'குரு கிரந்த சாகிப்' எனப்படும் மறை நூலும் சீக்கிய சமுதாயத்திற்கு மட்டுமோ, பஞ்சாபுக்கு மட்டுமோ அல்லாமல் உலகில் மனித சமுதாயம் முழுவதுக்கும் உரியவர்களாக, வீரமும் தியாகமும் செறிந்த நல்லோர்களாக வாழ்ந்து, ஆன்மீகத்துக்கு வழிகாட்டியுள்ளதானது, நாம் வாழுமளவும் அறிந்து உணர்ந்து போற்ற வேண்டுவனவாகும்.

# 6

# குருநானக் சிந்தனைகள்

## I

## இறைமையை அடையும் வழி

சீக்கிய சமுதாயத்திற்கு அடிப்படையான அறநெறிகளை முறையாகப் பக்திப் பாடல்களின் மூலமும், தன் எளிய மேலான வாழ்க்கையின் மூலமும் உலகறியச் செய்தவர் அச் சமுதாயத்தின் முதல் சத்குருவான திருவாளர் குருநானக் அவர்கள்.

பெரியார் குருநானக் அவர்கள் தமது ஏழு வயதுச் சிறு பிராயத்திலேயே இறைவனின் படைப்பின் மூல ஒலியைப் பற்றிப் பள்ளி ஆசிரியரிடம் விளக்க முற்பட்டார்:

''கடவுள் ஒருவரே; அவரே எல்லா இயற்கைத் தோற்றங்களுக்கும் காரணமானவர். காலத்தால் அளவிட முடியாதவர்'' என்கின்றார் குருநானக்.

க்ஷத்திரிய குடும்பத்தைச் சார்ந்தவராதலால் பெற்றோர்கள் இளைஞர் நானக்கிற்குப் பூணூல் அணிவிக்க ஓர் விழா ஏற்பாடு செய்து அணிவிக்க முற்பட்ட போது, திருவாளர் நானக் அதைத் தடுத்து, அப்போது தான் உணர்ந்த உண்மையை ஓர் பாடலால் விவரிக்கலானார்.

''சாதாரண பருத்தி நூலை அணியாதீர்கள். அதனால் பயனில்லை. இரக்கம் என்னும் பருத்தியைக்

கொண்டு, மனத்திருப்தி என்னும் நூலைத் தயாரியுங்கள். அதில் உண்மையெனும் முடிச்சுக்களைப் போட்டுப் பூணூலாக அணியுங்கள். உண்மையோடு வாழுங்கள். நல்வாழ்வு பெறுவீர்கள்'' என்னும் பொருள்படப் பாடிப் பெற்றோரையும் மற்றோரையும் வியப்பிலாழ்த்தினார் குருநானக் அவர்கள்.

தம் செல்வன் வளர்ந்து பெரிய செல்வனாக வேண்டும் என்று விரும்பினார் தந்தை மேதா காலுராய்.

ஆனால் குருநானக் அவர்கள் நினைவு கொண்ட நாள் முதலாக உலக பந்தங்களில் பற்று அற்றவராய், நிலையான இறையருளை வேண்டித் தியானம் செய்வதிலேயே நாட்டம் கொண்டார். அவ்வப்போது தனிமையில் இருந்து ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபடலானார்.

இளைஞரான நானக்கை, அவர்தம் தந்தை மேதா காலுராய் விவசாயம் செய்ய வேண்டுகிறார். அதற்கு திரு. நானக் அவர்கள்:

''என் உடலே வயல். உள்ளொளியே உழவன். நான் அடக்கம் என்னும் நீர் பாய்ச்சி, தெய்வீகம் என்னும் விதை விதைக்கிறேன். அன்பு என்னும் முளை கிளம்புகிறது. அதை உண்மையென்னும் இருக்கையில் இருந்து காத்து வருகிறேன். மகிழ்ச்சியின் சாரமான பெருமகிழ்ச்சியை ஊதியமாகப் பெறுகிறேன். அந்தப் பெருமகிழ்ச்சியே என் ஆன்மாவின் செழிப்புக்கு ஆதாரமாக அமைகிறது'' என்று இளைஞர் நானக் பதிலிறுத்தார்.

இவ்வாறாக வளர்ந்த இளைஞர் நானக் அவர்கள் இல்லற வாழ்க்கையை விடுத்து, நிலையான பரம்பொருளை அடைவதில் ஈடுபாடு கெண்டவராய், தான் உட்பட்ட பலப்பல சோதனைகளுக்கும், சொல்லொணா வேதனைகட்கும் மனம் சோர்ந்தாரில்லை. தன் விடா முயற்சியாலும் இளம் வயது தொட்டே பழக்கிக்கொண்ட நிஷ்டை என்னும் ஆழ்ந்த தியானத்தாலும் பரமனின் அருளால்

உள்ளொளி பெற்றார்; துறவறம் பூண்டார். தன் நாற்பதாவது வயதில் பொது மக்களால் 'சத்குரு நானக்' என்று போற்றப்படலானார்.

இந்துக்கள் மட்டுமின்றி முசுலிம்களும் சத்குருநானக் அவர்களின் நற்போதனைகளை மதிக்கலானார்கள். எப்படி உண்மையான மனிதப் பிறவியாக வாழவேண்டும் என்பதைக் குடும்பத்தில் இருந்து வாழ்பவர்களுக்கு எடுத்துச் சொல்லி, இல்லறத்தில் வாழும்போதே இறைவனை அறிவது எங்ஙனம்? என்பதை உலகுக்குணர்த்த மன்னர்கள், பண்டிதர்கள், முல்லாக்கள் எனப்படும் முசுலிம் குருமார்கள், முதலானோருடன் அளவளாவினார். குரு நானக் அவர்களின் இறைமையுணர்வும் நேரிய சிந்தனைகளும் பலரையும் ஈர்க்க எண்ணற்ற சீடர்கள் அவர் வழியில் நடக்கலானார்கள். இப்புதிய சமுதாயம் சீக்கிய மரபாக உருவானது.

இந்திய நாடு முழுமையும் அவர் பயணம் செய்து தம் கொள்கைகளைப் போதித்ததோடு மட்டுமின்றி மெக்கா, மதீனா, பாரசீகம், காபூல் முதலிய வெளிநாடுகளிலும் சென்று உபதேசம் செய்தவர் சத்குருநானக் அவர்கள்.

சத்குரு நானக் அவர்கள் கூறுவார் :

"இறைவா! நீ ஒருவனே. உண்மை என்பதே உன் பெயர். முதலும் நீயே, முடிவும் நீயே. உனக்கு நிகர் நீயே. நீ அழிவற்றவன். பிறப்பு இறப்பு இல்லாதவன்.

"இறைவா! நீ கருணைக் கடல். ஒற்றுமையின் ஒளி விளக்கும் நீதான். கோயில்களானாலும், மசூதிகளானாலும் அதில் பொதுவான நீ ஒருவனே குடிகொண்டு எழுந்தருளுவாய். உன் பார்வையில் மனித உயிர்கள் அனைத்தும் சமமே. அவர்களின் பிறப்பு இறப்பு ஆகியவை ஏற்படும் விதமும் மாறுபாடு இல்லாததே.

''இறைவா! உன் மீது அசையாத நம்பிக்கையும், 'ஓங்கார சத்நாம்' என்னும் உன் திரு நாமத்தை இடைவிடாமல் நினைவு கூர்பவரும், அல்லலுறுவோரின் துயர் துடைக்கும் தூய பணியில் ஈடுபடுபவரும் தவறாது உன்னை வந்தடைவர். இவையே சத்குருநானக்கின் தலையாய போதனைகள்.

இதனையே அமரகவி பாரதியார் :

'' யாரும் பணிந்திடும் தெய்வம்—பொருள்
யாவினும் நின்றிடும் தெய்வம்
பாருக்குள்ளே தெய்வம் ஒன்று—இதில்
பற்பல சண்டைகள் வேண்டாம் ''

என்கிறார்.

'' அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின் ''

—திருக்குறள்; இனியவை கூறல் : 6

என்கின்றார் பொய்யா மொழிப் புலவர் திருவள்ளுவர்.

''உண்மையும் மன நிறைவும் உள்ளத்தில் இரக்கமும் உடையவரே சீக்கியர்.

''ஆசைகளுக்கும் ஐம்புலன்களுக்கும் அடிமையாகாமல் எல்லோருக்கும் நன்மை செய்பவரே சீக்கியர். ஆண்டவனைச் சரணடைந்து, தம்மை வெறுப்பவரையும் நேசிப்பவரே உண்மையான சீக்கியர். இதுவே இறைமையை அடையும் வழி'' என்கின்றார் குருநானக்.

இவ்வாறாக, குருநானக் அவர்களின் போதனைகள் 'மூல மந்திரம்' என்றும், அவர் பாடிய பக்திப் பாடல்கள் 'ஜாப்ஜி சாஹேப்' என்றும், 'கிரந்த சாஹேப்' என்றும் பரிசுத்த புனித நூல்களாகச் சீக்கிய மரபினரால் வணங்கப் பெறுகின்றன. இறைமையை அடையும் வழியாக இவை என்றும் துணை நிற்கும்.

# 11

## தேச ஒற்றுமை

நம் இந்திய நாட்டிலே தோன்றிய வீரர்கள், தேச பக்தர்கள், அறிஞர்கள், மகான்கள், விஞ்ஞான மேதைகள் எத்தனை எத்தனையோ பேர்கள் உண்டு. பாரத நாடு பழமையானது; நீண்ட நெடுங்காலமாக உலகத்திற்குச் செந்நெறி காட்டி வருவது. ஆன்மீக வலிமையால் காலத்தை வென்று வாழ்வது.

இவ்வரிசையில் மெய்ஞ்ஞானத்தால் மனித சமூகத் திற்குத் தொண்டு செய்த பல மகான்களில் சத்குருநானக் அவர்களின் சீரிய பணியும் மிக முக்கியத்துவம் வாய்ந்த தாகும்.

குருநானக் அவர்களின் சிந்தனைகளும் போதனைகளும்•

**'' மெய்ம்மை கொண்ட நூலையே அன்போடு**
**வேதமென்று போற்றுவாய்......வா வா வா ''**

என்னும் அமரகவி பாரதியின் கவிதை அடிகளை நினை வுறுத்துகின்றன.

**'' ஒற்றுமைக்குள் உய்யவே நாடெல்லாம்**
**ஒரு பெருஞ்செயல் செய்வாய்...வா வா வா...''**

என்னும் அக் கவிதைத் தொடரின் கடைசி அடிகளை உணர்த்துவனவாகும்.

சீக்கிய சமுதாயத்தை உருவாக்கிய பத்துப் பேரரு ளாளர்களில் முதலாமவர் குருநானக் அவர்கள். சீக்கிய வரலாறு குருநானக் அவர்களின் காலத்திலிருந்து தொடங்குகிறது எனலாம். அன்று தொடங்கி ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளில் சீக்கிய சமூகத்தினர் இந்தியத் துணைக் கண்டத்தில் இயல்புடன் கூடிய தனிச்சிறப்பு வாய்ந்த வடிவத்தைப் பெற்றனர். இதற்குத் தம் சீரிய கொள்கைகளால் வித்திட்டார் குருநானக் அவர்கள்.

குருநானக் அவர்கள் கூறிய கருத்துக்கள் ஆழமான தத்துவச் செறிவுடன் கூடியவை. அவைகளில் மனித சமுதாயத்தின் ஒற்றுமையைப் போதிக்கும் அடிப்படை உண்மைகள் முக்கியத்துவம் பெறுகின்றன. கேட்போரையும் சிந்திக்கத் தூண்டுவன. குருநானக் கூறுவார்·

"என் உடல் ஒரு கடை. அதில் தெய்வீகம் என்னு சரக்கைச் சேர்த்து வைக்கிறேன். அந்தக் கடையிலிருந்து உண்மை என்னும் செல்வத்தைச் சம்பாதிக்கிறேன்."

இந்தக் கருத்து ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு முதுகெலும்பு ஆகிய வாணிகத்தையும், சீரிய மனித வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பார்க்கத் தூண்டும்.

உடலாகிய ஒரு நாட்டில் உள்ளமாகிய ஒரு கடை.

மனித உயிர் குடியிருக்க ஓர் உடல்:

மனித இனம் குடியிருக்க ஒரு நாடு:

அதில் சிந்திக்க ஓர் உள்ளம்:

உழைப்பதற்கு, கருமம் செய்வதற்கு ஒரு கடை:

நல்லுள்ளத்தின் நற்சிந்தனையால் உருவாவது நிலையான தெய்வீகம்.

நல்ல வாணிகம் செய்ய நுகர்வோர் போற்றும் விலை பொருள்களைக் கொண்டது அக்கடை.

உள்ளத்துத் தெய்வீக உணர்வினால் கிடைப்பது உண்மையெனும் கேடில் விழுச் செல்வம்;

அக்கடையில் மனித இனம் செய்யும் உழைப்பு, கருமத்தினால் கிடைப்பது லாபம்.

உள்ளத்து உழைப்பால் பெறுவது உண்மை எனும் லாபம்.

ஒரு கடையில் நல்ல விலைப்பொருட்களை விற்று அந்த உழைப்பில் வருவது பொருள் என நாம் அன்றாடம் போற்றும் லாபம்.

இதனையே பொய்யாமொழிப் புலவர் வள்ளுவர் கூறுவார்:

“ அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு.”

—திருக்குறள்; பொருள் செயல்வகை: 7

என்று. என்னே! குருநானக் அவர்களின் சீரிய சிந்தனை! எத்துணை ஒற்றுமை!!

“ அருளிலார்க்கு அவ்வுலகமில்லை பொருளிலார்க்கு
இவ்வுலக மில்லாகி யாங்கு.”

—திருக்குறள்: அருளுடைமை: 7

என்னும் சீரிய திருக்குறளும் ஈண்டு நினைக்கற்பாலது. மற்றோரிடத்தில் குருநானக் அவர்கள் கூறுவார்:

“இறைவன் ஒருவனே என் தலைவன். அவனைச் சரணடைந்து பணி செய்வதே என் தொழில். அவனுடைய அன்பான பார்வையே நான் பெறும் பேரின்பம். அதுவே நான் பெறும் ஊதியமுமாகும்.”

இந்தக் கருத்து ஒரு நாட்டின் ஆட்சியாளருக்குக் கட்டுப் பட்டு உண்மையாக உழைக்கும் நல்ல அரசாங்க உத்தி யோகஸ்தனுடன் ஒப்பிட்டுப் பார்க்கத் தூண்டும்.

மனிதஉயிர் சென்றபின் அது சரணடையும் (மோட்சம்) இடத்தின் ஆட்சியாளர் இறைவன்.

மனித இனம் வாழும் ஒரு நாட்டின் ஆட்சியாளர் (மன்னன் (அ) ஜனாதிபதி)

இறைபணியும் நேர்மையான அரசுப்பணியும் ஒன்றே.

இறைபணியால் இறையருள் கிட்ட அவன் அன்புப் பார்வையால் மனித உயிர் பேரின்பம் பெறும்.

உண்மையான அரசுப் பணியில் ஆட்சியாளருக்குத் திருப்தி ஏற்படும்போது, அந்த உத்தியோகஸ்தனுக்கு அரசால் கிடைக்கும் நல்விருது, அதனால் அவன் அடைவது இன்பம்.

இறையருளால் மனித உயிருக்குக் கிடைத்த பேரின்பம் ஒரு மனிதன் பெறும் நிலையான ஊதியம்.

ஆட்சியாளர் அளித்த நல்விருதினால் மன்னிய புகழை இப்பூவுலகில் விட்டுச் செல்லும் ஓர் ஏழை, ஆனால் உண்மை யான உத்தியோகஸ்தன்.

இக்காலை வேளையில் சொல்லுகின்ற—கேட்கின்ற நாம் எல்லோரும் உணர்ந்து உய்க்கும் நல் இன்பம் இது. குருநானக்கின் பரந்த நோக்கு என்றும் இவ்வுலகில் நிலை பெறுவதாக. வளர்க நம் தேசிய ஒற்றுமை.

## III

## கடமை, கண்ணியம், கட்டுப்பாடு

நம்மைப் படைத்தவன் இறைவன். அவன் எங்கும் நிறைந்திருக்கிறான்; இல்லாத இடமில்லை. நீரும் அவனே, நெருப்பும் அவனே, காற்றும் அவனே, கதிரும் அவனே, அவன் அணுவுக்குள் அணுவாய் இருக்கின்றான்; மலரில் மணமாய், கனியில் சுவையாய்க் கலந்து நிற்கின்றான். இறைவனை, இறைமையை அடைவதே நம் மானிடப் பிறவியின் உயர் குறிக்கோள் என்கின்றார் மகான் சத்குருநானக் அவர்கள்.

இப்பிறவியில் மானிடராய்ப் பிறந்த நமது கடமை என்ன?

ஓரிடத்தில் குருநானக் அவர்கள் இளமையில் மாடு மேய்த்துக் கொண்டே, தன்னை மறந்த நிலையில் மரத் தடியில் அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிவிட்டார். மேய்ப்பார் இல்லாததால் மாடுகள் அருகில் இருந்தவயலில் இறங்கிப் பயிர்களை அழித்தன; வயிறு முட்டப் பயிர் களைத் தின்றன. வயலின் சொந்தக்காரன் ஆத்திரப் படுகிறான்.

அப்போது தெய்வீக அருளாளர் இளைஞர் நானக் பதில் கூறுவார் :

"அன்பிற்குரியவனே! ஆத்திரப்படவேண்டாம். இந்த மாடுகள் வயலில் தின்றதால் உனக்கு எந்தவித நஷ்டமும் ஏற்படாது. வளம் பெருகப்போகிறது. இதுவரை விளையாத அளவுக்குப் பயிர் விளையப் போகிறது" என்று. நிலத்தின் சொந்தக்காரன் நம்ப மறுக்கிறான். ஊர்ப் பெரியவரிடம் முறையிடுகிறான். எல்லோரும் வயலுக்குச் சென்று பார்க்கிறார்கள்.

என்ன ஆச்சரியம்! மாடுகள் வயலில் இறங்கிப் பயிரை அழித்ததற்கான அடையாளங்களே இல்லை. உழவனே வியப்பால் வாயடைத்து நின்றான்.

அன்பர்களே! ஓர் உயர்ந்த கடமையென்னும் தத்துவம் இங்கு நாம் காண வேண்டுவது.

மாடுகள் பேசும் திறனற்றவை. பசிக்குத்தான் மேய்ந்துள்ளன. ஓர் நல்ல போதனையை இறைவனால் உருவாக்கப்பட்ட நல்லறிவுக்குக் கொடுக்கிறார் குருநானக் அவர்கள். இல்லாத ஒருவன் இருப்பவனை அணுகும்போது உதவ முற்பட வேண்டும் என்பது.

**" ஒப்புரவி னால்வரும் கேடுஎனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்கது உடைத்து "**

—திருக்குறள்; ஒப்புரவறிதல்: 10

என்கிறார் திருவள்ளுவர்.

**" வித்தும் இடல் வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். "**

—திருக்குறள்: விருந்தோம்பல் : 5

என்று மற்றும் ஒரு குறளைப் படிக்கிறோம்.

வந்த விருந்தினரை உபசரித்து மீதியுள்ள உணவை உண்பவனின் நிலத்தில் விதையும் விதைக்க வேண்டுமா? வேண்டாம், தானே விளையும் என்று பொருள் படுகிறது.

உண்மையென்னவெனில் உதவுவதுதான் வாழ்வின் கடமை. இதனையே குருநானக் அவர்கள் தம்வாழ்வின் முதற் கடமையாக அனுசரிக்கிறார். பள்ளிக்குச் சென்று பட்டப் படிப்பு அவர் பெற்றாரில்லை. இறையருளால் நல்லறிவு பெற்றார். உலகுக்கு ஓர் ஒப்பற்ற வழிகாட்டியாக இன்றும் வாழ்கிறார்.

வாலிப வயதில் திருமணம் செய்து கொண்டார். இல்லறமல்லது நல்லறமன்று என்பதை உணர்ந்தார். இரண்டு ஆண் குழந்தைகள் பெற்றார். கண்ணியமாக இல்லற வாழ்வை வாழ்ந்து காட்டினார். பொருளீட்டத் தம் தமக்கை பீபீ நானகியின் துணையுடன் மைத்துனர் திவான் ஜெய்ராமின் செல்வாக்கில் தானியக் களஞ்சியக் காப்பாளர் பதவியில் சேர்ந்தார் குருநானக் அவர்கள். கண்டவர் வியக்கும் வண்ணம் தம் பணியை ஒழுங்காகச் செய்து வந்தார்.

பஞ்சம் ஏற்பட்டதால் குருநானக் அவர்கள் பணி செய்து வந்த தானியக் களஞ்சியத்தின் தானியங்களை எல்லோருக்கும் மறுக்காமல் விலைக்குக் கொடுக்கும்படி சுல்தான்பூர் கவர்னர் உத்தரவிடுகிறார்.

நாட்கள் கழிந்தன. தானியம் கேட்போருக்குத் தொடர்ந்து விற்கப்பட்டது. தானியங்களை விற்றதற்கோ அதற்குக் கிடைத்த பொருளுக்கோ கணக்கு வைக்கவில்லை குருநானக் அவர்கள்.

அதிகாரிகள் சோதனையிட்டபோது களஞ்சியத்தில் தானியமும் குறையவில்லை, பெட்டி நிறையப் பணமும் நிரம்பி வழிந்தது. இவ்வாறு கண்ணியத்தோடு கூடிய தம்மிடம் நிலைபெற்றிருந்த இறையருளையும் குருநானக் அவர்கள் உலகுக்கு உணர்த்தினார். இங்கு அமரகவி சுப்பிரமணிய பாரதியின் பாடலை நினைவு கூர்வோம்.

**" அறிவை வளர்த்திட வேண்டும்—மக்கள்**
**அத்தனைப் பேருக்கும் ஒன்றாய்**
**சிறியரை மேம்படச் செய்தால்—பின்பு**
**தெய்வம் எல்லோரையும் வாழ்த்தும் "**

என்பதாகும்.

மனித இனம் அமைதியுடனும், அன்புடனும் இணைந்து வாழக் கட்டுப்பாடு அவசியம். அதனை உணர்ந்த குருநானக் அவர்கள், தம்மைப் பின்பற்றிய மக்களைச் சீக்கியர்கள் என்று கூறி ஒரு சமுதாயக் கட்டுக்கோப்பை அமைத்து, அச்சீரிய சமுதாயத்திற்குத் தலைமை தாங்கி வழி நடத்திச் செல்லத் தமக்குப்பின் வருபவர் இன்னார் என்று ஒருவரை முறைப்படி நியமித்துக் குரு பரம்பரையை உருவாக்கினார். ஆம்! நல்லறிவையும் கட்டுப்பாட்டையும் வளர்த்துப் பேண ஓர் ஆசான் வேண்டும். குரு இல்லையேல் ஞானமில்லை என்பது மூதுரை.

இவ்வாறாக மனித வாழ்க்கையை முறையாகக் கடைப் பிடித்து வாழ்ந்து காட்டிய மகான் குருநானக்கின் திருநாமம் என்றும் நிலை பெற்றிருக்கும்.

# 7

# குருநானக்கின் வாழ்வு நெறி

பாரதத்தின் பஞ்சாப் பகுதி பலவகைகளிலும் தனிச் சிறப்பு வாய்ந்தது. வேத மந்திரங்கள் முதன் முதலில் இங்குதான் ஒலித்தன, உருவாயின என்பர். சரித்திரப் புகழ் பெற்ற தக்ஷசீலா கல்வி நிலையம் பஞ்சாப் பிரதேசத்தைச் சேர்ந்தது. சமஸ்கிருத மொழிக்கு இலக்கணம் வகுத்த அறிஞர் பாணினி தோன்றி வளர்ந்ததும் பஞ்சாப் பகுதியில்தான்.

இப்புனித மண்ணில் ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் வீரத்திற்கும் தியாகத்திற்கும் பக்தி நெறியின் மூலம் உயிரூட்டம் தந்து பெருமை சேர்க்க அவதரித்தார் மகான் குருநானக் தேவர் அவர்கள். இறையருளைச் சிறுபிராயத்திலிருந்தே பெற்றவர் குருநானக் தேவர். அதன் அபரிமிதமான சக்தியால் ஞானோதயம் பெற்றார். மெய்ஞானமென்னும் அஞ்சாமையைத் தன் அகக்கண்களில் இறையருள் இட்டுள்ளது என்பதை உணரலானார் நானக் தேவர். அவர் வாழும் இந்து சமூகம் பல வருணங்களாகவும், இனங்களாகவும் பிரிந்து வாழ்வதால் மிகவும் பலவீன முற்றுள்ளதை உணர்ந்தார்.

எல்லா மனிதர்களையும் சமமாகக் கருதி, பல படிமங்களை வழிபட்டுக் கொண்டிருந்த அராபியரை உருவ வழிபாட்டிலிருந்து விலக்கி, உருவற்ற ஒரே ஆண்டவனான் அல்லாவின் தொழுகையின்பால் ஈடுபடுத்திய இசுலாமிய மதக் கோட்பாடுகள் சக்தி வாய்ந்த முசல்மான் சமூகத்தை உருவாக்கியதையும், பாரதநாட்டு மண்ணில்

அவர்கள் வெற்றி கொண்டு பேரரசை நிறுவி ஆண்டு வந்ததையும் அறிந்த மகான் நானக் தேவர் அவர்கள், இந்தியப் பண்பாட்டையும் இந்து மதக் கோட்பாடு களையும் வளர்க்க எண்ணம் கொண்டார். குரு பரம்பரையை உருவாக்கினார். இறைவன் திருநாமம் குருவிடமிருந்து கிட்டுகிறது. சத்குருவின் அருளின்றிப் பரம் பொருளைக்காண எக்காலத்திலும் முடிந்ததில்லை; பரம் பொருளே 'சத்குரு' எனும் திருநாமத்தில் உறைகிறான்; இதையும் சத்குருவே காட்டித் தந்திருக்கிறார். சத்குருவின் உறவால் மாயாமோகத்தைப் போக்கிக் கொண்டவர் சாசுவதமான முக்தியைப் பெறுகிறார். உண்மையான சத்குரு பக்தனை இறைவன் திருவடிகளுக்கு அழைத்துச் செல்கிறார்; இறைவனோடு சேர்த்து வைக்கிறார்;

எனவே குருவிற்குத் தொண்டு செய்யும் சீடனே சீக்கியனாகிறான்.

இவ்வாறு தாம் கண்ட உண்மையைப் பரப்புவதற் காகத் தம் கொள்கையைப் பிரச்சாரம் செய்யத் தொடங்கியதும், நானக் தேவர் அவர்கள், தம் கொள்கை —கோட்பாடுகளில் திடநம்பிக்கை கொண்ட இருவரைச் சீடர்களாக்கிக் கொண்டார். ஒருவர் 'பாலா' எனும் இந்து; மற்றவர் மர்தானா எனும் முசல்மான். இருவரையும் 'பாஈ' (சகோதரர்) என்று அழைப்பர்.

அன்றிலிருந்து நானக் தேவர்—சத்குரு நானக் தேவர் என்று அழைக்கப்பட்டார். அவர் தோற்றுவித்த கொள்கை கோட்பாடு கொண்ட வாழ்வு நெறியே சீக்கிய மதம் என்று பிற்காலத்தில் சிறப்புப் பெற்றது. இதனைக் கடைப்பிடிப்பவர் சீக்கியர்கள் என்று அழைக்கப்பட லானார்கள். எனவே சீக்கியப் பரம்பரைக்கு வித்திட்டு, முதல் குருவானார்—சத்குரு நானக் அவர்கள்.

குருநானக் சுல்தான்பூரிலிருந்து தம் முதல் தர்ம யாத்திரையைத் தொடங்கினார். மெய்யறிவுத் தத்து

வத்தை உணர்ந்த பின் குருநானக் அவர்கள் அருளிய முதல் திருவாக்கு:

''இந்து என்றோ முசல்மான் என்றோ யாரும் மனித சமூகத்தைப் பிரித்து நோக்கலாகாது. எந்தவொரு தார்மீக மதத்தைச் சார்ந்தவனாக இருந்தாலும், மனிதன் சமமானவன். அவனவன் தன் செயல் திறத்தால்தான் பரமாத்மாவின் அருகிலோ, தொலைவிலோ இடம் பெறுகிறான்'' என்று கூறுகிறார் சத்குரு நானக் அவர்கள்.

இதனையே தெய்வப்புலவர் திருவள்ளுவர்,

**'' பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்''**

—திருக்குறள்: பெருமை; 2

என்னும் சீரிய குறளின் மூலம் விளக்குவார்.

குருநானக் அவர்கள் மனிதர்களின் தராதரப் பாகுபாட்டை நாடு, இனம், நிறம், சாதி பேதங்களின் அடிப்படையில் வரையறுக்கவில்லை. இந்த முறையை முழுமையாக மறுக்கவும் செய்தார். அவரது வாழ்வு நெறிக் கருத்துப்படி, மனிதர் இருவகைப்படுவார்கள், குருமுகர்—ஒரு வகை; மனமுகர்—மற்றொருவகை.

'குருமுகர்' என்பவர் பகவானிடம் ஈடுபாடு கொண்டு, வாய்மை—தொண்டு எனும் குறிக்கோள்களுடன் வாழ்பவர்கள்; யாவருமே கடவுளின் புதல்வர் என்கிற நம்பிக்கையில் மனிதருடன் சமநோக்குடன் பழகிவரும் பண்பாளர்கள். பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் நல்லோர்கள்.

'மனமுகர்' என்பவர்கள் எப்போதும் சுயநல வேட்கையிலேயே ஈடுபட்டு, உலகியல் சுகசௌக்கியங்களுக்காகப் பொய், வஞ்சகம், தீங்கு, புன்மை யாவும் செய்யத் தயங்காதவர்கள். இத்தகையவர்கள் எந்தவொரு மதத்தைச் சார்ந்தவர்களாக இருந்த போதிலும் அவர்

களுக்கு இகத்திலும் சாந்தி கிட்டாது; பரத்திலும் நற்கதி கிடைக்காது என்று விளக்குகிறார் சத்குரு நானக் தேவர் அவர்கள்.

அவர் வாழ்ந்த காலத்தில் பொதுவாக இல்லற வாழ்வில் இருப்பவர் ஒருக்காலும் ஆன்மீக வளர்ச்சி பெற முடியாது என்ற கருத்து சமுதாயத்தில் வேரூன்றி இருந்தது. நிலைமையை நன்கு ஆராய்ந்து அறிந்தார் மகான் நானக் தேவர். துறவு வழியை மறுத்தார் அவர். இல்லறத்தில் இருந்தவாறே உண்மையான, புனிதமான சிந்தனை—செயல்களைப் புரிந்து மனிதன் ஆன்மீக உயர்வைப் பெறலாம் என்று போதித்தார் சத்குருநானக் அவர்கள்.

நம் பொய்யாமொழிப் புலவரும்

**" அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்**
**போய்ப் பெறுவ தெவன் "**

—திருக்குறள்; இல்வாழ்க்கை:5

என்றே வினவுகிறார். இல்லற மல்லது நல்லற மன்று—என்று நம் தமிழ் மூதாட்டியும் கூறுவார்.

பகவான் ஸ்ரீ கிருஷ்ணரும், பகவத் கீதையில் கர்ம யோகத்துக்குத் துறவறத்தைக் காட்டிலும் மேலான பெருமை சேர்த்து உபதேசம் செய்துள்ளார்.

இனி, குருநானக் அவர்கள் பழைய கலாச்சாரத்தில் என்ன என்ன மாறுதல்களைச் செய்தார், அவை காரணமாக அவர் வழிவந்தவர்கள் சக்தி மிக்க ஒரு சமுதாயமாக—சீக்கிய சமுதாயமாக எப்படி உருவானார்கள் என்பதைக் கவனிப்போம்.

பாரதத்தின் தார்மீகக் கிரந்தங்கள் பெரும்பாலும் 'ஓம்' எனும் பிரணவத்துடன் தொடங்குகின்றன. இலக்கண ஆசிரியர்கள் அச் சொல்லின் சிறப்பு 'அவ்' என்னும் வினையிலிருந்து ஏற்பட்டதாகக் கருதுகிறார்கள். அவ்வினையின் பொருள் 'காப்பாற்று' (ரட்சி) என்பதாகும். ஜெர்மானியப்

பேராசிரியர் மாக்ஸ் முல்லர் அந்த 'அவ்' எனும் வினைச் சொல் 'ஆம்' என்பது போன்று ஒப்புதல் குறி என்று கருது கிறார். யோகிகளின் கருத்து என்னவெனில், இந்தச் சொல் படைப்புக் காலத்தின் தொடக்கத்தில் 'நிரங்கார'த்தி லிருந்து, அதாவது அருவப்பொருளிலிருந்து பிறந்தது. பிறகு அகிலமெங்கும் பரவியது என்பதாகும். 'உபநிஷத்' காலத் திலேயே அந்தச் சொல் 'பரமாத்மா'வைக் குறிப்பதாக ஆயிற்று.

சத்குருநானக் அவர்கள் ஓங்காரத்திற்கு முதலில் '1' என்னும் எண்ணைச் சேர்த்துப் புதிய விளக்கம் தந்தார். ''ஓங்காரம் ஒரே பரம்பொருளைக் குறிப்பிடுவது'' என்றார்.

குருநானக் அவர்கள் எழுதிய மறை நூல் 'குரு கிரந்த சாகேப்' என்று வழங்கப்படுகிறது. அதில் உயிர் நாடியாக 'ஜபுஜி' என்னும் தோத்திரப் பாக்கள் அடங்கியுள்ளன. அவற்றின் மூலமந்திரம்.

''ஏக் ஓங்கார சத்நாம், கர்த்தா புருக், நிர்ப்பய, நிர்வைர, அகால் முரத், அஜுனி, சையாம் குருபிரசாத்', என்பதாகும்.

அருவமான பிரணவத்தைச் சத்திய சொரூபமாகக் கண்டதோடு அதையே கர்த்தா—புருஷன்—அதாவது படைத்துக் காப்பவன் என்றும் விளக்கி, தமது கோட் பாட்டைத் தெளிவுபடுத்துகிறார். எல்லா உலகியல் செயல் களும் பரம்பொருளின் ஆணையின் விளைவுகள்; இறைவன் (கர்த்தா) அச்சமற்றவன், பகையற்றவன், உருவ மில்லாதவன், பிறப்பற்றவன் என்று கூறிக் காலத்திற்கு அப்பாற்பட்டவன் (அகால்),வார்த்தைகளால் விளக்கப்பட முடியாதவன் (அ)'போல் எழுத்தில், வரிக்கப்பட முடியா தவன் (அலேக்) என்று விளக்குகிறார் குருநானக் அவர்கள்.

மனித மனத்தில் இரு அம்சங்கள் உள்ளன: ஒன்று தியானம்; மற்றொன்று ஸ்மரணம்.

தியானம் தனியாக அமர்ந்து மனத்தினை ஒருமுகப் படுத்தினால் கிட்டுவது; ஆனால் ஸ்மரணம் அப்படியல்ல; ஏதாவதொரு செயலில் ஈடுபட்டவாறே, இறைவன் திரு நாமத்தை உச்சரிப்பதன் மூலமும், பக்தியில் பாடுவதன் மூலமும் கிடைக்கக்கூடியதாகும். தூய உள்ளத்தில் இறைவனின் திருநாமம் நிலைத்திருக்கும். இதன் காரண மாகத் தார்மீகக் கோட்பாட்டை, வாழ்வு நெறியைப் போதித்த சத்குரு நானக் அவர்கள் நன்னடத்தை— நல்லெண்ணம் — நற்செய்கையாகிய தொண்டுகளை வலியுறுத்துகிறார்.

பிறருக்கு இயன்ற உதவிகளைச் செய்யுங்கள். உழைத்துப் பாடுபட்டுச் சம்பாதியுங்கள். அந்த வருவாயி லிருந்து இன்னலுற்றவர்களுக்குத் தக்க நேரத்தில் உதவி செய்யுங்கள். சத்தியத்தைப் பாதுகாக்க—அவசியமேற் பட்டால் வாளேந்தவும் தயங்க வேண்டாம். பிறரும் இதே அறநெறியில் செல்ல உதவி புரியுங்கள் என்று உபதேசிக் கிறார் குருநானக் தேவர். அவர் வாழ்ந்த காலத்தில் பெண்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளைக் கண்டார்.

என் உபதேசங்களை ஏற்று வாழ ஆண்—பெண் இருபாலருக்கும் சம உரிமை உண்டு என்றதுடன், பெண் மனித இனத்தின் தாய்; ஆகையரல் பெண்ணைத் தாழ் வாகக் கருதுதல் நியாயமாகாது என்றும் போதித்தார்.

குருநானக் அவர்கள் மக்களின் வழக்கிலுள்ள பழகு மொழியிலேயே வாழ்வு நெறிகளை, உபதேசங்களைச் சொல்லியருளினார். பொது—பாமர மக்களை நல் வழிப் படுத்தவே அவர்களுடைய மொழியைத் தம் அருள் வாக்கு களுக்குக் கருவியாக்கிக் கொண்டார். எல்லாருக்குமே

புரியும் வகையில் வருணாசிரம முறைகள், சாதி வேறுபாடு, துறவு முறைகளை விளக்கி அவற்றிலிருந்து தவறுகளை அகற்றி வாழ வேண்டும் என்று போதித்தார் குருநானக் அவர்கள்.

எல்லா மனிதர்களையும் சமமானவர்கள் என்று உறுதியாகக் கூறி, 'ஒரே இனம், ஒரே குலம்' என்ற ஒற்றுமையுணர்வுடன் அம்மக்கள் கூடி வாழ்ந்து, நன்மை—தீமைகளை எதிர்த்து அழிக்கும் புதிய சக்தி வாய்ந்த நேசமுள்ள, ஒற்றுமையுள்ள சீக்கிய சமுதாயத்தை உருவாக்கினார். அவரது அவா முழுமையாக வெற்றி கண்டது.

குருநானக்கின் இந்த வாழ்வு நெறி இயக்கத்திலுள்ள புதுமை, இந்தியச் சமூகத்தினர் இடையே ஒற்றுமையும், இந்தியப் பண்பாட்டில் வளர்ச்சியும், மறுமலர்ச்சியும் ஏற்பட வழிகோலியதாகும். ஏனென்றால் இவருக்கு முன்பும் கபீர்தாஸ், இராமானந்தர், சைதன்யர் முதலான பெரியார்கள் தார்மீகத் துறையில் உயர்வு தாழ்வு நிலையைப் போக்க முயன்றிருக்கிறார்கள்.

சத்குருநானக் அவர்களும் அக்காலத்திய ஆட்சி முறை, நீதி பரிபாலனம், மக்களைக் கொடுமைப்படுத்தியது ஆகியவைகளைத் தெளிவாக விமரிசனம் செய்துள்ளார். முறை கேடுகளுக்கு எதிராகத் துணிச்சலுடன் குரலெழுப்பியிருக்கிறார்.

இதன் விளைவாகப் பொதுமக்கள் தமது இழிநிலை குறித்துச் சிந்திக்கலானார்கள். சிறிது காலத்திற்குப் பிறகு இழிநிலையிலிருந்து வெளியேறவும், முன்னேறவும் முயன்றார்கள்.

மகான் குருநானக்கின் வாழ்வு நெறி போதனை வழியின் பயனாக, அவரை இந்து, முசல்மான் இரு சாராரும் மனதார நேசித்தார்கள்.

சத்குருநானக் அவர்கள் உருவாக்கிய சமதர்ம—ஓரின ஒற்றுமையுள்ள சீக்கியச் சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் தினந்தோறும் பக்தி சிரத்தையுடன் செய்து வரும் பிரார்த்தனை, யான் அடுத்துக் கூறும் அருள் வாக்கோடு நிறைவு பெறும்.

"நானக் நாம சடதீ கலா
தேரே பாணே ஸரபத்த தா பலா"

"ஐயனே! எங்களுக்கு எப்போதும் நம்பிக்கையுடன் வாழ ஆசி கூறியருள்க! உன் அருளார்வத்தின் பிரபாவத்தால் அகில உலகிற்கும் நலன்கள் ஏற்படட்டும்."

இவ்வாறாக மகான் சத்குருநானக் அவர்கள் போதித்த வாழ்வு நெறி மனித சமுதாயம் என்றும் அமைதியுடன், ஒற்றுமையுடன் வாழத் துணை நிற்கும்.

# 8

# சான்றோர் வாக்கு: குருநானக்

## I

## இறைவனின் தன்மை

குரு என்று அழைக்கப்படும் பத்துப் பேரருளாளர்கள் சீக்கிய சமுதாயத்திற்கு அடிப்படையை அமைத்தவர்கள். அவர்கள் மொகலாயப் பேரரசர்கள் காலத்தில் வாழ்ந்தவர்கள். அந்தப் பத்துப் பெருமக்களில் குருநானக் முதலாமவர். அவரது கோட்பாடுகளும் போதனைகளும் சீக்கிய மதத்தின் அடிப்படையாகவும் உள்ளடக்கமாகவும் அமைகின்றன.

குருநானக் கி. பி. 1469ஆம் ஆண்டில் தோன்றியவர். அவர் 70 ஆண்டுகள் வாழ்ந்தார். அந்தப் பேரருளாளரின் சிந்தனைகள் சீக்கிய சமுதாயத்தினருக்கு மட்டுமன்றி உலக மக்கள் சமுதாயத்திற்கே ஒளி விளக்காகத் திகழ்பவை.

குருநானக் அவர்களின் பல போதனைகள் 'ஆதி கிரந்தத்தில்' இடம் பெற்றுள்ளன. ஆதி கிரந்தம் 'மூல மந்திரம்' என்ற கடவுள் கொள்கை பற்றிய அடிப்படை விளக்கத்துடன் தொடங்குகிறது. குருநானக் அவர்களது சிந்தனையின் வெளிப்பாடாக 'மூலமந்திரம்' திகழ்கிறது.

மூலமந்திரத்தின் தொடக்கத்தில் 1 என்ற எண் உள்ளது. இறைவன் 'ஒன்று' என விளக்குகின்ற

தன்மையை இது பிரகடனம் செய்கிறது என்பதைச் சீக்கிய மரபு ஒரு மனதாக ஏற்றுக்கொள்கிறது. இறைவன் ஒருவனே என்பது குருநானக் அவர்களின் தலையாய போதனை.

'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்பர் திருமூலர். இறைவன் ஒருவனாக அமைந்து திகழ்கின்றான் என்கிறார் குருநானக்.

ஒருவனே ஆகிய இறைவன் நிர்க்குணமாகவும் சகுணமாகவும் இருவாறாக உள்ளான் என்கிறார் குருநானக். இறைவன் முழுமையானவனாகவும், தனிநிலை சார்ந்தவனாகவும் — வெளிப்படையானவனாகவும், வெளிப்படை அற்றவனாகவும் விளங்குகின்றான் என்று குருநானக் அவர்கள் சுட்டிக்காட்டுகின்றார்.

இந்தப் பிரபஞ்சத்தின் தொடக்கத்தில், இறைவனும் இறைவனின் எல்லையில்லாத முடிவற்ற கட்டளையும் (ஹுக்கம்) மட்டுமே இருந்த நிலை அமைந்திருந்தது என்றும், பின்னர் இறைவன் உலகத்தை உருவாக்கி, அருளினான் என்றும் குருநானக் கூறுகின்றார்.

இறைவன் உலகை உருவாக்கியதுடன் மட்டுமின்றி, அதனைப் பேணிக்காத்து, அழித்து, மீண்டும் உருவாக்குகின்றான். கடலில் நீர் நிரப்பச் செய்து, நீரை வற்றச் செய்து, மீண்டும் நீரை நிரப்பச் செய்து—இப்படி முடிவில்லாமல் இறைவனின் அருட்பணி அமைகிறது என்கின்றார் குருநானக்.

இறைவன் எல்லாம் வல்லவன், எல்லாம் அறிந்தவன் என்றும் அவர் குறிப்பிடுகின்றார். இறைவன் அனைத்தையும் காண்பவன், அனைத்தையும் அறிந்து உணருபவன், அனைத்தையும் அறிந்தவன், உள்ளும் புறமும் ஊடுருவி நிற்பவன் என்று விளக்குகின்றார் குருநானக்.

இறைவனால் உருவாக்கப்பட்ட உலகம் நிலையற்றது; நிரந்தரம் இல்லாதது. ஆனால் இறைவன் நிலையானவன், நிரந்தரமானவன்.

இறைவன் அபிநாசி (நிரந்தரமானவன்), அனாதி (தொடக்கம் என்பதொன்று இல்லாதவன்), அகால் (காலத்தைக் கடந்தவன்) என்று குருநானக் வலியுறுத்துகின்றார்.

இறைவன் காலத்தைக் கடந்து என்றென்றும் உண்மையாகத் திகழ்பவன். இறைவன் உருவம் அற்றவன், வடிவம் இல்லாதவன். இதனை 'நிரங்கார்' என்கின்றார் குருநானக்.

"உருவாக்கப்படாத இறைவன், பிறப்பு என்பது இல்லாத இறைவன், ஒரு போதும் உருவம் கொண்டவன் அல்ல. இறைவன் ஒரு சிலை உருவத்தில் வந்து அமர முடியாது. இறைவனை ஓர் அவதாரம் வெளிப்படுத்த முடியாது" என்று குருநானக் போதிக்கின்றார்.

இறைவனின் முழுமை, மனிதனின் புரிந்து கொள்ளும் ஆற்றலுக்கு அப்பாற்பட்டது. இறைவன் 'அதிர்ஷ்ட்', காட்சிக்கு அப்பாற்பட்டவன், 'அபோல்', 'அகத்' 'அலேக்'—சொல்லுக்கு அல்லது விலக்கத்திற்கு அப்பாற்பட்டவன், 'அலேக்'—விவரிக்க முடியாதவன் என்று குருநானக் அவர்கள் உணர்த்துகின்றார்.

இறைவன் இயல்பாயுள்ளவன். அவனது தண்ணருளால் மட்டுமே மனிதன் வீடு பேறு அடைய முடியும் என்று, குருநானக் மிக உறுதியாகக் கூறுகின்றார்.

இறைவன் பற்றிய குருநானக் அவர்களின் கோட்பாடு காரண காரியத் தொடர்பு உடையதாக—எளிய மக்களையும் ஈர்ப்பதாக அமைந்துள்ளதைக் காண்கின்றோம்.

11

## மனம் ஒரு கருவி

மனிதனின் தன்மை அவன் எதில் பற்று வைத்திருக்கிறான் என்பதையொட்டி அமையும் என்று குருநானக் கூறுகின்றார். மனிதனது விசுவாசம் உலகத்திலிருந்து விடுபட்டு, இறைவனின் திருநாமத்திற்கு மாறுகின்ற போது மனிதனின் தன்மை மாறுகிறது. சீர்ப்படுத்தப் படாத மனிதன் உலகில் விசுவாசம் வைக்கிறான். சீர்ப்பட்ட மனிதன் உலகின் மீது விசுவாசம் கொள்ள மாட்டான்.

மனிதனின் மனத்தையொட்டி மனிதனின் தன்மை அமையும் என்று குருநானக் வலியுறுத்துகின்றார். "மனத்தை வெல்வது, உலகத்தை வெற்றி கொள்ளுவது ஆகும்" என்று அவர் சுட்டிக் காட்டுகிறார்.

மனம் ஒரு குரங்கு என்று கூறுவார்கள். மனத்தை அடக்குவது மிகவும் சிரமம் என்பார்கள். மனம் என்றால் என்ன?

மனம் கட்டளையிடுவதைப் போலத்தான் மனம் செயல்படுகிறது. சில நேரங்களில் அது புண்ணியச் செயலை வெளியிடுகிறது. சில நேரங்களில் அது பாவத்தை வெளியிடுகிறது.

"எனது மனமே, அமைதியாக இரு. நீ தொல்லைப்பட மாட்டாய். இறைவனின் புகழைப் பாடு. நீ மிக உயர்ந்த அமைதி நிலையை அடைவாய். மனமே, நீ இறைவனின் புகழைப் பாடு; நீ இறைவனின் இனிமையை உணருவாய்" என்று குருநானக் அறிவுறுத்துகின்றார்.

மனம் ஒரு கருவி. மனிதன் அதைக்கொண்டு சிந்திக்கின்றான், உணருகின்றான், முடிவு செய்கின்றான். எனவே மனம் மனிதனின் நன்மை, தீமை அனைத்துக்கும் ஆதாரமாக அமைகிறது.

சீர்ப்படுத்தப்படாத மனிதனின் மனம் ஒழுங்கற்றதாக, தவறுகிறதாக இருக்கும். பண்பட்ட மனிதனின் மனம் ஒழுங்கானதாக இருக்கும். சீர்ப்படுத்தப்படாத மனிதனின் மனம் நிலையில்லாததாக, வழி தெரியாததாக காணப் படும். எனினும் அது நன்கு நிலைபெற்றுவிட்ட எதிரி அல்ல. மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். மனத்தை அழித்துவிடக் கூடாது. ஏனென்றால் தூய்மையான, கட்டுப்படுத்தப்பட்ட மனம் விலை மதிப்பற்ற பொக்கிஷம் ஆகும்'' என்று குருநானக் கூறுகின்றார்.

''மனம் போன போக்கெல்லாம் போக வேண்டாம்'' என்பது தமிழ் மூதுரை. மனம் தூய்மையற்றதாக, கட்டுப்படுத்தப்படாததாக இருக்குமானால் அதன் விளை வாக மனிதன் தனது ஆசைகளுக்கு அடிமையாகி உழல் வான். மனம் தூய்மையானதாக அமைந்து விடுமானால் மனிதன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வான்.

சீர்ப்படுத்தப்படாத மனிதன், தான் என்ற உணர்ச்சி உள்ளவனாக, தற்பெருமை அல்லது கர்வம் கொண்டவ னாக,சுயநலம் பேணுபவனாக இருப்பான் என்று குருநானக் குறிப்பிடுகின்றார். மனிதனின் இந்தத் தன்மையை 'ஹௌமை' என்ற சொல்லின் மூலம் குருநானக் விவரிக்கின்றார்.

இந்தத் தன்மையின் ஆதிக்கம் அதிகமாக உள்ள நிலையில் மனிதன் தீமைகளைப் புரிவான்; தீய ஆசைகளைக் கொண்டு செயல்படுவான். காமம் (சிற்றின்பம்), குரோதம் (கோபம்), லோபம் (பற்றுவைத்தல்), மோகம் (உலகியல் பொருட்களில் ஈடுபாடு கொள்ளுதல்), அகங்காரம் (கர்வம்) என இவை ஐந்தாகக் குறிக்கப்படும். இந்த ஐந்து தூண்டுகோல்களிலிருந்துதான் வன்முறைச் செயல்கள் அனைத்தும் விளைகின்றன.

''எனது பகைவர்கள் ஐவர். நானோ ஒருவன். மனமே! எனது இல்லத்தை என்னால் எவ்வாறு பாதுகாத்துக் கொள்ள இயலும்? தினசரி எனது பகைவர்கள் என்னைத்

தாக்கிச் சூறையாடுகிறார்கள். நான் எவரிடம் முறையிடுவேன்?'' என்று குருநானக் அவர்கள் கேட்கின்றார்.

''வன்முறை, உலகியல் பொருட்களில் ஈடுபாடு, பற்று வைத்தல், கோபம் ஆகிய இந்த நான்கும் நெருப்பாறுகள். அவற்றில் விழுகின்ற எவரையும் அவை அழித்துவிடும்'' என்று குருநானக் எச்சரிக்கின்றார்.

இறைவனின் திருநாமத்தில் அன்பு கொள்ளாத, சுயநலத்தில் அக்கறை கொண்ட மனம் இந்த நெருப்பாறுகளில் நம்மை விழச் செய்யும்.

மனத்தைத் தூய்மைப்படுத்திக் கொண்டு காமம், குரோதம், லோபம், மோகம், அகங்காரம் ஆகிய தீய உணர்வுகளிலிருந்து விடுபடக் குருநானக் அவர்களின் போதனை துணை நிற்கும்.

## III

## அகத்தூய்மை

இறைவனுடன் ஒருமை உறுவதற்கு, வீடு பேறு அடைவதற்கு, புறத்திலே உள்ள அல்லது இயந்திர ரீதியிலான எதுவும் பயன் தராது என்றும், ஒரு குறிப்பிட்ட வகையில் அமையக் கூடிய மன அளவிலான பற்றுறுதி மட்டுமே பயன் தரும் என்றும் குருநானக் போதித்து அருளினார்.

உண்மையான மதம் என்பது புற அளவில் அமையும் பழக்கங்களினால்நிர்ணயிக்கப்படுவது இல்லை. நியாயமான கருணையுள்ள செயல்களின் மூலம் வெளிப்படும் அன்பு, நம்பிக்கை, தயை, எளிமை முதலிய அகப்பண்புகளினால் தான் உண்மையான மதம் நிர்ணயிக்கப்படுகிறது.

ஒருவன் பிறப்பினால் உயர்ந்தவனாக அல்லது தாழ்ந்தவனாக ஆவது இல்லை. அவனது ஜாதி அல்லது அந்தஸ்து பயனற்றவை. ''இறைவனிடம் புகலிடம்

அடைந்தவர்கள் உயர்ந்தவர்களோ அல்லது தாழ்ந்தவர்களோ அல்லது இடைப்பட்டவர்களோ அல்ல. அவர்கள் இறைவனின் சேவகர்கள்'' என்று குருநானக் குறிப்பிடுகின்றார்.

தூய்மையின்மை, பிறப்பு சம்பந்தப்பட்ட வேற்றுமைகளினால் ஏற்படுவதில்லை என்றும், தனி நபரின் மனத்தின் தன்மையை ஒட்டியே ஏற்படுகிறது என்றும் அவர் பிரகடனம் செய்தார்.

யாத்திரை ஸ்தலங்களில் நீராடுதல், விக்கிரக ஆராதனை ஆகியவை பயன் தராது என்பது குருநானக் அவர்களின் கோட்பாடு. தனது மனத்தில் அமைந்துள்ள அன்பை உணர்ந்து, அதனிடம் நம்பிக்கை கொண்டு, அதனை வளர்ப்பவன் அகத்தில் உள்ள புனித நீரில் குளித்துத் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்கிறான் என்று அவர் குறிப்பிட்டார்.

மதம் மனிதனின் அகத்தே அமைந்துள்ளது. அன்பின் மூலம் அது வெளிப்படுகிறது என்று குருநானக் எடுத்துரைத்தார்.

''புறத்தூய்மை நீரான் அமையும், அகத்தூய்மை வாய்மையால் காணப்படும்'' என்பது திருவள்ளுவரின் வாக்கு.

அகத்தூய்மையே இறைவனை அடைய வழி வகுக்கும் என்று உறுதியான குரலில் வலியுறுத்தியவர் குருநானக் அவர்கள்.

மனத்தைத் தூய்மைப் படுத்தி, மனத்தில் இறைவனின் திருநாமத்தை ஸ்மரணை செய்து வீடு பேறு அடைவீர் என்று அவர் போதித்தார். சிந்தனை, சொல், செயல் ஆகிய அனைத்திலும் இறைவனை நினைத்திடுங்கள் என்று அவர் கட்டளையிட்டார்.

"உனது உடலை வயலாகவும், மனத்தைக் கலப்பை யாகவும், உனது செயல்களை உழுகின்ற பணியாகவும் கருதிடுக. உனது உடல் என்ற வயலில் இறைவனின் திருநாமத்தை விதையாக விதைத்துவிடு. மனநிறைவுடன் வயலைச் சமன் செய்க. எளிமையின் மூலம் வயலுக்கு வேலியிடுக" என்று குருநானக் எடுத்துரைக்கின்றார்.

திருநாம ஸ்மரணை, மனிதனை இறைவன்பால் சேர்க்கும் என்று அவர் நம்பிக்கை தருகின்றார்.

மனிதன் இறைவனை அடைவதற்கு வழிகாட்டியாக அமைபவர் குரு. சீக்கியச் சமுதாயத்தில் குருவின் பணி தனி முக்கியத்துவம் பெறுகிறது. மனிதன் இறைவனை அடைவதற்கு ஏணியாக அமைபவர் குரு என்பது குரு நானக் அவர்களின் வாக்கு.

இறைவனின் கட்டளையை (ஹுக்கம்) எடுத்துரைப்பவர் குரு. உண்மையான குரு இறைவனின் குரலாக விளங்குகின்றார்.

உண்மையை எவ்வாறு அடைவது, பொய்ம்மையை எவ்வாறு களைவது? இறைவனின் கட்டளைக்குக் கீழ்ப் பணிவதன் மூலமாகத்தான் உண்மையைக் கண்டறிய இயலும் என்று குரு நானக் எடுத்துரைக்கின்றார்.

இறைவனின் தெய்வீகக் கட்டளையை உணருகின்றவருக்கு வேறு எந்த ஞானமும் தேவையில்லை என்றும் அவர் கூறுகின்றார்.

இவ்வாறு குருநானக் அவர்கள் புறப் பழக்கவழக்கங் களையும், சம்பிரதாயங்களையும், சடங்குகளையும் பயனற்றவை என்று நிராகரித்து, அகத்தூய்மை—மனத் தூய்மை—மட்டுமே மனிதன் வீடுபேறு அடைய உதவும் என்று குறிப்பிட்டிருப்பது, தனி மனிதனின் வளர்ச்சிக்கு மட்டுமின்றிச் சமுதாயத்தின் வளர்ச்சிக்கே அடிப்படையாக அமையும் ஒரு சீரிய கோட்பாடு ஆகும்.

# 9

# குரு கோவிந்தர்

சீக்கிய மதத்திற்கும், சீக்கியச் சமுதாயத்திற்கும் அடிப்படையினைக் குரு என்று மரியாதையுடனும், மதிப்புடனும் அழைக்கப்பட்ட பத்துப் பேரருளாளர்கள் அமைத்துத் தந்தார்கள். அவர்களது சிந்தனைகளும், போதனைகளும் 'பாரதநாடு ஞானபூமி' என்ற சிறப்புக்கு எடுத்துக் காட்டுகளாக விளங்குகின்றன.

சீக்கியச் சமுதாயத்தை உருவாக்கிய பத்துப் பேரருளாளர்களில் குரு நானக் அவர்கள் முதலாமவர். சீக்கிய வரலாறு குரு நானக் அவர்கள் காலத்திலிருந்து தொடங்குகிறது எனலாம். அவரது காலத்திலிருந்து ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளில் சீக்கியச் சமுதாயம் தனிச் சிறப்பு வாய்ந்த இயல்புகளுடன் கூடிய வடிவத்தைப் பெற்றது.

அந்த இருநூறு ஆண்டுகளில் மூன்று மிக முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்தன. ஒவ்வொரு சம்பவத்திற்கும் ஒரு குரு எடுத்த முடிவு காரணமாக அமைந்தது.

குருநானக் அவர்கள் தம்மைச் சுற்றித் திரண்ட சீக்கியச் சமுதாயத்திற்குத் தலைமை தாங்கி வழி நடத்திச் செல்லத் தமக்குப் பின்வருபவர் என்று ஒருவரை முறைப்படி நியமித்தார். இது முதலாவது சம்பவம்.

சீக்கியச் சமுதாயத்தின் ஐந்தாவது குருவாகிய குரு அர்ஜுன் அவர்கள் பிரமாணத்திற்கு உரிய புனித சமய நூலைத் தொகுத்தார். இது இரண்டாவது சம்பவம்.

குரு அர்ஜுன் அவர்கள் தொகுத்த புனித சமய நூல் ஆதி கிரந்தம் என்று அழைக்கப்படுகிறது.

குரு கோவிந்தசிங் அவர்கள் 'கால்சா' என்ற அமைப்பினை உருவாக்கினார். இது மூன்றாவது சம்பவம்.

புதிதாகத் தோன்றிய சீக்கியச் சமுதாயத்திற்கு ஒழுங்கான அங்கீகரிக்கப்பட்ட சமயத் தலைமைக்குக் குருநானக் அவர்கள் வழி வகுத்தார் என்றால், சீக்கியச் சமுதாயத்தின் முதலாவது ஐந்து பேரருளாளர்களின் போதனைகளுக்கு ஒரு நிரந்தர வடிவத்தைக் குரு அர்ஜுன் அவர்கள் அளித்தார் என்றால், சீக்கிய சமுதாயத்திற்குக் கட்டுக்கோப்பையும், தெளிவான சின்னங்களையும், கட்டுப் பாட்டையும் குரு கோவிந்தர் அவர்கள் வழங்கினார் என்பது வரலாறு.

குரு கோவிந்தர் அவர்கள் சீக்கியச் சமுதாயத்தின் பத்தாவது குருவாக விளங்கினார். அவர் காலத்துடன் குரு பரம்பரை நிறைவு பெற்றுவிட்டது.

குரு கோவிந்தர் அவர்கள் தமது இறுதிக்காலத்திற்கு முன்பாக ஒரு பிரகடனத்தை வெளியிட்டார். தமது மறைவுடன் சீக்கியச் சமுதாயத்தின் குரு பரம்பரை முடிந்து விடும் என்றும், அதற்குப் பிறகு ஆதிகிரந்தம் என்ற பெயரில் விளங்கும் புனித சமய நூல், பந்த் அல்லது கால்சா என்று விவரிக்கப்பட்ட ஒருங்கிணைந்த சமுதாயம் ஆகியவற்றினிடம் குருவின் அதிகாரமும் அலுவலும் ஒப்படைக்கப்பட்டிருக்கும் என்றும் குரு கோவிந்தர் கட்டளையிட்டு அருளினார்.

குரு கோவிந்தர் அவர்களின் இந்தக் கோட்பாடு, அவர் காலத்திற்குப் பிறகு உருவான சீக்கியர் வரலாற்றுக்கு அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்து விட்டது.

ஆதிகிரந்தம் குருவின் வெளிப்படையான வடிவம் என்பதையும், கால்சாவின் ஒன்றுபட்ட முடிவுகளுக்கு

மத அனுமதி உண்டு என்பதையும் சீக்கியச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளத் தொடங்கி விட்டது.

இது குரு கோவிந்தர் அவர்களின் மாபெரும் பணி ஆகும்.

புனிதக் கோட்பாடுகளும், அற நெறிகளும், சீரிய சிந்தனைகளும் அடங்கிய ஆதிகிரந்தம் மட்டுமே குரு எனப் போற்றி வணங்கவும், பின்பற்றவும் தக்கது என்ற நிலையை உருவாக்கிய குரு கோவிந்தர் அவர்களின் ஈடு இணையற்ற செயலில் தனி மனிதரை விடக் கோட்பாடு களுக்கும், போதனைகளுக்கும் முக்கியத்துவம் தரவேண்டும் என்ற சிறப்பைக் காண்கிறோம்.

கோட்பாடுகளும், கொள்கைகளும், போதனைகளும் மட்டுமே முக்கியமானவை—புனிதமானவை—வணக்கத் திற்கு உரியவை— பின்பற்ற வேண்டியவை— என்பதே சீக்கியச் சமுதாயத்தில் குரு கோவிந்தர் நிகழ்த்திய மாபெரும் புரட்சி ஆகும்.

இன்றைய தினம் சீக்கியப் பெருமக்கள் ஆதிகிரந்தம் அல்லது குரு கிரந்த சாகிப் என்று மரியாதையுடன் குறிப் பிடப்படும் புனித சமய நூலையே வணங்கிப் போற்றிப் பின்பற்றுகிறார்கள். இந்த நிலையை உருவாக்கியவர் குரு கோவிந்தர் அவர்கள்.

'கால்சா' என்று குரு கோவிந்தர் அவர்கள் உருவாக்கிய கால்சா நிறுவனத்தை மகாகவி பாரதியார்,

"'..................காலசா' எனுமொழி
முத்தர்தம் சங்க முறையெனும் பொருளது;
முத்தர்தம் சபைக்கு மூலர்களாகமற்று
ஐவர்அன்னோர் தமை அருளினன் ஆரியன்;
சமைந்தது 'காலசா' எனும்பெயர்ச்சங்கம்'"

என்று பெருமிதத்துடன் குறிப்பிடுகின்றார்.

குரு கோவிந்தர் அவர்கள் தேசிய ஒருமையை—அனை வரும் ஒன்றுபட்டு வாழவேண்டும் என்ற கருத்தினை—வலி யுறுத்தினார்.

“சீடர்காள்! குலத்தினும் செயலினும் அனைத்திலும்
இக்கணம் தொட்டுநீர் யாவிரும் ஒன்றே!
பிரிவுகள் துடைப்பீர்! பிரிதலே சாதல்.
ஆரியர் சாதியுள் ஆயிரம் சாதி
வகுப்பவர் வகுத்து மாய்க, நீர் அனைவிரும்
தருமம், கடவுள், சத்தியம், சுதந்திரம்
என்பவை போற்ற எழுந்திடும் வீரச்
சாதி யொன்றனையே சார்ந்தோர் ஆவீர்!”

—என்று குரு கோவிந்தர் அவர்கள் தமது சீடர்களுக்குப் போதித்ததாகப் பாரதியார் பாடுகின்றார்.

பிரிவுகள் கூடாது, பிளவுகள் தவறானவை, ஒற்று மையே தேவையானது என்று வலியுறுத்திய பேரருளாளர் குரு கோவிந்தர் அவர்கள்.

நமது சமுதாயம் வீரம் மிக்கதாக - துணிவு கொண்ட தாக விளங்கவேண்டும் என்றும் குரு கோவிந்தர் அவர்கள் கனவு கண்டார்.

“அறத்தினைத் தமதோர் அறிவினாற் கொண்ட
மட்டிலே மானிடர் மாண்பெறலாகார்.
அறமது தழைப்ப நெஞ்சகம் காட்டி
வாட்குத்தோற்று மாய்பவர் பெரியோர்!
அவரே மெய்ம்மையோர்; முத்தரும் அவரே”

என்ற சொற்களில் பாரதியார் குரு கோவிந்தர் அவர்கள் போதித்த வீரத்தை வடித்துக் காட்டுகின்றார்.

" வானம் வீழ்ந்து உதிரினும் வாள் கொடு தடுக்கும்
வீரர் நாயகன்................."

என்பவை குரு கோவிந்தர் அவர்களைப் பற்றிய பாரதியாரின் அறிமுக அடிகள்.

ஆம்; குரு கோவிந்தர் சீக்கியச் சமுதாயத்தில் கட்டுப்பாட்டையும், பெரும் வீரத்தையும் மலர்ந்திடச் செய்தார், சீக்கியச் சமுதாயம் வீரத்தின் விளைநிலமாக இன்றைய தினம் விளங்குகின்றது. இந்திய ராணுவத்தில் சீக்கியப் பெருமக்கள் சிறப்பான இடம் பெற்றுள்ளார்கள். நாடு காக்கும் பணியில் அவர்கள் காட்டும் வீரமும் தீரமும் பாரதத் திருநாட்டிற்குப் பெருமை சேர்க்கின்றன.

விளையாட்டுத் துறையிலும் பல சீக்கிய வீரர்கள் பாரதநாட்டுக்கு உலக அரங்கில் பெயரையும் புகழையும் பெற்றுத் தருகிறார்கள். பாரத நாடு பார்க்கெலாம் திலகம் என்று சொன்னால், பாஞ்சாலம் பாரத நாட்டின் திலகமாக ஒளி வீசுகிறது.

இந்தியச் சுதந்திரப் போராட்டத்தின்போதும், இந்தியா விடுதலை பெற்ற பிறகும், சீக்கியர்களின் தியாகம், வீரம், கட்டுப்பாடு ஆகியவற்றால் வரலாறுகள் உருவானதையும், உருவாகி வருவதையும் காண்கிறோம். இதற்கு வித்திட்டவர் குரு கோவிந்தர் அவர்கள்.

இன்றைய தினம் பாரதநாட்டின் ராஷ்டிரபதியாக கியானி ஜைல்சிங் அவர்கள் திகழ்கின்றார். தேச பக்தியும் வீரமும் மிகுந்த பஞ்சாப் மாநிலம் நாட்டுக்கு வழங்கிவரும் சிறிய மாமணிகளுள் மிகச்சிறந்த இடத்திற்கு உரியவராக ஜைல்சிங் அவர்கள் விளங்குகின்றார். அன்பு, சகோதரத்துவம், சமத்துவம், தேசபக்தி, வீரம் ஆகிய குருகோவிந்தர் அவர்களின் போதனைகள் அனைத்துக்கும் இலக்கணம்

வகுப்பவராக ஜைல்சிங் அவர்கள் அமைந்துள்ளமை நாம் அனைவரும் பூரிப்பு அடையத்தக்க ஒன்று ஆகும்.

குரு கோவிந்தர் அவர்கள் கனவு கண்ட பாரத சாதி, தேச பக்தியையும் வீரத்தையும், தர்மத்தையும் அடிப்படையாகக் கொண்டது.

"இரும்பு முத்திரையும் இறுகிய கச்சையும்
கையினில் வாளும் கழன்றிடாச் சாதி!
சோதர நட்புத் தொடர்ந்திடு சாதி;
அரசன் இல்லாது தெய்வமே அரசாய்
மானுடர் துணைவராய், மறமே பகையாக்
குடியரசு இயற்றும் கொள்கையார் சாதி;"

—என்று பாரதியார் குரு கோவிந்தர் காண விரும்பிய சாதியை எடுத்துக் காட்டுகின்றார்.

"தாய்த் திருநாட்டைச் சந்ததம் போற்றிப்
புகழொடு வாழ்மின்! புகழொடு வாழ்மின்"

—என்று குரு கோவிந்தர் வழங்கிய செய்தியையும் பாரதியார் சுட்டிக் காட்டுகின்றார்.

தர்ம நெறியைப் பின்பற்ற வேண்டும், வீரம் கொண்டு விளங்க வேண்டும், கட்டுப்பாடு குலையாமல் வாழவேண்டும், தேச பக்தியே உயிர் மூச்சாக அமைய வேண்டும் என்ற குரு கோவிந்தர் அவர்களின் போதனைகளைப் பாரத மக்கள் அனைவரும் நினைவில் இருத்திச் செயல் படுவோமாக!

---

**ஆசிரியரைப் பற்றி......**

## தமிழ் வளர்க்கும் ராஜஸ்தானி

சென்னை வானொலி நிலையம் 18-8-85 அன்று பள்ளிக் குழந்தைகளுக்கான பள்ளிக்கல்வி ஒலிபரப்பில் சுதந்திரத்தை நினைவூட்டும் வகையில் 'ஒன்று நமது சிந்தனை' என்ற நிகழ்ச்சியை இம்மாதம் சிறப்பாக ஒலி பரப்பியது.

வழக்கத்துக்கு மாறாகப் பேட்டியாளர் கவிதையிலேயே அறிமுகம் செய்ய, மேற்குறித்த தலைப்பில் தமிழில் பேசியவர் ஒரு ராஜஸ்தானி; ஜைனர். இதில் இன்னொரு சிறப்பு என்னவென்றால் ஜைனரான அந்த ராஜஸ்தானி தமிழகத்திலேயே வளர்ந்து, வாழ்ந்து, தமிழோடு ஐக்கியமான பிரமுகர். ஆன்மீகம் இலக்கியம் தொடர்பான, முக்கியமான அரங்குகளில் தமிழ் முழக்கம் செய்கின்றவர். வியந்து மதிக்கின்ற வகையில் பண்போடு பழகுகின்றவர். இவரது எந்தச் சொற்பொழிவுகளிலும் பொருத்தமான திருக்குறள் பாக்கள் மேற்கோள்களாக விரியும். அதனால் இவருக்கு 'திருக்குறள் சேட்' என்ற சிறப்புப் பெயர். தமிழக வரலாற்றோடு பிரிக்க முடியாத உறவு கொண்டு, தமிழுக்கும், ஆன்மீகத்துக்கும் ஒப்பற்ற இலக்கண, இலக்கியங்களையும், எழில்மிகு கலைக் கோவில்களையும் தந்துள்ள சமண மதத்தின் பெருமை இவர் மூலம் நமக்கு நினைவுக்கு வருகிறது. திருக்குறள் சேட் கிருஷ்ணசந்த் சோர்டியா 1981-ல் மறைந்த தமது தந்தை யின் நினைவால் இவ்வாண்டு 'சுகன்சந்த் நினைவுப் பரிசு' என்று ரூபாய் 10, 000த்தைச் சிறந்த தமிழ் நூல்களுக்குத் தருவதாக அறிவித்திருக்கிறார். இப்பரிசுத் திட்டம் ஒவ்வொரு ஆண்டும் தொடரவும் தமது தந்தையின்

பெயரால் தனியாக ஒரு அறக்கட்டளையை ஏற்படுத்தியுள்ளார்.

கிருஷ்ணசந்த் சோர்டியாவுக்கு வயது 40. சமணத்தின் சீரிய கொள்கையான அகிம்சையில் தீவிரப் பற்று கொண்டவர். சமண தத்துவங்கள், மேலும் சிறப்பாக ஆய்வு செய்யப்படுவதற்காகத் தமது சமுதாயத்தினரின் துணையுடன் ஜைன இயல் ஆய்வுக் கழகம் என்ற ஒரு அறக்கட்டளையைச் சென்னையில் நிறுவி, அதன் பொதுச் செயலாளராகப் பணியாற்றி வருகிறார். Research Foundation For Jainology (ஜைன இயல் ஆய்வுக் கழகம்) என்ற இந்த நிறுவனத்தின் தலைவராக (Chairman) இருப்பவர் சிறந்த தமிழ்ப் பேச்சாளரும், தமிழில் பல நூல்களை எழுதியவருமான சென்னை நகர காவல்துறை இயக்குனர் (Commissioner of Police) சு. ஸ்ரீபால் அவர்கள்.

இந்த ஜைன இயல் ஆய்வுக் கழகத்தின் சார்பில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பல லட்சம் ரூபாய் பெரும் நன்கொடையில் Department ot Jainology (ஜைன இயல் ஆய்வுத் துறை) என்ற தனிப்பிரிவு ஒன்று சமீபத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஜைன நெறிகளின் தத்துவ இயல்களை மேற்கொண்டு ஆய்வு செய்யவும், அதன் மூலம் உயர்தர Ph. D பட்டம் பெறவும் தத்துவத் துறையில் ஆர்வம் கொண்ட மாணவர்களுக்கு Research Foundation For Jainology என்ற அறநிறுவனம் உதவும்.

—கன்யா

"வாழும் தமிழ் உலகம்"

ஆகஸ்டு, செப்டம்பர், 1985

## திருக்குறள் குடும்பம்

"திருக்குறளில் வள்ளுவர் சொன்ன மாதிரி நான் வாழ விரும்புகிறேன்" என்று சொல்கிறார், எஸ். கிஷன்சந்த் சோர்டியா.

இவர் வடநாட்டுக்காரர் என்றாலும் அருமையாகத் தமிழ் பேசுகிறார். அத்துடன் பேச்சுக்குப் பேச்சு திருக்குறள் சொல்லி நம்மைத் திகைக்க வைக்கிறார்.

**கிருஷ்ணன்**

இதனால் இவருக்கு 'திருக்குறள் சேட்டு' என்ற பெயரும் உண்டு. பிரமுகர்கள் வட்டாரத்தில் கிஷன் என்ற இவர் பெயர் 'கிருஷ்ணன்' என்று ஆகிவிட்டது.

இவர் பூர்வீகம் ராஜஸ்தான் என்றாலும், தமிழ் நாட்டில் உளுந்தூர்ப்பேட்டையில் பிறந்தவர். அங்குள்ள உயர்நிலைப் பள்ளியில் எஸ். எஸ். எல். சி. படித்து முடித்தார். அப்போதும் தமிழில் முதல் மாணவராகத் திகழ்ந்தார்.

**தொழிலுக்கு வந்தார்**

படிப்பில் சிறந்து விளங்கிய கிஷன்சந்த் சோர்டியா ஜெயின் கல்லூரியில் சேர்ந்தார். இரண்டு மாதத்துடன் கல்லூரிப் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்தாகி விட்டது.

15 வயதில் தந்தையுடன் வட்டித் தொழிலுக்கு வந்தார். அதில் படிப்படியாக முன்னேறிச் செல்வந்தரானார். தன் 6 சகோதரிகளுக்கும் திருமணம் செய்து வைத்தார்.

**வருத்தம் இல்லை**

தொழிலில் ஈடுபட்டாலும், கிஷன்சந்த் சோர்டியாவைத் திருக்குறள் ஆர்வம் விடவில்லை. வீட்டில் புத்தகம் மூலம், ஆசிரியரை வைத்துக் கற்றுக் கொண்டார்.

தம் கல்லூரிப் படிப்பு தடைபட்டதற்காகக் கிஷன்சந்த் வருத்தப்படவில்லை. படிக்க முடியாமல் தவிக்கும் ஏழைகளுக்கு உதவி செய்து, அந்தக் குறையைப் போக்கிக் கொள்கிறார்.

**கூட்டுக் குடும்பம்**

இவர்கள் வாழ்க்கையில் கூட்டுக் குடும்பம் முக்கிய அம்சம். தன் சகோதரர்களுடன், ஒரே வீட்டில் வசிக்கிறார். இவருக்கு ரஞ்சித்மல், மகேந்திரசந்த் என்ற இரண்டு தம்பிகள். இந்தக் குடும்பத்தில் உள்ள சின்னவர்கள், பெரியவர்கள் அனைவரையும் தினசரி வணங்க வேண்டும். இது குழந்தைகளுக்கும் பொருந்தும். "இதனால் கருத்து வேறுபாடு வருவது இல்லை. அப்படியே வந்தாலும், காலையில் வணங்கும் போது மறைந்து போகிறது" என்று சொல்கிறார் கிஷன்சந்த்.

**எம்மதமும்**

ஜைன மதத்தைச் சேர்ந்த இவர், இந்துக் கோவிலுக்கும் போவார். கிறிஸ்தவ 'சர்ச்'சுக்கும் செல்வார்.

பசுவதையை எதிர்த்து, தமிழ்நாடு முழுவதும் பிரசாரம் செய்து இருக்கிறார். நல்ல பேச்சாளர்.

"சைவம்தான் மனிதனுக்குச் சரியான உணவு. அதைச் சாப்பிடும் வகையில் தான் மனிதப் பற்கள் இருக்கின்றன" என்பது இவருடைய வாதம்.

**திருமண முறை**

கிஷன்சந்த்—சோர்டியா பிரிவைச் சேர்ந்தவர். இந்தக் கோத்திரத்தில் இவர்கள் திருமண சம்பந்தம் வைத்துக் கொள்வது இல்லை.

மாமன் மகள்—அத்தை மகன் முறையெல்லாம் இதில் கிடையாது. ஒரே கோத்திரமானாலும் சகோதர, சகோதரிகளாகப் பாவிக்கப்பட வேண்டும்.

**எழுத்தாளருக்குப் பரிசு**

கிஷன்சந்த் தன் தந்தை மீது மிகுந்த மதிப்பு வைத்திருக்கிறார். இலக்கிய ஆர்வமுள்ள அவர் நினைவால், தமிழ் எழுத்தாளர்களுக்கு ஆண்டுதோறும் கிஷன்சந்த் ரொக்கப் பரிசு கொடுக்க முடிவு செய்து இருக்கிறார்.

இந்த ஆண்டு முதல் இது அமுலுக்கு வருகிறது.

**தங்கமான மனைவி**

கிஷன்சந்த் சோர்டியாவின் மனைவி பெயர், கஞ்சன்பாய். கஞ்சன் என்றால் இந்தியில் 'தங்கம்' என்று அர்த்தம்.

ஜெயந்தி, கலாகுமாரி, சங்கீதா என்று மூன்று மகள்கள். கபூர்சந்த், மகாவீர்சந்த் என்று 2 மகன்கள்.

**வீட்டு நிர்வாகம்**

மகள்கள் இருவரும் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு நிறுத்தி விட்டார்கள். இருவருக்கும் சமையல் கலை, வீட்டு அலங்காரம், நிர்வாகம், டைப்ரைட்டிங் மற்றும் வாழ்க்கைக்குத் தேவையான நடைமுறைக் கல்வியைக் கற்றுத் தந்து இருக்கிறார்.

ஜெயந்தி நன்றாக ஓவியம் வரைகிறார். குண்டூசியைக் கொண்டு அவர் வரைந்துள்ள சாமிப்படங்கள் மனத்தைக் கவர்கின்றன.

ஜெயந்திக்கு ஜனவரியில் திருமணம் நிச்சயிக்கப்பட்டு இருக்கிறது.

"எனக்குக் கோபமே வராது. எதையும் ஆழ்ந்து செய்வேன். இதுதான் என் வெற்றிக்குக் காரணம். அந்த வெற்றியில் மகிழ்ச்சியைத் தருவது திருக்குறள் தான்" என்று சொல்கிறார், கிஷன்சந்த் சோர்டியா.

—தினத்தந்தி ஞாயிறு மலர், 2-9-'84.

# திருத்தம்

166 வது பக்கம் இறுதிவரிக்கு முன் வரியில் 'தன் 6 சகோதரிகளுக்கும்' என்பதனைத் 'தன் 7 சகோதரிகளுக்கும்' என்று திருத்திப் படிக்கவும்.

168 வது பக்கத்தில் 'தங்கமான மனைவி' என்ற உள் தலைப்பின் கீழ் 5 வது வரியில் 'கபூர் சந்த், மகாவீர்சந்த், என்று 2 மகன்கள்' என்பதனைக் 'கபூர்சந்த், மகாவீர்சந்த், மனோகர்ராஜ் என்று 3 மகன்கள்' என்று திருத்திப் படிக்கவும்.

அதே பக்கத்தில் 'வீட்டு நிர்வாகம்' என்ற உள் தலைப்பில் 9, 10 வது வரியில் 'ஜெயந்திக்கு ஜனவரியில் திருமணம் நிச்சயிக்கப்பட்டு இருக்கிறது' என்பதுடன், '3—2—1985 அன்று திருமணம் நடந்தேறியுள்ளது' என்று சேர்த்துப் படிக்கவும்.



தேசிங்கு வீரம் விளைவித்த செஞ்சியடங்கிய தென்னாற்காடு மாவட்டத்தில் உளுந்தூர்ப்பேட்டையில் 7 - 9 - 1947இல் **திரு. எஸ். கிருஷ்ணசந்த் சோர்டியா** பிறந்தார். தமிழ் நாட்டு நல்வழி நிலையம், இவருக்கு 'அறநெறிச் செல்வர்' என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்துள்ளது. இவர், ஜைன இயல் ஆய்வுக் கழகத்தின் பொதுச் செயலாளராகவும் பணியாற்றி வருகிறார். இந்த அமைப்பு, பதினைந்து லட்ச ரூபாயினைத் தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம் முதலிய மாநிலங்களில் வாழும் அறச் செல்வர்களிடமிருந்து திரட்டிச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஜைன இயல் துறை ஒன்று உருவாக வகை செய்திருக்கிறது. இந்திய மரக்கறி உணவுக் கழகம், பகவான் மகாவீர் அகிம்சா பிரச்சாரச் சங்கம், சென்னைப் பல்கலைக் கழக ஜைன இயல் பாடத்திட்டக்குழு முதலியவற்றோடு நெருங்கிய தொடர்புகொண்டு உழைத்து வருகிறார். இந்திய மரக்கறி உணவுக் கழகத்தின் பொருளாளர் என்ற முறையில் மேற்கு ஜெர்மனியில் நடைபெற்ற உலக மரக்கறி உணவுக் கழக மாநாட்டில் கலந்து கொண்டார். இங்கிலாந்து, ஆம்ஸ்டர்டாம், ஹேம்பர்க், பான், சுவிசர்லாந்து, பிரான்சு, இத்தாலி முதலிய நாடுகளுக்குச் சென்று வந்துள்ளார். இவரைத் தமிழறிஞர்கள் 'திருக்குறள் சேட்' என அழைப்பர்.

—சி. பா.

Wrapper Printed at Eskay Art Printers, Madras-600005.
Design by Thiru P. N. Anandan